# கல்கி

இணைப்புப் புத்தகத்தைக் கேட்டு வாங்குங்கள்

KALKI 12.12.99 ரூ. 4.50

சின்னத் திரை ஸ்பெஷல் – I

# சின்னத்திரையிலும் நம்பர் ஒன்!

# முதலில் டீவியைத் தாழ்வாகத்தான் நினைத்தேன்!





வம்பு தும்பு கிசுகிசுக்களில் சிக்காமல், என் வழி தனி வழி என்று திரையுலகில் கால் செஞ்சுரி போட்டுவிட்ட சிவகுமார், இன்று டீவி. சீரியலில் பிசி.

"அழுத்தமான கேரக்டராக இருக்க வேண்டும். படத்தில் ஏழெட்டு ரீல்களிலாவது வர வேண்டும். சும்மா ஓரிரு காட்சிகளில் வந்துவிட்டு, அப்புறம் போட்டோவுக்கு மாலை விழுந்து விடுகிற மாதிரியான பாத்திரம் ஏற்க எனக்கு ஆர்வமில்லை. எனவேதான், நான் டீவி. தொடர்களில் அதிக கவனம் செலுத்துகிறேன்" என்கிறார் சிவகுமார். இப்போது இரண்டு டீவி. சீரியல்களில் மட்டுமே நடிக்க ஒப்புக் கொண்டிருக்கிறேன். ஒன்றுக்கு, மாதத்தில் இருபது நாட்கள் கால்ஷீட், இன்னொன்றுக்கு ஏழு நாட்கள். ஞாயிற்றுக்கிழமைகளில் கட்டாய ஓய்வு. இரவு வெகுநேரம் கண் விழித்து நடிப்பதில்லை. வயதாகிக் கொண்டிருக்கிறதே! யோகா, உடற் பயிற்சி காரணமாக, பார்க்கிறவர்களுக்கு வயதாகி விட்டது தெரியவில்லை என்றாலும் கூட, என்னால் அதை உணர முடிகிறது" என்கிறார் வெளிப்படையாக.

"சினிமாவில் டாப்பில் இருந்தவர்கள், இன்னமும் கூட, டீவி. சீரியலில் நடிப்பதை ஒரு மாற்று குறைவாகத்தானே நினைக்கிறார்கள்! அந்த எண்ணம் உங்களுக்கும் இல்லையா?"

"சீரியலில் நடிக்க ஒப்புக் கொள்வதற்கு முன்பு அப்படி ஒரு எண்ணம் இருந்தது. அதற்கு என்ன காரணம் தெரியுமா? இன்று ஒரு ஹீரோ தெலுங்

கல்கி
இன்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் :
kalkiweekly@vsnl.com

குப் படங்களில் நடித்தால், ஸ்டார் வேல்யூ அதிகம். எல்லா மொழிகளிலும் சக்கைப் போடு போடுகிறார் என்கிறார்கள். ஆனால் நான் ஹீரோவாக நடிக்க ஆரம்பித்த கால கட்டத்தில், தமிழில் மார்க்கெட் அவுட், அது தான் தெலுங்குக்குப் போய் விட்டார்!' என்று பத்திரிகைகளில் எழுதுவார்கள்; சினிமா உலகிலும் பேசிக் கொள்வார்கள். எனவே தான், எனக்கும், டீவி சீரியலில் நடித்தால், மார்க்கெட் இல்லை என்று சொல்லி விடுவார்களோ என்று நினைத்தேன். எனவே சீரியல்களில் நடிக்கக் கூப்பிட்டபோது, பெரிய திரையில் சில்வர் ஜூபிலி படங்கள் கொடுத்த நாம் சின்னத் திரையில் தோன்றுவதா என்று மறுத்து விட்டேன்."

"அப்புறம் எப்படி மனம் மாறினீர்கள்?"

"நான் ஹீரோவாக நடித்த படங்கள் விற்பனை ஆவதில் சில சிக்கல்களைச் சந்திக்க நேரிட்டது. சட்டென்று குணச்சித்திரப் பாத்திரங்களை ஏற்றுக் கொள்ளலாம் என்றால், என்னை சத்யராஜுக்கும், விஜயகாந்துக்கும் அப்பாவாக ரசிகர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். 'அவர்களுக்கு அண்ணன் மாதிரி இருக்கீங்க நீங்க! செயற்கையாக, வயதைக் கூட்டிக் காட்டுகிறாற்போல மேக்-அப் போட்டு எல்லாப் படங்களிலும் நடித்தால் சரியாய் இருக்காது' என்றார்கள். அப்போதுதான் 'வளர்பிறை' என்ற டீவி தொடரில் நடிக்கக் கூப்பிட்டார்கள். ரொம்பவும் பவர்ஃபுல்லான கேரக்டர். அதையும் பண்ணிப் பார்ப்போமே என்று தோன்றியது. ஒப்புக் கொண்டேன். தொடர் ஆறே வாரங்கள்தான் ஒளிபரப்பானது என்றாலும், ரொம்ப புத்திசாலியான, பிறவிக்குருடான, வக்கீல் கேரக்டரில் நடித்த எனக்கு ஏகப்பட்ட பாராட்டு! அதுதான், சின்னத் திரை பற்றிய சற்றே தாழ்வான எண்ணத்தை மாற்றியது.

"அடுத்து, 'எத்தனை மனிதர்கள்' என்ற மெகா தொடர். சினிமாவை விட டெலிவிஷனின் வீச்சு பல மடங்கு என்று எனக்கு உணர்த்தியது. ஜெஜெ. டீவிக்காக எடுக்கப்பட்ட சுதந்தரப் போராட்டப் பின்னணி கொண்ட புனித பூமி தொடரில், பிரமாதமான முஸ்லிம் பெரியவர் கேரக்டர் எனக்கு ஏறத்தாழ. அந்தக் காலத்தில் சினிமாக்களில் சிவாஜிக்குக் கொடுப்பார்களே அது போல நடிப்பதற்கு நல்ல ஸ்கோப் உள்ள கேரக்டர்கள் எனக்குத் தரப் படுகின்றன. சந்தோஷமாக நடிக்கிறேன். நிம்மதியாக இருக்கிறது வாழ்க்கை."

சந்திப்பு : **மௌலி**

# கட்சிக்காரர்களைக் கலங்க வைக்கும் மாறன்!

● சமீபத்தில் வட சென்னை மாவட்ட தி.மு.க. செயல்மறவர்கள் கூட்டம் நடந்தது. சரியாக ஆறு மணிக்கு மேயர் ஸ்டாலின் வந்து விட்டார். அவர் மேடைக்கு வந்தபோது அரங்கில் முப்பதே மறவர்கள்தான் இருந்தனர். அப்செட்டாகிப் போனார் மேயர். "சட்ட மன்றத் தேர்தல் வரப் போகிறது; இப்படியொரு 'உற்சாகம்' செயல் மறவர்கள் மத்தியில் இருந்தால், தேர்தலை எப்படிச் சந்திப்பது?" என்று மாவட்டச் செயலாளர் பலராமனுக்கு டோஸ் விட்டார் ஸ்டாலின். கூட்டத்தை முடிக்கும்போது, அரங்கில் நானூறுக்கும் குறைவானவர்களே இருந்தனர். 'வர இருக்கும் கட்சித் தேர்தலில் பலராமனை கட்சி கைவிட்டு விட வேண்டும்' என்று பலமாக முணுமுணுத்துக் கொண்டே மறவர்கள் கலைந்தனர்.

● தேர்தல் தோல்வி குறித்துத் தொகுதி வாரியாக ஆய்வு செய்துவிட்டு வந்த ஐவர் குழு, கலைஞரிடம் தனது அறிக்கையைக் கொடுத்து விட்டது. தோற்ற தொகுதிகளைச் சேர்ந்த கட்சிப் பிரமுகர்கள், 'தோல்விக்குக் காரணம் கூட்டணிக் கட்சிகள் காலை வாரி விட்டது'தான் என்று அறிக்கை கொடுக்குமாறு குழுவினரை 'அன்பாக' வற்புறுத்தினாலும் உள்ளதை உள்ளபடியாகவே அறிக்கை கொடுத்திருக்கிறதாம் குழு. அறிவாலயத்தில் மூன்று மணி நேரம் குழுவினரின் கருத்துக்களைக் கேட்டார் முதல்வர். கட்சியின் அமைப்பு முறையில் சில மாறு

# காதில் விழுந்தவை :

தல்களையும் செய்யலாம் என்று யோசனை சொல்லியிருக்கிறார்களாம்.

கோட்டையிலிருந்து கீழே வட்டம் வரை ஆட்சிக்கும் கட்சிக்கும் இணக்கமான உறவுமுறை இருக்க வேண்டும் என்பதும் கட்சிப் பிரமுகர்களின் விருப்பமாக இருக்கிறதாம். குறிப்பாக சட்டமன்ற உறுப்பினர்களாக இருந்து கொண்டு ஒன்றியச் செயலாளராக இருப்பவர்களும், அமைச்சர்களாக இருந்து கொண்டு மாவட்டச் செயலாளராக இருப்பவர்களும், கட்சிப் பதவியை விட்டு விட வேண்டும் என்று நடக்க இருக்கும் பொதுக்குழுவின் போது அறிவிப்பு வரலாம் என்கிறார்கள். காரணம் கட்சிப் பணி செய்ய அவர்களுக்கு நேரமில்லாததுதானாம்.

உளவுத் துறை மூலம் பெறப்படும் தகவல்களை மட்டும் நம்பாமல், நடுநிலையான பிரமுகர்கள் மூலம் கட்சி மற்றும் ஆட்சியின் செயல்பாடுகளைப் பற்றிய கருத்தை அறியும் முயற்சியும் மேற்கொள்ளப்படுகிறதாம். இதற்கிடையில், வரும் சட்டமன்றத் தேர்தலில் அறுபது சதவீத இடங்கள் முப்பத்தைந்து வயதுக்குட்பட்ட இளைஞர்களுக்குத்தான் கொடுக்கப்பட வேண்டுமென்று மாறன் சொல்லி வருகிறாராம். பொதுக்குழு, செயற்குழு போன்றவற்றில் மனம் விட்டுப் பேசி, எல்லோரையும் கலக்கும் மாறன் இந்தப் பொதுக் குழுவில் யாரை ஒரு பிடி பிடிக்கப் போகிறாரோ என்று கலங்கிக் கொண்டிருக்கிறார்கள் கட்சிப் பிரமுகர்கள்.

● இப்போது பரபரப்பை உண்டாக்கிக் கொண்டிருப்பது கேபிள் டீவி. சமாசாரங்கள்தான். சன் தொலைக்காட்சி நிறுவனம் கேபிள் அமைப்புகளை தன் குடையின் கீழ் கொண்டு வர யத்தனித்து இருக்கும் இன்றைய சூழ்நிலையில், சில கேபிள் பிரமுகர்கள் அவசரப்பட்டு ஜெயலலிதாவைச் சந்தித்தனர். அந்தச் சந்திப்புக்கு அடுத்த நாள் கேபிள் பிரமுகர் 'கிஷோர்' என்பவரது வீட்டில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த கார் அடையாளம் தெரியாத சிலரால் தாக்கப்பட்டது. கண்ணாடிகள் உடைக்கப்பட்டன. போலீஸில் புகார் செய்யலாம் என்று போனால், புகாரைப் பதிவு செய்யாமல் முதலில் தட்டிக்கழித்ததாம் போலீஸ். இப்போது கிஷோர் சன் தொலைக்காட்சியின் முயற்சிக்கு முழு ஆதரவு தெரிவித்து விட்டாராம். 'இப்படியொரு சம்பவம் நடக்கவே இல்லை' என்று கூட நமக்கு மறுப்பு வரலாம்.

● ஜெயில் சம்பவங்களை சிறப்பாக கவர் செய்ததற்காக ஜெயா தொலைக்காட்சி செய்திப் பிரிவு ஊழியர்களுக்கு ஊக்கத் தொகை



கொடுத்து சந்தோஷப்பட்டாராம் மேடம். (மேடம் : தினகரனின் மனைவி அனுதான் ஜெயா டீ.வி.யைப் பொறுத்தவரை மேடம்.)

— சஞ்சயன்

# "புருஷன் வந்துடுவாரு... கிளம்பணும்!"

தென்மத்திய தமிழக பெண்கள் கூட்டமைப்பும் மனித உரிமை ஆணையமும் இணைந்து மதுரையில் 'வன்முறையற்ற நூற்றாண்டை நோக்கி' என்ற தலைப்பில் கருத்தரங்கமும் பேரணியும் நடத்தின. பெண்களாகக் கூடுகிறார்களே... என்னதான் நடக்கிறது என்று பார்க்கப் போனோம்...

'தென் மத்திய தமிழக பெண்கள் கூட்டமைப்பின்' 'நதி மூலம் ரிஷி மூலம்...' ஆராய்ந்தபோது எட்டு பெண்கள் அமைப்புகள் ஒன்று சேர்ந்ததால் பிறந்தது என்றார்கள். வெளிநாட்டில் ஒரு பெண்ணுக்கு நடந்த கொடுமையைத் தட்டி கேட்கச் சென்றபோது உண்டான எழுச்சியில், இந்தக் கூட்டமைப்புக்கு இங்கே முழு வடிவம் பிறக்க... புறப்பட்டு விட்டார்கள் 'வன்முறையற்ற நூற்றாண்டை நோக்கி...'

''பெண்கள் உரிமையும் மனித உரிமையே... அரசியலில் பெண்கள் அன்றும், இன்றும், பணிபுரியும் இடங்களில் பாலியல் வன்முறை, செய்தி - தொடர்புச் சாதனங்களில் பெண்களின் நிலை, பொது இடங்களில் பெண்களின் நிலை' என்ற தலைப்புகளில் கருத்துரை

# கேபிள் டி.வி.யில் முதல்'வன்முறை'

கேபிள் டி.வி.களின் புண்ணியத்தால் முதல்வன் முதல்(போன)வனாக மாறிய கூத்து நடந்தது மதுரையில்...

''எங்களைப் பத்தி எடுத்த படத்தை ஏன் மக்கள் கஷ்டப்பட்டு கூட்ட நெரிசல்ல சிக்கி காசு கொடுத்துப் பார்க்கணும்... அதான் ஊட்டுக்கு ஊடு முதல்வனை நகர்வலம் வுட்டோம்'' என்கிறார்கள் உடன்பிறப்புகள்.

யாரிடமாவது இதுபற்றிக் கேட்டால் போட்டோ வேண்டாம், டேப் பண்ண வேண்டாம். என்ற முன்னேற்பாட்டு உரையுடன், ''நாங்களும் படம் பார்த்தோம். ஆனா இப்பத்தான் இந்த முதல்வன் படத்தைத் தியேட்டரில் போய்ப் பார்க்கணும்கிற ஆசையே வருது'' என்று நெகட்டிவ் பாய்ண்டை பாசிட்டிவாக சொல்கிறார்கள்

என்ன இருந்தாலும் ஆறேழு முறை கேபிளில் உலாவிட்டதால் பெண்கள் கூட்டம் முதல்வன் திரையிடப் பட்டுள்ள மூன்று திரையரங்குகளிலும் காணோம். இதுபற்றிக் கேட்டால் அர்ஜுன் ரசிகர்கள், ''வாலி படத்துக்குக் கூட பெண்கள் கூட்டம் வரலை. ஆனா படம் சூப்பர்ஹிட்தானே... நிச்சயம் முதல்வனும் வெற்றி பெறுவான்'' என்கிறார்கள் நம்பிக்கையாக!

அர்ஜுன் ரசிகர்கள் மதுரையில் ஆள் நடமாட்டமில்லாத பகுதிகளில் பயந்து பயந்து நாலஞ்சு போஸ்டர் அடித்து ஒட்டிய (ஒதுங்கிய?) தோடு சரி.

மூவேந்தர் முன்னேற்றக் கழக நிறுவனர் டாக்டர் சேதுராமன் அனைத்துக் கட்சியினரையும் கூட்டி (அ.தி.மு.க., காங்., மாதிரி கட்சிகள்) முதல்வனை கேபிளில் காட்டியதற்கு எதிர்ப்புத் தெரிவித்தார்.

சொத்து முழுவதையும் 'முதல்வன்' படத்துக்கு முதலீடு செய்த விநியோகஸ்தர

களை வழங்கினார்கள்.

இந்தக் கூட்டமைப்பின் முக்கிய நோக்கம் கிராமப்புறங்களிலுள்ள பெண்களின் அறியாமையைப் போக்கி விழிப்புணர்வை ஏற்படுத்துவது.

பெண்களின் கூட்டமைப்புக் கூட்டம் என்பதாலோ என்னவோ



• பெண்கள் கூட்டத்தில் ஒரு பகுதி: ஆண்களுக்கு இத்தனை எதிர்ப்பா?



• நாடகத்தின் மூலம் பெண்கள் விழிப்புணர்ச்சி

வாழ்த்துரை வழங்க வேண்டிய மதுரை கலெக்டர் தங்கவேல் நன்றியுரைக்கு வந்தார்.

கூட்டத்தில் மருந்துக்குக்கூட ஆண்களைக் காணோம். புகைப்படக்காரர்கூட ''காரி''தான். எல்லாமே பெண்கள்... பெண்கள்... பெண்கள்தான். ஒரு சில பெண்கள், ''அக்கா அவரு அஞ்சு மணிக்கு வந்துடுவாரு... சீக்கிரமா உரிமைகளைப் பேசிட்டு வூடு போய்ச் சேரணும்'' என்று வீட்டுக்குக் கிளம்பியதன் காரணமாக, மாலையில் நடந்த பேரணியில் கூட்டம் ரொம்பக் கம்மி.

பெண்கள் உரிமைகளைப் பெண்களுக்குச் சொல்வதைக் காட்டிலும் ஆண்களுக்கல்லவா அதிகம் சொல்ல வேண்டும்.

— வியூவ்ஸ் நியூஸ்

படங்கள்:
எம். பாலமுருகன்

களைக் கேட்டால் எதுவும் கேட்காதீர்கள் என்று சொல்லி நகர்ந்து விடுகிறார்கள்.

'நேருக்கு நேர்' சந்திக்க விரும்பாத திரையரங்க மானேஜர் ஒருவரை கிரகாம்பெல்லின் கண்டு பிடிப்பில் பிடித்தபோது அவர் பிடிபிடியென்று பிடித்தார். ''ஒரு பத்துப் பேரு வந்து தியேட்டரை தீ வச்சுட்டுப் போனாத்தான் சும்மா இருப்பீங்க. தயவு செஞ்சு தொல்லை செய்யாம இருங்க... முதல் போட்ட நாங்களே சும்மா இருக்கோம்... உங்களுக்கு என்ன நடந்தா என்ன? நீங்க நல்லது செய்யணும்னு நினைச்சா இதை அச்சுல ஏத்தாம விடுங்க. அது போதும். 'முதல்வன்' கேபிள் டி.வி.யில் போடுற விஷயம் உங்களை மாதிரி ஆட்களாலதான் பொது மக்களுக்கே தெரியுது. தெரியாதவனும் தெரிஞ்சுக்கிறதாலதான் தியேட்டருக்கு வரமாட்டேங்கிறான். வைங்க...''

மதுரை முழுக்க முதல்வன் பற்றியே பேச்சாக இருப்பதால், விளம்பரங்கள் செய்யாத விளம்பரத்தை கேபிள் டி.வி. பிரச்னை செய்து விட்டது. ஷங்கருக்கு 'வெற்றிதான்... தியேட்டர்காரர்களுக்கும் விநியோகஸ்தர்களுக்கும்?

'ஹை- புரொபைல்! ஹுஸைனி எல்லாப் படத்துக்கும், திருட்டு வீடியோவைப் பிடித்துக் கொடுத்தால் 1000 ரூபாய் பரிசு' என்று கறுப்பு எழுத்தில் பெருசு பெருசா போஸ்டர் ஒட்டுவார். முதல்வன் படத்துக்கு போஸ்டரும் ஒட்டவில்லை. பெருசுகள் சம்பந்தப்பட்டிருப்பதால் 'துப்பாக்கி' பம்மாத்துக்களையும் காட்டவில்லை.

150 நாட்களுக்கு மேல் ஆகியும் 'படையப்பா' கேபிளில் வரவில்லை. ஆனால் முதல்வன் வந்து 150 மணி நேரம் கூட ஆகாமல் கடகட கேபிளில் வர என்ன காரணம் என்று நாம் கேட்டதற்கு ஒரு கேபிள் டி.வி. ஆபரேட்டர் சொன்னது : ''அது 'முதல்வர்' படம். இது 'முதல்வன்' படம்.''

— வியூவ்ஸ் நியூஸ்




பட்டேல் முன்பு ஒரு 'மெக்கானிக்'காக வேலை செய்து கொண்டிருந்தார். சிறையில், தன் சொந்த முயற்சியால் தாமே ஒரு சப்பாத்தி செய்யும் 'மெஷின்' தயாரித்துள்ளார். இதன் மூலம் 4 மணி நேரத்தில் சுமார் 8000 சப்பாத்தி செய்ய முடிகிறது.

சிறையில், பக்கோடா, ரொட்டி, பிஸ்கோத்து, தேயிலைத் தூள், காலணிகள், படுக்கை விரிப்புகள் போன்ற

# ஆயுள் கைதிகளின் அபார சாதனை!

சமீபத்தில் சென்னை மத்திய சிறைச்சாலையில் நடந்த கலவரமும், அதனால் நேர்ந்த உயிர்ச்சேதமும் அனைவருக்கும் நினைவிருக்கும்.

அதே சமயத்தில் குஜராத் மாநிலத்தில், அகமதாபாத்தில் உள்ள 'சாபர்மதி' சிறைச்சாலையில் கைதிகளாகவும், ஆயுட் கைதிகளாகவும் உள்ளவர்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்று பார்ப்போம்.

இந்தச் சிறைச்சாலையில் ஆயுள் தண்டனை அனுபவிக்கும் கைதிகள் சுமார் 35 பேர். மொத்த கைதிகளில் சுமார் 60 பேர் பெண்கள்.

சிறைச்சாலைக் கைதிகளில் 300 பேர் 'ஷிப்ட்' வேலையில் சிறைச்சாலையில் சமையல் வேலையைக் கவனித்துக் கொள்கிறார்கள். காலையில் 4 மணிக்கு எழுந்து காய்கறி நறுக்குவது, சப்பாத்திக்கு மாவு பிசைவது போன்ற வேலைகளில் தொடங்கி, சுமார் 11 மணியளவில் சமையல் வேலையை முடித்து விடுகின்றனர்.

அகமதாபாத் சிறையில் ஆயுள் கைதியாக உள்ள 35 வயதான ராம்ஜீ

பொருள்களும் தயாரிக்கப்படுகின்றன. இவை சிறைக்கு வெளியே கடைகளில் பொதுமக்களுக்கு விற்கப்படுகின்றன. வாய்க்கு ருசியான தின்பண்டங்களை வாங்க மக்கள் தினமும் 'கியூ'வில் நிற்கின்றனர்.

இங்கு செய்யப்படும் தின்பண்டங்கள், ரொட்டி முதலியவை மட்டும் ஆண்டு ஒன்றுக்கு ரு 65 லட்சம் திரட்டித் தருகின்றன. சென்ற ஆண்டு மட்டும் சிறையில் தயாரிக்கப்பட்ட செருப்பு, 'ஷூ'க்கள், பைகள், படுக்கை விரிப்புகள், தேயிலை, கூடாரங்கள், விற்பனையில் ரூ. 3.5 கோடியை எட்டியதாகச் சிறைச்சாலை நிர்வாகிகள் கூறுகின்றனர்.

சிறைச்சாலை தயாரிப்புகள், குறிப்பாக தின்பண்டங்களும், சில குறிப்பிட்ட பொருள்களும், குஜராத்தின் தலைநகரான 'காந்தி நகரி'ல், அமைச்சர்களுக்கும், மற்ற அரசு ஊழியர்களுக்கும் குறைந்த விலையில் கிடைக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது!

— அகமதாபாத் பாண்டு

ஆதாரம் : 'டைம்ஸ் ஆப் இந்தியா'

பத்து நிமிஷம் டீ.வி.யில் தோன்றி தமிழக அரசியலின் போக்கையே மாற்றியவர் ரஜினி. அவர் படமோ நிகழ்ச்சியோ இடம்பெற்றால்



அந்த சானலின் டி.ஆர்.பி. ரேடிங் விலைவாசி வேகத்தில் உயர்கிறது! வெள்ளித் திரை போல் சின்னத் திரையிலும் நம்பர் ஒன்னாக விளங்குவது சூப்பர் ஸ்டார்தான். திரையுலகில் வெள்ளி விழா காணும் அவரைப் பற்றிய சிறப்புக் கட்டுரை.

EXCLUSIVE!

# பண்பில் இமயம்!

எவி.எம். சரவணன்

ரோட்டரி கிளப்பில் ஒரு மாநாட்டுக்கு, ரஜினியைப் பேச அழைத்திருந்தார்கள். அங்கே வந்திருந்தவர்களுக்கு, ரஜினி என்ன பேசப் போகிறார் என்பதை விட, அவரைக் கிட்டே பார்க்கும் ஆர்வம்தான் அதிகமாக இருந்தது. ரஜினி பேச ஆரம்பித்தார். "அமெரிக்காவுக்குப் போய் ஜாலியா இருக்கணும்னா, உங்ககிட்டே இருக்கிற ரூபாயை, டாலரா மாத்தி

• பிறந்த நாளின் போது...



எடுத்துக்கிட்டுப் போகணும். லண்டன் போய் சந்தோஷமா இருக்கணும்னா, ரூபாயை, பவுண்டா மாத்தி எடுத்துக்கிட்டுப் போகணும். ஜப்பான் போகணும்னா, 'யென்'னா மாத்தி எடுத்துக் கிட்டுப் போகணும்... ஆனால், ஒரு இடத்துக்குப் போய் நிம்மதியா, சந்தோஷமா இருக்கணும்னா உங்ககிட்ட இருக்கிற ரூபாய் பயன்படாது. அதுக்கு நீங்க நிறைய சேர்க்கணும். பணம், காசு இல்லை. புண்ணியம். உங்களோட உழைப்பால, நினைப்பால, செயலால புண்ணியம் சேர்க்கணும். அந்த இடம்தான் நாம் எல்லோரும் கடைசியில போய்ச் சேருகிற இடம்" என்று சொல்லி, கையை மேலே காட்டினார். "அங்கே போய் நாம் நிம்மதியா இருக்கணும்னா நாம இங்கே சேர்க்கிற புண்ணியம்தான் பாஸ்போர்ட், விசா, எக்ஸ்சேஞ்ச் எல்லாமே!" என்று ரஜினி பேசி

முடித்தவுடன் ஒரே கிளாப்ஸ்!

சாதாரண கண்டக்டராக வாழ்க்கையை ஆரம்பித்து, சினிமா நடிகராகப் புகழ்பெற்றிருக்கும் ரஜினியிடமிருந்து, இப்படி ஒரு பேச்சை எதிர்பார்க்கவே இல்லை! எவ்வளவு பெரிய விஷயத்தை, எத்தனை சிம்பிளாகச் சொல்லி விட்டார்!' என்று பல சீனியர் ரோடேரியன்களே வியந்தார்கள்.

இப்போதெல்லாம் இத்தனை பிரமாதமாகப் பேசுகிற ரஜினி, ஆரம்பத்தில் பொது நிகழ்ச்சிகளில் பேசவே கூச்சப்பட்டு, மறுத்து விடுவார். எங்கள் தயாரிப்பான போக்கிரி ராஜா படத்தின் வெற்றி விழாவில் அவர் பேச வேண்டும் என்று முன்கூட்டியே சொன்ன போது, தயங்கி மறுத்து விட்டார். இயக்குனர் எஸ்.பி. முத்துராமன்தான் அவரிடம், "பயப்படாதீங்க. நீங்கள் என்ன பேச வேண்டும் என்று நான் பேப்பரில் எழுதிக் கொடுத்து விடுகிறேன். அதை அப்படியே மேடையில் படித்து விடுங்கள்" என்று தைரிய மூட்டி ரஜினியை ஒப்புக் கொள்ளச் செய்தார்.

நிகழ்ச்சியின் போது, எழுதிக் கொடுத்த பேச்சை ஒரு ஐந்து நிமிடத்துக்குப் படித்திருப்பார். அவ்வளவுதான். அதன்பின், பேச்சு எழுதப்பட்ட பேப்பரை மடித்து பாக்கெட்டில் வைத்துக் கொண்டு, தாமே தம்மிச்சையாகப் பேச ஆரம்பித்து விட்டார். இப்போது கூட சாதாரண ஆளான என்னை, மேடைப் பேச்சாளனாக்கியவர்கள் எஸ்.பி. முத்துராமனும், ஏவி.எம். சரவணனும்தான் என்று தமாஷாகத் தவறாமல் குறிப்பிடுவார் ரஜினி!

சுமார் இருபது வருடங்களாக எனக்கு ரஜினியுடன் பழக்கம். அவர் எதையுமே வெளிப்படையாகப் பேசி விடுபவர். "நான் உண்மையே பேசிப் பழகி விட்டேன்; இந்தப் பணம், புகழ், பேர் வந்திட்டா, பொய் பேச வேண்டிய நிலைமையும் வந்திடும். சாப்பாட்டுக்கே வழியில்லாது கஷ்டப்பட்ட காலத்திலேயே உண்மை பேசி விட்டு, வசதியான வாழ்க்கை அமைந்தபின், இப்போது, பொய் பேச மனத்துக்குப் பிடிக்கவில்லை. இனிமே வாழப் போவது கொஞ்ச நாள். அதுவரைக்கும் பொய் பேசாமலேயே இருந்து விடலாமேன்னு தோன்றுகிறது'' என்று என்னிடம் அவர் கூறியதுண்டு.

அது மட்டுமில்லை. வழக்கமாக, சினிமா உலகில் எல்லாருமே, கால்ஷீட் விஷயங்களை கவனித்துக் கொள்ள ஒரு உதவியாளரை வைத்துக் கொண்டிருப்பார்கள். விருப்பம் இல்லாத விஷயங்களைத் தட்டிக் கழிக்கவும், தவறு நேர்ந்து விட்டால் பழியைப் போட்டு விட்டு நழுவவும், அந்த உதவியாளரைப் பயன்படுத்திக் கொள்வார்கள். ஆனால் ரஜினி இந்த விஷயத்தில் நேர் எதிர். மற்ற விஷயங்களைக் கவனித்துக் கொள்ள உதவியாளர்கள் இருந்தாலும், கால்ஷீட் விஷயத்தைத் தாமே நேரடியாக கவனித்துக் கொள்வார். ஒரு தயாரிப்பாளருக்கு தேதிகளை முடிவு செய்து விட்டால், தாமே அதைக் கைப்பட எழுதி, கையெழுத்திட்டு சம்பந்தப்பட்டவரிடம் கொடுத்து விடுவார். எக்காரணம் கொண்டும், கொடுத்த தேதியை மாற்ற மாட்டார். வேறு யாராவது, அந்த தேதிகளில் அட்ஜஸ்ட் செய்து ஓரிரு நாட்கள் கால்ஷீட் கேட்டால் கூட, சம்பந்தப்பட்டவரிடம் 'தயாரிப்பாளர், டைரக்டரிடம் நேரடியாக நீங்களே பேசிக் கொள்ளுங்கள்' என்று சொல்லி விடுவாரே தவிர, தாம் தலையிட்டு, தர்மசங்கடம் ஏற்படுத்த மாட்டார்.

அடுத்தவர் மனம் நோகும்படி எதுவும் செய்து விடக் கூடாது என்பது அவரது பாலிசி. எங்களது முரட்டுக்காளை படத்தில், ஜெய்சங்கர் வில்லனாக அறிமுகப் படுத்தப்பட்டார். அந்தப் படத்தின் ஹீரோவான ரஜினி, "நூற்றைம்பது படங்களில் ஹீரோவாக நடித்த ஜெய் சார் இதில் வில்லன். படத்தின் விளம்பரங்களில், அவர் வில்லன் என்பதால், அவருக்குரிய முக்கியத்துவத்தைக் கொஞ்சமும் குறைத்து விடாதீர்கள். எனக்கு இணையான முக்கியத்துவத்தை அவருக்கும் கொடுங்கள்'' என்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டார்.

டைரக்டர் எஸ்.பி. முத்துராமனுக்கு ரஜினி பல வருட நெருக்கம். அதன் காரணமாக, எஸ்.பி.எம்., ரஜினியை உரிமையுடன் ரஜினியை, நீ... என்றே குறிப்பிட்டுப் பேசுவார். ஆனால் ரஜினி, அவரை முத்துராமன் சார் என்றுதான் அழைப்பார். அது மட்டுமில்லை. ரஜினி தம் உதவியாளர்களைக் கூட மரியாதையுடன் நீங்க... வாங்க... என்றே பேசுவார். அவ்வளவு ஏன்? ரஜினி அவுட்டோர் ஷூட்டிங்கின் போது, இரவு சாப்பிட்ட பிறகு, தாம் சாப்பிட்ட தட்டை தாமே கழுவி, தம் அறைக்கு வெளியே வைத்து விடுவாராம்!

வீண் வம்பு பேசுவது என்பது ரஜினியிடம் சுத்தமாகக் கிடையாது. வேறு இரண்டு பேர் வீண் கதை பேசிக் கொண்

டிருக்கும் இடத்தில் ரஜினி இருக்க நேரிட்டால் கூட, தம் கண்களை மூடியபடி அமர்ந்து கொண்டிருப்பாரே தவிர அவர்களது அரட்டையில் கலந்து கொள்ள மாட்டார். (இந்தப் பழக்கத்தை நான் என்.டி. ராமாராவிடம் பார்த்திருக்கிறேன்.) அதே நேரம் ரஜினி கலகலப்பானவர்தான். எல்லோரிடமும் பந்தா இல்லாமல் பழகுவார்.

**எ**ங்கள் தயாரிப்பான சகலகலா வல்லவன் படத்தில் கமலுடைய சண்டைக் காட்சி ஒன்றில், ஓர் இடத்தில், சுவரில் ஒட்டப்பட்ட எம்.ஜி.ஆர். படப் போஸ்டர் வரும். அந்தக் குறிப்பிட்ட காட்சியின் போது, தியேட்டர்களில் ரசிகர்களின் கைத்தட்டலும், விசிலும் அதிகமாக இருக்கும். அந்தக் காட்சிக்குக் கிடைத்த அதிகப்படியான வரவேற்பைப் பார்த்து விட்டு, நாங்கள், ரஜினியை வைத்துப் பாயும் புலி படம் எடுத்த போதும், ஒரு சண்டைக் காட்சியின் போது, சுவரில் எம்.ஜி.ஆர். படப் போஸ்டர் வரும்படி செய்திருந்தோம். ஆனால், அந்தக் காட்சியைப் படம்பிடித்தபோது ரஜினி, சுவரில் இருந்த எம்.ஜி.ஆர். படப் போஸ்டரை எடுக்கச் சொல்லி விட்டார். நாங்கள் அந்த போஸ்டர் எதற்காக என்று விளக்கிய போதும், கண்டிப்பாக அதனை எடுக்கச் சொல்லி விட்டார். அதற்கு அவர் சொன்ன காரணம் : "என்னைப் பார்க்க விரும்புகிறவர்கள் என் படத்துக்கு வர வேண்டும். எம்.ஜி.ஆர். என்ற பெரிய மனிதரின் புகழைப் பயன்படுத்தி எனக்குப் பாராட்டு கிடைக்கும்படி செய்வது நியாயமில்லை." ரஜினியின் கருத்துப்படியே எம்.ஜி.ஆர். போஸ்டர் அகற்றப்பட்டது.

**ம**றைந்த தொழிலதிபர் எம்.வி. அருணாசலத்துடன் மும்பையிலிருந்து ஒன்றாக விமானத்தில் சென்னை வந்தபோது இருவரும் பேசிக் கொண்டே வந்தோம். திடீரென்று அவர், "நீங்கள் ரஜினிகாந்துக்கு ரொம்ப நெருக்கமானவர்தானே? நீங்கள் சொன்னால் அவர் நிச்சயம் கேட்பார். அவரை அரசியலுக்கு வரச் சொல்லுங்கள்" என்றார்.

அவர் இப்படிச் சொன்னது எனக்கு மிகவும் ஆச்சரியமாக இருந்தது. "அவர் ரொம்ப நல்ல மனிதர். அவருடைய மனப்போக்குக்கு பாலிடிக்ஸ் ஒத்து வராது" என்றேன்.

"இன்னிக்கு நம்ம நாட்டு அரசியலுக்கு நல்லவர்கள் வரணும். அவர்கள் வல்லவர்களாக இருக்கணும்னு அவசியமில்லை. வல்லவர்களின் ஆலோசனைகளைக் கேட்டுக் கொண்டு, நல்லவர்களால் சிறப்பான ஆட்சியைத் தரமுடியும்" என்றார்.

அவரது யோசனை நன்றாக இருப்பதாகப் பாராட்டினாலும், ரஜினிக்கு நேரடியாக அரசியலில் ஈடுபடும் எண்ணம் அந்தச் சமயம் துளியும் இல்லை என்பதை அவருக்குத் தெளிவுபடுத்தினேன்.

**த**மிழ்நாட்டில் நடந்த ஆட்சி மாற்றத்துக்கு (1996) ரஜினி எந்த அளவுக்குக் காரணம் என்பதை நாடே அறியும். ஆனாலும் கூட, கலைஞர் முதலமைச்சர் ஆனவுடன், அவரைச் சந்தித்த போது, 'என் பெயரைப் பயன்படுத்திக் கொண்டு, அதைச் செய்து கொடுங்கள்; இதைச் செய்யுங்கள் என்று சொல்லிக் கொண்டு யாரும் வரக்கூடாது என்று என் சம்பந்தப்பட்ட அனைவரிடமும் சொல்லி இருக்கிறேன். அப்படியே யாராவது வந்தாலும் நீங்கள் நம்ப வேண்டாம்' என்று தெளிவுபடுத்தியதாக ரஜினியே என்னிடம் சொன்னபோது, இப்படியும் ஒரு மனிதரா? என்று வியந்து போனேன்.

ரஜினி அடிக்கடி இமயமலைக்குப் போய் வருவது எல்லாருக்கும் தெரியும். அவர் பண்பிலும் இமயம்தான்!

தொகுப்பு : **எஸ். சந்திரமௌலி**

## திருச்சி வாசகர்களே, நினைவு படுத்துகிறோம்!

**வரும் 15, 16, 17 தேதிகளில் நாங்கள் திருச்சிக்கு வருகிறோம். நீங்கள் அனுப்பும் கடிதங்களின் பேரில்தான் நகரைச் சுற்றிப் பார்த்து, பிரச்னைகளை ஆராய்ந்து, சம்பந்தப்பட்டவர்களைப் பேட்டி கண்டு எழுதப் போகிறோம்.**

**கடைசி தேதி : 13.12.99**

***உடனே எழுதுங்கள்!***

***– ஆசிரியர்***

# ஒரு EXCLUSIVE கலாட்டா ஷோ!


• ராம்ஜி

**அபஸ்வரம் ராம்ஜியின் டாக்–ஷோ ஒன்று சமீபத்தில் ராஜ் டி.வி ஸ்டுடியோவில் நடந்தது. சிரிப்பும் கலாட்டாவுமாக நடந்த இந்த பேச்சுக் கச்சேரிக்கு இரண்டு விசேஷங்கள்.**

**1) இந்த டாக்–ஷோவை எந்த டி.வியிலும் பார்க்க முடியாது. கல்கிக்காகப் பிரத்யேகமாக நடத்தப்பட்டது இது.**

**2) தொலைக்காட்சி நிகழ்ச்சித் தொகுப்பாளர்கள் மட்டுமே கலந்து கொண்டு பேசினார்கள்.**

*ராம்ஜி:* நீங்க எல்லாரும் டி.வில வர்றீங்க. உங்களை எல்லாருக்கும் தெரியும். ஆனா இப்படி எல்லாரும் இதுக்கு முன்னால் ஒண்ணா சேர்ந்திருக்கீங்களா?

*ப்ரதீபா:* இதுதான் சார் ஃபர்ஸ்ட் டைம். இப்படி அத்தனை காம்பியர்ஸும் ஒண்ணா கூடினதே இல்லை.

*ராம்ஜி:* ஓகே, ப்ரதீபா! நீ எப்படி இந்த தொகுப்பாளர் வேலைக்கு வந்தே?

*ப்ரதீபா:* நான் முதல்ல பாலசந்தரோட ஜன்னல் தொடர்ல எஸ்.பி.பிக்கு மகளா நடிச்சேன். அப்படியே கான்டாக்ட் டெவலப் ஆகி காம்பியராயிட்டேன். இப்ப வீடு வீடா போயி, பிடிச்ச பாட்டு கேட்டுப் போடறேன். ஒவ்வொரு வீட்டுல எவ்ளோ நல்லா பழகறாங்க தெரியுமா?

*ராம்ஜி:* அப்படியே வீட்டுப் பையன் சி.ஏ. படிச்சிருக்கானான்னு விசாரிச்சு, உங்க ஜாதகம் குடுத்துட்டு வர்றதா கேள்விப்பட்டேன்?

*ப்ரதீபா:* ஐயோ, சார், வாரறீங்களே!

*ராம்ஜி:* வெல்! ஏம்மா,


• ப்ரதீபா


• ப்ரவீணா


• அம்பிகா



ப்ரவீணா! நீதானே ரோடு ரோடா போயி மக்களைச் சந்திக்கறது?

**ப்ரவீணா:** ஆமா! அது என்னைப் பொறுத் தவரை செமை ஃபிளாப்! அது மட்டுமில்லை. நான் முதல் முதல்ல செய்த 'திரைக்குப் பின் னாலு'ம் படு மட்டம்.

**ராம்ஜி:** என்ன சொல்ற நீ? நீ மட்டமா, நிகழ்ச்சி மட்டமா?

**ப்ரவீணா:** என்னோட பர்ஃபாமென்ஸ் மட்டம்னு சொல்லவரேன். 'டாப் டென்' பண்ண ஆரம்பிச்சதும்தான் கொஞ் சம் நம்பிக்கையே வந்தது. காரணம் ஸ்கூல்ல, என்னோட செகண்ட் லாங்வேஜ், சமஸ்கிருதம். தமிழ் பேசுவேனே தவிர, நல்லா பேச றேனான்னு எனக்கே தெரியாது.

**ராம்ஜி:** நிகழ்ச்சிக்கு ஸ்கிரிப்ட் எழுதற ப்ரொட்யூசர்ஸ் நல்லா பழக்கிடுவாங்களே?

**ப்ரவீணா:** நீங்க வேற சார்! என் ப்ரொட்யூசர் ப்ரியன் நல்ல செந் தமிழ்ல, அழகா, பொயடிக்கா எழுதித் தருவார். என் வாய்லேயே நுழையாது. எக்ஸ்பிரஷன்? படு சுத்தம்.

**ராம்ஜி:** கஷ்டப்பட்டு மாத்திக் கிட்டியா?

**ப்ரவீணா:** சான்ஸே இல்லை. கஷ்டப்பட்டு ப்ரியன் சாரை மாத் திட்டேன்.

• உஷா



• கல்பனா



கீதா





• ரோஃபினா

*ராம்ஜி:* உங்கிட்ட வாய் குடுத்து, தப்பிக்க முடியுமா? ஆளை விடு. அம்பிகா, நீ சிரிக்கறதுக்கு மூக்கால அழறியாமே? பயங்கர கம்ப்ளெயிண்ட். தவிர, சினிமா அலர்ஜி வேறன்னு கேள்விப்பட்டேன்?

**அம்பிகா:** எனக்கு நல்லா சிரிக்க வரலைன்னு எல்லாருமே சொல்றாங்க சார். என்ன பண்றது? மாத்திக்கப் பார்க்கறேன். சினிமா பத்தி கேட்டீங்க இல்லை? நடிக்கறியான்னு சிலர் கேட்கறாங்க. வேணாம்னுட்டேன். எனக்குப் பிடிக்கலை.

*ராம்ஜி:* இப்ப பாரதி ராஜா தாஜ்மஹால் எடுத்தார். அதுல ரியாசென்னு ஒரு பொண்ணு நடிச்சது. செமை குள்ளம் அந்தப் பொண்ணு. ஷூட்டிங்ல பார்த்தேன். முதல்ல கார்லேருந்து இறங்குது. அப்புறம் ஷூலேருந்து இறங்குது. அப்புறம்தான் செட்டுக்குள்ள போவுது... (வெடிச் சிரிப்பு) அதே மாதிரி உனக்கொரு சான்ஸ். ஸே, பாரதிராஜாவே கூப்பிடறார். தாஜ் மஹாலைத் தொடர்ந்து 'ஜும்மா மசூதி'ன்னு எடுக்கறார்னு வெச்சிக்க.

**அம்பிகா:** சான்ஸே இல்லை சார். இதுக்கே காலேஜ்ல எக்கச்சக்கமா கமெண்ட் அடிக்கறாங்க. நடிப்பெல்லாம் வரமாட்டேங்குது.

*ராம்ஜி:* அப்ப மாடலிங் பண்ணலாமே?

**அம்பிகா:** அது நல்ல ஐடியா. வெரைட்டியா செஞ்சா நல்லாருக்கும்.

*ராம்ஜி:* அடேங்கப்பா! உஷா, இவ்ளோ சின்னப் பொண்ணா இருக்கே? நீதான் ஜூனியர் மோஸ்டா?

**பிரவீணா:** 'வணக்கம்! எம் பேரு உஷா. நா இப்ப என்ன பண்ணப் போறேன், தெரியுமா...' என்று உஷா ஸ்டைலில் மிமிக்ரி செய்து காண்பிக்க, சங்கடமாகச் சிரிக்கிறார் உஷா.

**உஷா:** நான் என்ன சார் பண்ணுவேன்? இப்படிப் பேசுன்னு எழுதிக் கொடுத்து, செய்து காண்பிச்சுடறாங்க. அப்படித்தானே செய்ய வேண்டியிருக்கு? பாருங்க, நான் டென்த் படிக்கற பொண்ணு. சூப்பர் டாப் டென் ப்ரோக்ராம்ல எனக்கு மடிசாரெல்லாம் கட்டி நிக்க வெச்சிடறாங்க, ஒரே கலாட்டாவா இருக்கு!

*ராம்ஜி:* டென்த்தா? எப்படி வந்தே டீவிக்கு?

**உஷா:** முன்னாடி இருந்த ஜி.எஸ்.வி. டீவில மம்முட்டியை ஒரு இன்டர்வியூ பண்ண அழைச்சுட்டுப் போனாங்க. அதான் என்ட்ரி. அப்புறம் ஒழுங்கா ஸ்கூலுக்குப் போயிட்டிருந்தேன். ஒருநாள் 'உங்கள் குடும்பம்' நிகழ்ச்சிக்காக இதோ, இந்த ப்ரதீபா எங்க வீட்டுக்கு திமுர்னு வந்தா. அப்ப யார், என்னன்னு விசாரிச்சாங்க. நான் ஜி.எஸ்.விக்கு இன்டர்வியூ பண்ணியிருந்ததைச் சொல்ல, உடனே அவங்கதான் நிகழ்ச்சித் தொகுப்பாளரா வரியான்னு கேட்டு ஆரம்பிச்சி வெச்சாங்க.

*ராம்ஜி:* பிரதீபா இப்படியெல்லாம் சமூக சேவை செய்யறாளா? இருக்கட்டும், இருக்கட்டும்.

**ரோஷீபினா:** சார், ப்ரோக்ராமை வுடுங்க. எங்க வீட்டுக் கதை சொல்லவா? பயங்கர தேசிய ஒருமைப்பாடு அங்கே! எங்கப்பா ஒரு ராஜஸ்தானி, அம்மா தெலுகு பேசறவங்க. நான் முஸ்லிமா மாறினவ. என் தங்கை இப்ப தீவிர இயேசு பக்தையா மாறிட்டி

## வெங்kid ரமணி!



**வ**ள்ளியப்பா, வானொலி அண்ணா வரிசையில் வெங்கட்ரமணி அபாரமான குழந்தை ப்ரியராக இருக்கிறார்.

''குழந்தைகளுக்கு ஒண்ணும் தெரியாதுன்னு பொதுவா நினைச்சிட்டு இருக்காங்க. சில சமயம் அவங்க கேக்கற கேள்விகளுக்கு நாமதான் திருதிருன்னு முழிக்க வேண்டி வரும்'' என்கிற இவர், ஜெயா டீவிக்காக வால் பசங்க, சவால் என்னும் இரு நிகழ்ச்சிகளை நடத்துகிறார்.

''சவால், ரோட்-ஷோ மாதிரி நடுரோடுல மடக்கி அதிரடியா கேள்விகள் கேக்கறது. அதுக்கு மக்கள் ரியாக்ஷன் பிரமாதமா இருக்குன்னாலும் என் ஆத்ம திருப்தி குழந்தைகள் நிகழ்ச்சிலதான்'' என்னும் வெங்கட்ரமணி, டீவிக்கு வருவதற்கு முன்பு டாகுமென்டரிகள், விளம்பரப் படங்கள் எடுத்ததுண்டு. ⭘

ருக்கா.

**ப்ரவீணா:** பேசாம ஒரு பார்ஸிக்காரரை கல்யாணம் பண்ணிக்க ரூஃபினா. ஜோரா இருக்கும்.

**ரூஃபினா:** எங்க ஃபாமிலில வேற பலர்கூட இன்டர்காஸ்ட் மேரேஜ் பண்ணிட்டிருக்காங்க.

**ராம்ஜி:** நீ எப்படி முஸ்லிமா மாறினே? வீட்டுல என்ன சொன்னாங்க?

**ரூஃபினா:** இஸ்லாம் எனக்குப் பிடிச்சிருந்தது. அந்த வழிபாட்டு முறை, பழக்க வழக்கங்கள், கட்டுப்பாடெல்லாம் எனக்கு உடன்பாடா இருந்தது. நான் முஸ்லிம் ஸ்கூல்ல படிச்சதோட பாதிப்பா இருக்கலாம்.

**ராம்ஜி:** மதம் மாற்ற முயற்சி பண்ணாங்களா, யாராவது?

**ரூஃபினா:** சேச்சே! அந்த வழக்கமே கிடையாது. எனக்கே பிடிச்சுத்தான் மாறினேன். எங்க வீட்டுல கொஞ்சம் கவலைப்பட்டது உண்மைதான். ஆனா, என் சுதந்தரத்துல யாரும் தலையிட மாட்டாங்க.

**ராம்ஜி:** உன் ப்ரோக்ராம்ல நீ எந்த மொழில பேசறே?

**ரூஃபினா:** கிண்டல் பண்ணாதீங்க சார். ஹலோ ஹலோ சுகமா நிகழ்ச்சித் தொகுப்பாளர் நான். தமிழ் தான் பேசறேன். ரொம்ப மோசம்னு சொல்ல முடியாது. கொஞ்சம் இங்கிலீஷ் கலந்துக்குவேன். என் கவலையெல்லாம், காலை நிகழ்ச்சியான அதுக்குப் பார்வையாளர்கள் நிறைய இருப்பாங்களான்றதுதான்.

**ராம்ஜி:** கவலையை விடு. 2000 வருஷத்துல காலை அஞ்சு மணிக்கு சீரியல்கள் ஆரம்பிக்கப் போகுது பார்! மக்கள் பல் தேய்ச்சிக்கிட்டே சீரியல் பார்க்கப் போறாங்க.

**அம்பிகா:** சீரியல்களுக்கு எப்பவும் மவுசு தான் சார். எங்கப்பா இன்னிக்கும் ஜுனூன் ரசிகர்.

**கீதா:** சீரியல் சரி. எனக்கு சீரியல் ஃபுட் கூட சமைக்கத் தெரியாது. என்னைப் போய் சமையல் நிகழ்ச்சி நடத்த வெச்சிருக்காங்க.

**ராம்ஜி:** பாவம், ரசிகர்கள்.

**கீதா:** சமையல் நிகழ்ச்சில யாராவது ஒரு எக்ஸ்பர்ட் சமைக்கக் கத்துக் கொடுப்பார். பக்கத்துல இருந்து கேள்வி கேட்கற வேலை தானே? அப்படியே கத்துக்கிட்டிருக்கேன்.

**ராம்ஜி:** வீடு வீடா போய் சமைச்சிக் காட்ட சொல்றியே? சமைச்சதை சாப்பிட்டுப் பார்ப்பியா?

## சீரியஸ் ஷிவால்கர்!

**க**ண்ணா ஷிவால்கர் என்கிற பெயர் ரொட்டி – சப்ஜியை ஞாபகப்படுத்தினாலும் இந்தக் கண்ணா நம் ஊர்க்காரர்தான். தனியார் தொலைக்காட்சி வட்டாரத்தில் அறிவுஜீவிப் படிமம் – ஒட்டுமொத்தமாக ஏற்படுகிற அளவுக்குப் படு ஆழமாக, யோசித்து யோசித்துப் பேசும் இந்த இளைஞர் ஜெயாவில் 'வருக 2000', உலகக் காட்சிகள் என இரு நிகழ்ச்சிகளை நடத்துபவர்.



''மெடீரியலுக்குத்தான் ரொம்ப சிரமம் எடுக்க வேண்டியிருக்கிறது. தூதரகங்களிலிருந்து செய்தி சேகரிக்கும் போது, நமக்குத் தேவையான விவரங்களுக்காகச் சமயத்தில் பல மணி நேரம் காத்திருக்க வேண்டியிருக்கிறது. நேரக் கட்டுப்பாடுமிக்க டீவி நிகழ்ச்சிகளுக்கு இப்படிக் காத்திருந்து தகவல் சேகரித்துத் தொகுக்கும் பணி அதிக டென்ஷன் தருவது. அதுவே நல்லபடியாக முடிந்து விடும்போது கிடைக்கிற ரிலீஃப் இருக்கிறதே, அப்பா...!'' என்று புல்லரிக்கும் கண்ணா, ''பத்திரிகைகள் கூட இப்படித்தான் அவஸ்தைப்படும் இல்லை?'' என்று எதிர்க் கேள்வி வைக்கிறார்.

**கீதா:** வேற வழி? (சிரிப்பு) ஆனா ஒண்ணு. சில வீடுகள்ல, யாரோ முக்கிய விருந்தாளி வந்துட்ட மாதிரி நமக்கு விருந்தே சமைச்சுப் போட்டு சாப்பிட சொல்வாங்க. வேற சில வீடுகள்ல பச்சைத் தண்ணி கூட கொடுக்க மாட்டாங்க!

**பிரதீபா:** உன்னைப் பார்த்தால் அப்படி விருந்து, விருந்தா சாப்பிடற உடம்பா தெரியலையே.

**கீதா:** தாங்ஸ். (சிரிப்பு).

**ராம்ஜி:** நீ ஒரு காரியம் பண்ணு. நல்லா சாப்பிடக் குடுக்கற வீட்டுல இருக்கிறவங்களை க்ளோசப்ல அழகா காட்டச் சொல்லு. தண்ணி குடுக்காத வீட்டுக்காரங்

களை பூதம் மாதிரி காட்டிடலாம்! (வெடிச் சிரிப்பு!) ஓ.கே. கேர்ல்ஸ். ஒரு பொதுவான கேள்வி. பப்ளிக் ஃபிகராயிட்ட நீங்க, உங்க பாய் ஃப்ரெண்டோட எப்படி வெளில போவீங்க? யாராவது பார்த்துட்டா இமேஜ் என்னாறது?

**ப்ரவீணா:** ரொம்ப சௌகர்யம் சார்! வீட்டுல எடுத்துச் சொல்ற வேலை மிச்சம். யாராவது போட்டுக் குடுத்து, நம்ம வேலையைக் குறைச்சிடுவாங்களே.

**அம்பிகா:** வெளில சுத்த முடியுமா என்ன! போன்லதான் பேச முடியும். ஆனா அது போர்.

**ரோஷிணா:** கஷ்டம்தான். வண்டி சிக்னல்ல நின்னாக்கூட கண்டுபிடிச்சி பேசிக்கறாங்க.

**கல்பனா:** வீட்டுல சொல்லிட்டே வெளில போறதுதான் பெட்டர்.

**ராம்ஜி:** தொகுப்பாளர்களுக்குன்னு ஏதாவது ரூல்ஸ் உண்டா தெரியுமா? எல்லாரும் சளைக்காம தமிழ்க் கொலை பண்றீங்களே!

**கல்பனா:** என்னோட 'விண்மீன்ஜாலம்' நிகழ்ச்சி தயாரிப்பாளர் பேரே தமிழ் நெஞ்சன்! அற்புதமாத்தான் எழுதித் தருவார். நமக்குத்தான் வாய்ல நுழைய மாட்டேங்குது.

**கல்கி:** (இடை புகுந்து) ராம்ஜி சார்! சொல்லி வெச்சா மாதிரி எல்லாரும் தமிழ் வரதில்லைங்கறாங்க. சமஸ்கிருதம், இங்கிலீஷ் படிச்சவங்களை மட்டுந்தான் தொகுப்பாளரா வைக்கணும்னு டீவிக்கள் ஏதாவது ரூல் வெச்சிருக்கா?

**ராம்ஜி:** பிரச்னை என்னன்னா, நல்லா தமிழ் தெரியணும். ஸ்பான்டேனியஸா பேச வரணும். பார்க்கவும் நல்லா இருக்கணும். இந்த மூணு விஷயமும் சேர மாட்டேங்குது. ரொம்பக் கஷ்டப்படறாங்க. இந்த குவாலிடீஸ் உள்ள பெண்கள் காம்பியர் பண்ண ஒத்துக்கணும். அவங்க ஒத்துக்கிட்டாலும் வீட்டுல பெற்றோர் ஒத்துக்கமாட்டாங்க. உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? நான் முதல் முதல்ல காம்பியராத்தான் என் வேலையைத் தொடங்கினேன்.

**எல்லா பெண்களும்:** ரியலி? தெரியாதே சார்?

**ராம்ஜி:** எப்படித் தெரியுமா? நீங்க அப்ப

## ஹேர மதன்!

தீபாவளியன்று ஒளிபரப்பான நிகழ்ச்சிகளுள் சூப்பர் ஹிட் அந்தஸ்து பெற்றது, 'ஹேராம் கமல்' பேட்டி (பேட்டி கண்டவர், மதன்.)

''இந்த நிகழ்ச்சிக்குக் கிடைத்த வெற்றி, 'வெள்ளித் திரை' பகுதியை ஜெயாவில் நிரந்தரமாக்கி விட்டது!'' என்று பூரிப்புடன் சொல்கிறார் இதன் சூத்திரதாரியான சுமித்ரா.



''ஒவ்வொரு வாரமும் ஞாயிறு அன்று பிற்பகல் ஒன்றரை மணிக்கு மதன் ஒரு விஐபியைச் சந்திப்பார் இனிமேல். மிக வித்தியாசமான சினிமா நிகழ்ச்சியாக அது இருக்கும்'' என்கிற சுமித்ரா, முன்னதாக பரத்பாலா புரொடக்ஷனில் பணியாற்றிய அனுபவம் உள்ளவர். எடிட்டிங் உள்ளிட்ட தொழில்நுட்ப விஷயங்கள் அனைத்திலும் ஆர்வமும் திறமையும் உள்ள இவர்,

''பொதுவா டீவி துறைல பெண்கள் அதிகம்னாலும் டெக்னிகல் சைடு வர மாட்டாங்க. நான் மாஸ் கம்யூனிகேஷன் முடிச்சிட்டு பாம்பேல ஓர்க் பண்ணப்ப, அங்க இந்தத் துறைல ஆண் - பெண் வித்தியாசமே இல்லைங்கறதைப் பார்த்தேன். சுலபமா அங்க கத்துக்க முடிஞ்சதாலதான் இங்க விளையாட முடியுது!'' என்கிறார் சுமித்ரா.

''சினிமா சார்ந்த நிகழ்ச்சிகள்தான் வெற்றி பெறும்ங்கறதை உடைச்சி அறிவுபூர்வமான நிகழ்ச்சிகளுக்கும் வெற்றி சாத்தியம்னு காட்டப் போறேன்'' என்கிறார் சுமித்ரா.

பிறந்திருக்கமாட்டீங்களே! மேடை நிகழ்ச்சிகளைத் தொகுக்கறது ஒரு கலை. அதுலதான் வித்தியாசமா செய்ய ஆரம்பிச்சு, அப்படியே இசை நிகழ்ச்சிகள், டாக்-ஷோக்கன்னு மாறிப் போயிட்டேன். ஓகே. அடுத்த நூற்றாண்டுலயாவது சுத்தமான தமிழ் பேசற தொகுப்பாளர்கள் கிடைக்கறாங்களா பார்ப்போம்.

**ப்ரவீணா:** நேத்துகூட டீவில சுகி சிவம் பேசினதைக் கேட்டேன் சார். எல்லா மாநிலத்திலும் குழந்தைகள் அம்மாவை அந்தந்த மொழிலதான் அம்மான்னு கூப்பிடுமாம். தமிழ் நாட்டுல மட்டும்தான் மம்மி கல்சர்னு சொன்னார்.

**அம்பிகா:** நாங்க பரவாயில்லையே, தமிழ்-இங்கிலிஷ் கலந்தாவது பேசறோம். சில முன்னாள் நடிகைகள் காம்பியர் பண்ண வராங்க இப்ப. என்னவோ ஸ்டார் டீவிலதான் வேலை கிடைச்சுட்ட மாதிரி மருந்துக்குக் கூடத் தமிழே இல்லாம பேசறாங்க.

**ராம்ஜி:** ரொம்ப சீரியஸா போயிட்டோமில்லே? யாராவது ஜோக் சொல்லி முடிச்சிருங்களேன்.

**உஷா:** நான் சொல்றேன். ஒரு லை-டிடெக்டர் (பொய் பேசினால் கண்டு பிடிக்கும் இயந்திரம்) புதுசா வந்தது, மார்க்கெட்டுக்கு.

அதை டெஸ்ட் பண்ணிப் பார்க்க ஒரு தமிழர் ஏறி நின்னு, "ஐ திங்க், இன்னும் அரை மணில நான் சந்திரன்ல இருப்பேன்னு" சொன்னார்.

உடனே மிஷின் 'பீப் பீப்'னு சவுண்ட் குடுத்தது.

ஒரு மலையாளி ஏறி நின்னு, "ஐ திங்க், பத்து நிமிஷத்துல என்னால அமெரிக்க அதிபராயிட முடியும்." மெஷின் 'பீப் பீப்'னு கத்திச்சு.

மூணாவதா ஒரு சர்தார்ஜி ஏறி நின்னார். "ஐ திங்க்..." அவ்ளோதான்! வேற எதுவும் சொல்றதுக்குள்ளயே 'பீப் பீப்'னு அலற ஆரம்பிச்சிடுச்சு மெஷின்!

(பலத்த சிரிப்பு)

**ராம்ஜி:** நாமெல்லாம் சர்தார்ஜீக்களை ரொம்பத்தான் கிண்டல் பண்றோம். ஆனா அவங்க எவ்ளோ புத்திசாலிகள் தெரியுமா?

**ப்ரவீணா:** கரெக்ட் சார்! இந்த ஜோக்ஸையெல்லாம் ரகசியமா உற்பத்தி பண்ணி, சப்ளை பண்றதேகூட அவங்கதான்னு நினைக்கிறேன்!

தொகுப்பு: **ரம்யா**
படங்கள்: **ப்ரவீண்குமார்**



## 'ழ' வருமே!

"**எ**னக்கு மற்ற டீவி அறிவிப்பாளர்களைப் போலல்லாமல் 'ழ' நன்றாக வரும்!" – ஜெயா டீவியில் 'டிபன் ரெடி' நிகழ்ச்சியைத் தொகுக்கும் மம்தா சொல்லிச் சொல்லிப் பெருமைப்படும் விஷயம் இதுதான்!

பெப்ஸி உமாவின் தீவிர ரசிகையான மம்தா படிப்பது வைஷ்ணவா கல்லூரியில் பி.காம்., இறுதி வருடம்.

"ஜி.ஆர்.டி. ஹோட்டலின் தலைமை சமையல் நிபுணர் தீரஜ் விஜயன்தான் என் நிகழ்ச்சியில் சமையல் செய்து காட்டுபவர். எனக்கும் சுமாராக சமைக்க வரும் என்பதால் அவரிடம் என் சந்தேகங்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டு, வீட்டில் போய் நானே செய்து பார்ப்பதும் உண்டு" என்கிறார். அது சாப்பிடும் படியும் இருக்கும் என்று உத்தரவாதம் தரும் மம்தாவுக்கு சமீபத்தில் ஒரு சினிமா அழைப்பு வந்திருக்கிறது.

"ஒத்துக்கலாமா, வேணாமான்னு யோசிச்சிட்டிருக்கேன்" என்கிறார்.

யோசித்து முடிந்ததும் மேல் விவரங்களை தினத்தந்தியில் தெரிந்து கொள்வீர்!

**"நம்ம பையன் ரிமோட்டை கையில் வைத்துக்கொண்டு பட், பட்டென்று சானலை மாற்றிக்கொண்டே இருக்கிறான். பிக்சர் டியூப் போய் விடுமோ என பயமாக இருக்கிறது என்று பலர் அலுத்துக் கொள்வதுண்டு. "அதெல்லாம் ஒன்றும் கிடையாது. ரிமோட் மூலம் டீவியை ஆபரேட் செய்வதே சிறந்தது" என்கிறார் சர்வீஸ் இன்ஜினீயரான சந்திரஹாசன். இருபது வருடங்களுக்கு மேலாக தொலைக்காட்சிப் பெட்டிகளைப் பழுது பார்த்து வரும் சந்திரஹாசன் கொடுக்கும் டிப்ஸ்.**

# டீ.வி பெட்டியைப் பராமரிக்க சில டிப்ஸ்!

● தொலைக்காட்சிப் பெட்டிகளை நேரடியாக சூரிய வெளிச்சம் படும் இடத்தில் வைக்கக் கூடாது.

● தொலைக்காட்சிப் பெட்டிக்கு அருகில் பூந்தொட்டிகளையோ, அல்லது அதன் தலையில் செயற்கை பூங்கொத்துக்களையோ வைக்க வேண்டாம்.

● ஒரு நாளைக்குத் தொடர்ச்சியாக அதிக பட்சம் நான்கு மணி நேரத்துக்கு மேல் டீ.வி ஓட வேண்டாம். டீ.வி. இயங்கிக் கொண்டிருக்கும்போது அதை நகர்த்துவதோ, தூக்குவதோ கூடாது.

● ஈரமில்லாத துணியால் வாரத்திற்கொருமுறை சின்னத் திரையை நன்றாகத் துடைத்து விடவும்.

● சின்னத் திரையில் குறுக்கு நீளத்தைப் போல் (விட்டம்) ஐந்து மடங்கு தூரம் தள்ளி உட்கார்ந்து பார்ப்பது கண்களுக்கு நல்லது.

● டீ.வி.யில் உள்ள சேனல் லாக் போன்ற சிறப்பம்சங்களை உபயோகிக்கும்போது கேட்லாக்கை நன்கு படித்துப் பார்த்து உபயோகிக்க வேண்டும். எல்லாம் எலக்ட்ரானிக் சமாசாரங்கள். ஆதலால் ரொம்ப ஸென்ஸிட்டிவ்.

● எந்தக் காரணம் கொண்டும் டீ.வி.யின் பின்புறம் திறக்க வேண்டாம். உயர் மின் அழுத்தம் அதனுள்ளே இருக்கிறது.

● டீ.வி. பெட்டிக்குக் குளிரும் என்பது போல் சில வீடுகளில் போர்வைகளால் போர்த்துக்கிறார்கள். இது தவிர்க்கப்பட வேண்டும்.

● நான்கு புறமும் கவர் செய்த ஸ்டாண்டில் டீ.வி பெட்டியை வைக்கும்போது பெட்டியின் சுற்றுப்புறத்தில் குறைந்த பட்சம் ஆறங்குல இடைவெளி இருக்க வேண்டும். அதாவது டீ.விக்கு நல்ல காற்றோட்டம் அவசியம்.

● எந்த விதத்திலும் டீ.வி பெட்டியின் மேல் தண்ணீர் படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

**— ஆர்.எஸ்.**



• காசளவு நேசத்தில்...

முற்றிலும் மாறுபட்டது. 1960லிருந்து '80 வரையிலான அந்த இருபது வருடங்களில், அவருக்கு வாய்த்தது மாதிரி இன்று யாருக்கும் வாய்க்காது. மிக வெளிப்படையாகச் சொல்வதென்றால் தோல்வி குறித்த பயம் இன்று தவிர்க்கக் கூடியதாக இல்லை. தவிர, என் இரு



• மர்மதேசத்தில்...

கறுப்பைத் தெரிந்தவர்களுக்கெல்லாம் கைலாசத்தையும் தெரிந்திருக்கும். அதிகம் பேசாத, மிகத் தெளிவான வியாபார சித்தாந்தங்களைத் தமக்கென வகுத்துக் கொண்டிருக்கும் 'மின் பிம்பங்கள்' பால. கைலாசம், இன்றைய தொலைக்காட்சித் தொடர் தயாரிப்பாளர்களுக்கெல்லாம் பலவகையில் முன்னோடி. தமிழின் முதல் 'மெகா' முயற்சிகளைத் தொடங்கி வைத்தவர். (கையளவு மனசு, காதல் பகடை) கே. பாலசந்தரின் மகன் என்பதாலேயே சுலபமாக சினிமாவுக்குள் நுழையும் சாத்தியங்கள் இருந்தும் திட்டவட்டமாக மறுத்து, வெளிநாடு சென்று டீவி தொழில் நுட்பம் படித்து வந்தவர். கைலாசம் அடுத்து என்ன செய்யப் போகிறார் என்பதுதான் பிற தயாரிப்பாளர்களின் நிரந்தரக் கவலை மற்றும் கவனம். அந்தளவு கமர்ஷியல் வெற்றியைத் திட்டமிட்டு சாதித்திருக்கும் கைலாசத்தை டீவி ஸ்பெஷலுக்காகச் சந்தித்தோம், மயிலாப்பூரிலுள்ள அவரது மின்பிம்பங்கள் அலுவலகத்தில். பேட்டியிலிருந்து:

---

**"பாலசந்தரின் மகனாக இருந்தும் சினிமா ஏன் உங்களைக் கவரவில்லை?"**

"இன்றைய - சினிமாவில் புதிதாகச் சொல்ல ஏதும் இருப்பதாக நான் கருதவில்லை. எல்லாம் ஒரே மாதிரியான படங்களாக வந்து கொண்டிருக்கின்றன. வித்தியாசம் என்பது அபூர்வமான விஷயமாகி விட்டது. என் தந்தை சினிமாவில் செயல்பட்ட கால கட்டம், இன்றைய நிலைமைக்கு முற்றிலும் மாறுபட்டது.

பது வயதுவரை நான் தமிழ் சினிமா பார்த்ததேயில்லை என்றால் நீங்கள் நம்பித்தான் ஆக வேண்டும். சென்னை பிலிம் சொஸைடி மூலம் பல நல்ல உலகப் படங்களைத்தான் (20 வயதுக்குப் பின்) முதலில் பார்க்கத் தொடங்கினேன். இஞ்சினியரிங் முடித்த கையோடு அமெரிக்கா சென்று டீவி தொழில் நுட்பம் கற்ற சமயத்தில், அங்குள்ள தொலைக்காட்சிகளைக் கூர்ந்து கவனித்தேன். வியப்பூட்டும் விதமாக, பல நூதன

மான அம்சங்கள் அந்த டீவி நிகழ்ச்சிகளில் இருந்தன. ஒவ்வொரு நிகழ்ச்சிக்கும் எத்தனை 'வெரைடி' காட்டுகிறார்கள்! தமிழிலும் இது சாத்தியந்தான் என்று தோன்றியது. டீவிதான் என் இலக்கு என்கிற முடிவோடுதான் திரும்பி வந்தேன்."

**"டீவி தொடர்களுக்கு முன்பாகச் சில டாகுமெண்டரிகள் எடுத்தீர்களல்லவா? அம்முயற்சிகள் எவ்வளவு தூரம் வெற்றி அடைந்தன?"**

"இங்கே அரசு தயாரித்த டாகுமெண்டரிகளெல்லாம் வெறும் பிரசாரப் படங்களாயிருந்தன. அதை மாற்றிக்காட்ட ஆசைப்பட்டுத்தான் 'வாஸ்து மரபு' என்கிற டாகுமெண்டரியை எடுத்தேன். மிகவும் பாராட்டினார்கள். தேசிய விருதுகூடக் கிடைத்தது. ஆனால் நான் இந்தியன் வங்கியில் வாங்கிய பத்து லட்சம் கடனுக்குத்தான் ரொம்பத் திண்டாட வேண்டியிருந்தது, திருப்பி அடைக்க. நல்ல நஷ்டம்! டாகுமெண்டரி படங்களுக்கு வெளிநாடுகளில் நல்ல வரவேற்பு உண்டு என்று சொல்வதெல்லாம் ஒரு மாயை. உண்மையில், அவர்களுக்கு நம் நாடு பற்றி எதுவும் தெரியாது. சுயமரியாதையுடன் ஒரு முக்கியமான விஷயத்தை அணுகி, ஆராய்ந்து படமாக்கினால் பரிசு தர மாட்டார்கள். இதுவே, சிவகாசிக் குழந்தைகளின் சோகம், குஜராத்தில் யாரோ எலி வளர்க்கிறார்கள் என்பதாக நமது அவலங்களைக் காட்டும் விதமாகவோ, விசித்திரமான பழக்க வழக்கங்கள் பற்றியோ சொன்னால் அள்ளிக் கொள்வார்கள் - ஏழ்மையும் விசித்திரங்களுந்தான் இந்தியா என்பது அவர்களது நம்பிக்கை. நமது தலித் கிறிஸ்தவர்களின் வாழ்வியல் பிரச்னைகள் குறித்து ஆராய்ந்து ஒரு டாகுமெண்டரி எடுத்தேன். நம்ப மாட்டீர்கள். தூர்தர்ஷன் உட்பட யாருமே அதை ஒளிபரப்ப முன்வரவில்லை. எதிர்காலமற்ற ஒரு துறையில் முட்டி மோதுவது பற்றி அப்போது சிந்திக்க வேண்டியிருந்தது."

**"அதனால்தான் டீவி தொடர்களில் இறங்கி விட்டீர்களா?"**

"ஆமாம். பத்து வருடங்கள் முன்பு தனியார் சானல்கள் வரத் தொடங்கிய போது அவை முற்றிலும் வியாபார சாத்தியங்களையே தம் முதல் குறிக்கோளாகக் கொண்டிருந்தன. பணத்தை எப்படியெல்லாம் பெருக்கலாம்? இதுதான் அடிப்படை. விலை போகிற விஷயங்களுக்கு மட்டுமே ஒளிபரப்ப வாய்ப்பு என்பதான ஒரு நிலைமை நிச்சயத் தன்மை அடைந்தது. அப்போது நான் முடிவு செய்தேன். மக்களுக்கு ஒரு விஷயத்தைச் சொல்வதான உந்துதலுடன் பொழுதுபோக்கு அம்சங்களைக் கலந்து சீரியல்கள் தயாரிப்பது. அதன் ஆரம்பம்தான் கையளவு மனசும், காதல் பகடையும். அந்த இரு தொடர்களின் வெற்றியின் அடிப்படையில் 'மின் பிம்பங்கள்' நிறுவனம் உறுதிப்பட்டது. மர்மதேசத்தைக் கையில் எடுத்தேன்."

• பாலு. கைலாசம்



# "முதலில் மர்மதேசத்தால் நஷ்டம்தான்!"

**"ஏதாவது ஒரு செய்தியை - விஷயத்தைச் சொல்வது நோக்கமென்கிறீர்கள். மர்மதேசம் என்ன செய்தி சொல்கிறது?"**

"நமது கலாசாரமே நம்பிக்கை சார்ந்த ஒரு வலுவான அடித்தளத்தின் மீது எழுந்ததுதான் என்று நினைக்கிறேன். இங்கு யதார்த்தமும் இருக்கிறது, நம்ப முடி

யாதவையும் இருக்கின்றன. புரிபவை - புரியாதவை என்று இரண்டு பிரிவுகள் உள்ளன. இது தவிர புரிந்து கொள்ள முடியாதவை என்றொரு பகுதியும் உண்டு. யதார்த்தத்துக்கும் விசித்திரங்களுக்குமான ஓயாத மோதல் பற்றி மர்மதேசம் தொடர்ந்து பேசி வருகிறது. இப்போது ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கும் இயந்திரப் பறவையை எடுத்துக் கொள்ளுங்கள். நவீனத்துக்கும் புராதனத்துக்குமான மோதல் அதில் வருகிறது. இது எப்போதும் இருப்பது. நமது பாரம்பரியக் கலைகள் பல அழிந்து விட்டன. அவற்றுள் மிச்சமிருக்கும் ஒன்றான வர்மக் கலை பற்றி இது ஆராய்கிறது. இதுவும் அழிந்து கொண்டு வருவது. கணபதி ஸ்தபதி சொல்வார்: 'இந்தியா ஒரு பெருங்காயப் பானை. ஆனால் பெருங்காயம் இப்போது இல்லை. வாசனை மட்டுந்தான்' என்று. அந்த வாசனையை வைத்துத்தான் நாம் பெருமை பேசுகிறோம். விஷயத்தை விட்டு விடுகிறோம். மேற்கத்தியத் தாக்கம் மிகுந்து வரும் இந்நாளில், சில பொழுதுபோக்கு அம்சங்களுடன் இணைத்தாவது நமது பாரம்பரிய விஷயங்களை மக்களுக்கு எடுத்துச் செல்வதுதான் மர்மதேசம்."

**"இதை ஒப்புக் கொள்ள முடியாது. மர்மதேசத்தின் வெற்றி இந்தச் 'செய்தி'யால்தான் என்று சொல்கிறீர்களா?"**

"மர்மதேசத்தின் வெற்றி அதிலுள்ள பொழுதுபோக்கு அம்சங்களினால்தான். நான் மறுக்கவில்லை. ஆனால், நான் அதில் தந்திருந்த செய்தி ஒரு 'லெவலு'க்குக் கட்டாயம் போய்ச் சேர்ந்திருக்கும். பேய், ஆவி விஷயங்களைக்கூட அறிவியல்பூர்வமாகவே நாங்கள் அணுகினோம். இது போய்ச் சேரவில்லை என்றால் அது எனக்குத் தோல்விதான்; சந்தேகமில்லை."

**"மர்மதேசத்தைத் தொடர்ந்து வந்த பிற மர்ம சீரியல்கள் ஏன் வெற்றி பெறவில்லை?"**

"இப்போது ஒரு குறிப்பிட்ட நேரத்தை திகில் நேரமாகவே ஆக்கி விட்டார்கள். டெக்னிகலாக எல்லா சீரியல்களுமே மிகச் சிறப்பாக இருக்கின்றன. ஆனால் பேச்சு மட்டும் மர்மதேசத்தைப் பற்றி மட்டுந்தான். மர்மதேசத்தில் ஒரு மாயக்குதிரை வந்தது. ஒரு எபிசோடுக்கு ஒரு கொலை நடந்தது - தொடரின் வெற்றி இந்த திகில் அம்சங்களினால் மட்டும் வராது. அடிப்படை மனித உறவுகள் பற்றிப் பேசும் விஷயங்கள் மட்டுமே வெற்றி பெறும். மர்மம், குடும்பம் என்று சொல்லப் படுபவை எல்லாம் ஒரு ஃபார்மெட்; அவ்வளவுதான். அது வெறும் பேக்கிங். உள்ளே நாம் என்ன பேசுகிறோம்; அது மனித உறவுகளை, சிக்கல்களை

---



## பரிசு!

**அமெரிக்காவில், பல மாடிக் கட்டடங்கள் நிறைந்த ஒரு பகுதியில் தீப் பிடித்துக் கொண்டது. தீயணைப்புப் படைக்குத் தகவல் சொன்னார்கள். பல தீயணைப்பு வண்டிகள் ஸ்தலத்துக்கு விரைந்து வந்து விட்டாலும், தீயின் உக்கிரம் தாங்காமல் ஒருவரும் நெருங்கி தீயை அணைக்க முன்வரவில்லை.**

**திடீரென்று ஒரு தீயணைப்பு வண்டி, இரண்டு மூன்று வண்டிகளை இடித்துத் தள்ளிவிட்டு, கட்டடங்களை நெருங்கியது. இதைப் பார்த்த மற்ற தீயணைப்பு வண்டியினருக்கு ஒரு உத்துதல். உடனே சட்டென்று புறப்பட்டு, தீப்பிடித்த கட்டடங்களை நெருங்கி, தீயணைப்புப் பணியில் ஈடுபட்டனர். தீ அணைக்கப்பட்டது.**

**அப் பகுதி மக்கள், தீயணைப்புத் துறையினரைப் பாராட்டி, ஒரு விழாவுக்கு ஏற்பாடு செய்தனர். குறிப்பாக, முதலில் சென்ற தீயணைப்பு வீரரைப் பாராட்டி, பரிசு தந்தனர். அவரைப் பேசச் சொன்னார்கள். "என்னைப் பாராட்டிப் பேசியவர்கள், எனக்கு என்ன வேண்டுமானாலும் கேட்டால் தருவதாகக் குறிப்பிட்டார்கள். எனக்கு உடனடியாகத் தேவை: நன்றாக பிரேக் பிடிக்கிற ஒரு தீயணைப்பு வண்டி."**

**- ஏவி.எம்.மின் 'கலாட்டா குடும்பம்' பாராட்டு விழாவில் டைரக்டர் வெங்கட் சொன்ன ஜோக்.**

**ரசித்தவர்: மானஸா**



எவ்வாறு அலசுகிறது என்பதுதான் ஒரு சீரியலின் வெற்றியைத் தீர்மானிக்கிறது.''

**''உங்களது நகைச்சுவை சீரியல் முயற்சி ஏன் வெற்றி பெறவில்லை? பதிவு செய்யப் பட்ட சிரிப்பு, ரசிகர்களைத் தொடர்ந்து எரிச்சலூட்டுவதை கவனித்தீர்களா?''**

''பதிவுச் சிரிப்பால் மட்டுந்தான் நகைச் சுவை சீரியல் தோற்றது என்பதை நான் மறுக்கிறேன். எனக்கு ஹ்யூமர் எழுத சரியான நபர்கள் கிடைக்கவில்லை. அப்படியும் ரமணி Vs ரமணி ஓரளவு மக்களைக் கவர்ந்தது என்றுதான் நினைக்கிறேன். காதலித்து அல்லாமல் திருமணம் மூலமே நேரடியாக இணையும் ஒரு நவீன இந்திய ஜோடியின் வாழ்க்கையில் நகைச்சுவையான அம்சங்கள் பல இருக்கின்றன என்பதை என் திருமணத்துக்கு அப்புறம் புரிந்துகொண்டேன்! திருமணத்தின் அர்த்தம் என்ன வென்பதை அவர்கள் 'கண்டறிவதை' நகைச் சுவையாகச் சொல்ல முடியும் என்று நம்பினேன். அது ஒரு மெகா சீரியலல்ல. சின்ன சீரியல்தான். சிறிதளவு வெற்றியும் பெற்றிருப்பதாகத்தான் நினைக்கிறேன். அடுத்தபடியாக, ஒரு தாத்தாவும் பேரனும் வாழ்க்கையை அவரவர் கோணங்களில் எப்படிப் பார்க்கிறார்கள் என்பதை நகைச் சுவையாகச் சொல்ல முடியுமா என்பது பற்றி இயக்குநர் நாகாவுடன் சேர்ந்து பேசி வருகிறேன். இந்தத் தொடர் பிரமாதமாக வெற்றியடையும் பாருங்கள்.''

**''டெலி பிலிம்களும் டாக் - ஷோக்களும் இங்கு ஏன் எடுபடுவதில்லை?''**

''எல்லாவற்றுக்கும் வியாபாரக் காரணங்கள்தான்! விஜய் டீவியில் 'தமிழா தமிழா' என்றொரு உருப்படியான நிகழ்ச்சியை ஆரம்பித்தோம். செய்தி விமர்சனத்துக்கு முக்கியத்துவம் தந்த நிகழ்ச்சி அது. ஆனால் சானலின் நிர்ப்பந்தம்; நிறுத்த வேண்டிய தானது. டாக் - ஷோக்கள் எடுபடாது, இங்கே. அவற்றுக்கு விளம்பரங்கள் கிடைப்பது கஷ்டம்.

''ஆனால் என் வாதம் என்னவென்றால் எதையும் சீரான தரமுடன் தொடர்ந்து செய்து கொண்டே இருப்பதன் மூலம் மக்களின் கவனத்தை ஈர்த்துவிட முடியும் என்பது. மர்மதேசம் ஆரம்பித்து முதல் 25 வாரம் நான் எத்தனை நஷ்டப்பட்டேன் தெரியுமா? அந்தக் கால கட்டத்தில் அந்த 'தீம்' புதிது. மக்கள் அதனுடன் நெருக்கமாக உணரச் சற்று தாமதமாகத்தான் செய்யும். நஷ்டம் பற்றி அச்சப்பட்டு நிறுத்தியிருந்தால், இன்றைய வெற்றி அடைந்திருக்காதே! டாக்-ஷோக்களைக்கூட விடாமல், தரமுடன் நடத்தினால் கண்டிப்பாக ஜெயித்துக் காட்ட முடியும். நமக்கந்த நம்பிக்கை இருந்தாலும் தொலைக்காட்சிகளுக்கும் இருக்க வேண்டுமல்லவா?''

சந்திப்பு: **ஔரங்கசீப்**

## கண்ணாடி முன்னால்....

**தூ**ர்தர்ஷனில் அறிவிப்பாளராக மட்டுமே தேர்வு செய்யப்பட்ட ரமணி மணி நியூஸ் ரீடராக அவதாரம் எடுத்திருப்பது ஜெயா டீ.வி.யில். தாம் மிகவும் விரும்பிய பொறுப்பு இது என்கிறார். விண்ணப்ப நாளுக்கும் நேர்முகத் தேர்வுக்கும் இடையே யான இரு வாரங்கள் கண்ணாடி முன் நின்று செய்தி வாசித்துப் பழகியிருக்கிறார்.

தனியார் நிறுவனம் ஒன்றில் வேலைக்குப் போகும் இவரை, ''டீ.வி.யில் நியூஸ் படிப்பது உன் சகோதரியா?'' என்று பலர் கேட்கிறார்களாம்!

# கம்யூனிஸ்ட் தம்பிகள்



பஸ் தாம்பரத்தைத் தாண்டியதும், சுத்தமான காற்று முகத்தில் அறைந்தது. இனி நான்கு நாட்களுக்கு இயந்திரத்தனமாக இயங்கும் சென்னை வாழ்க்கை இல்லை. லஸ் கார்னர் சிக்னலில், காட்டன் சட்டையின் மேலிரண்டு பட்டன்களைப் போடாமல் நடக்கும் பெண்ணைக் கண்டு அதிரத் தேவையில்லை. கார்ப்பரேஷன் அடி பம்ப் சப்தம் கேட்டு, ஆறு மணிக்கே எரிச்சலுடன் விழிக்க வேண்டியதில்லை. பெயர் தெரியாத மனிதர்களின் மூச்சுக் காற்றை சுவாசித்துக் கொண்டு, ட்வென்ட்டி-நைன்-சியில் பயணிக்கும் அவசியமில்லை.

திருச்சிக்குச் செல்லும் பொழுதெல்லாம் என்னிடம் சொல்லவென்று அம்மாவுக்கு நிறைய விஷயங்கள் இருக்கும். ஆடிப் பெருக்கன்று அம்மா மண்டபம் சென்ற பொழுது பெரியம்மாவைப் பார்த்தது பற்றி, அருணா தியேட்டரில் கும்பலே இல்லாமல் 'உயிரே' சினிமா பார்த்

தது குறித்து என்று சொல்வதற்கு நிறைய விஷயங்கள் இருக்கும்.

பெரும்பாலான சமயங்களில் அம்மாவின் பேச்சு தம்பி கோபியை பற்றியதாகவே இருக்கும். கோபி பாலிடெக்னிக்கில் டிப்ளமோ படித்து முடிக்கும் வரை எல்லோரையும் போலத்தான் இருந்தான். பிறகு வேலையின்றிச் சோர்ந்து போயிருந்த இரண்டு ஆண்டுகளில் மிகவும் மாறிப் போனான். யாரிடமும் அதிகம் பேசுவது இல்லை. நல்ல உடைகள் உடுத்துவது இல்லை. சொந்தக்காரர் விசேஷங்களுக்கு வருவதில்லை. பாரதியார் பாஞ்சாலி சபதத்தில் சொன்னது போல் 'பொக்கென ஓர் கணத்தே... எல்லாம் போகத் தொலைத்து விட்டான்.'

ஒருமுறை ஊருக்குச் சென்ற பொழுது அம்மா என்னை சமையலறைக்குக் கூப்பிட்டு ரகசியமாக, "கோபிக்கு ஏண்டா புத்தி இப்படிப் போவுது? அவன் ரூம் செல்ஃபுல வச்சிருக்கற புத்தகத்தை எல்லாம் பார்த்துட்டு வாடா" என்றார்.

நான் யோசனையுடன் மாடி ஏறினேன். ஏதேனும் செக்ஸ் புத்தகங்களாக இருக்குமோ?

அவன் செல்ஃபிலிருந்த புத்தகங்களை எடுத்துப் பார்த்தேன். வி. இ. லெனினின் "இடதுசாரி கம்யூனிசம் – இளம் பருவக் கோளாறு" என்னும் நூலைப் பற்றி மிஹயீல் துருஷ் எழுதியிருந்த புத்தகம். எங்கெல்சின், "குடும்பம் தனிச் சொத்து, அரசு ஆகிய வற்றின் தோற்றம்" எனும் நூல் குறித்து இலி. அந்திரேயெவ் எழுதிய புத்தகம். மேலும் பல ரஷ்ய கம்யூனிஸ்ட் புத்தகங்கள்.

ஒரு புத்தகத்தை விரித்தேன். கோபி அண்டர்லைன் செய்திருந்த வரிகளை வாசித்தேன். "இது வர்க்க உறவுகளில் உழைப்பிற்கும், மூலதனத்திற்கும் இடையிலான பல முரண்பாட்டால் வெளிப்படுகிறது.'' தமிழ்தான். சத்தியமாக ஒரு அர்த்தமும் விளங்கவில்லை. புத்தகத்தை மூடி வைத்தேன்.

எனக்கு ஆச்சரியமாக இருந்தது. படிப்பதற்கு மிகவும் கடினமான இந்தப் புத்தகங்களையெல்லாம் எப்படி இவனால் படிக்க முடிகிறது? நாங்கள் மிகவும் செல்லமாக வளர்த்த கடைசிப் பையன் இல்லையா இவன்? தேங்கிப் போன இந்த நாட்களில் அவன் தனது உற்சாகத்தையும், குழந்தைத்தனத்தையும் இழந்து விட்டானா?

அம்மா, ''பாத்தியாடா மூர்த்தி?" என்றார்.

''ம்... பார்த்தேன். எல்லாம் கம்யூனிஸ்ட் புக்ஸ்."

"இவனுக்கு எதுக்குடா இதெல்லாம்? நம்ப குடும்பத்துல யாருக்கும் இந்தப் பழக்கமில்ல. கண்ட புத்தகத்தையெல்லாம் படிச்சுத்தான் மாறிப் போய்ட்டான். அதிகமா பேசறதுல்ல. நம்ப எது சொன்னாலும் ஒரு "ம்.." போட்டுக்குவான். அவ்வளவுதான். மாமா வந்தா அவர்கிட்ட கிரிக்கெட் பத்தி பேசுவான். அப்புறம் டீவில பிபிசி., டிஸ்கவரி சேனல் பாக்கறது. சொல்ற வேலைய உருப்படியா செய்யறதுல்ல. ஏதாச்சும் கேட்டா நீங்கள்லாம்

ஜி.ஆர். சுரேந்திரநாத்

பூர்ஷ்வா ஜாதிங்கறான். ஒரு மண்ணும் புரிய மாட்டேங்குது."

"விடுங்க. அவனுக்கு வேலையில்லாத கவலை. அதனால் அவனுக்குள்ள ஒரு காம்ப்ளக்ஸ். அதனால யாருகிட்டேயும் ஒட்டறதுல்ல. எல்லா மனுஷனுக்கும் இந்த மாதிரி துவண்டு போய், தனிமைப்பட்டுப் போறப்ப ஒரு பிடிப்பு தேவைப்படும். அந்த மாதிரி அவன் கம்யூனிசத்தைப் பிடிச்சுக்கிட்டிருக்கான். வேற மாதிரி கெட்டுப் போகாம புத்தகம் படிக்கிறானே... அதுவரைக்கும் சந்தோஷம்தான்."

"அதுக்கில்லடா. இப்படியே வளந்து, இவன் கம்யூனிஸ்ட்டாயிட்டான்னா?"

"ஆனா என்ன?" என்று கேட்ட எனக்கு ஒன்றும் புரியவில்லை.

அன்று இரவு சாப்பிட்டுக் கொண்டிருக்கும்பொழுது, கோபி டைனிங் ரூமினுள் நுழைந்தான். எனக்கு எதிரேயிருந்த சேரை இழுத்துப் போட்டு அமர்ந்து கொண்டு, "சாதம் போடுங்க" என்றான். அம்மா மௌனமாக தட்டை எடுத்து வைத்து சாதம் போட்டார்.

"வேர் இஸ் மை குட்டிப் பையன்?" என்று ஆர்ப்பாட்டமாகக் கேட்டபடியே அப்பா ரூமினுள் நுழைந்தார்.

"ஆமாம் குட்டிப் பையன். நல்லா எருமை மாதிரி வளந்து கம்யூனிஸ்ட் புத்தகம் படிச்சிக்கிட்டிருக்கு. இன்னும் குட்டிப் பையன்" என்றார் அம்மா.

"அவன் என்னைக்கும் எனக்கு குட்டிப் பையன்தாண்டி. குட்டி, உனக்கு என்ன வாங்கிட்டு வந்துருக்கேன் பாரு" என்று அப்பா கோபியின் கன்னத்தை பிடித்துக் கிள்ளினார்.

அவன் எரிச்சலாகக் கண்களை மூடித் திறந்தான்.

அம்மா என்னிடம் கிசுகிசுப்பாக, "அவன்கிட்ட கேளுடா" என்றார்.

"என்ன கோபி... கம்யூனிஸ்ட் புத்தகமெல்லாம் படிக்க ஆரம்பிச்சுட்ட?" என்றேன்.

"ஆமாம்" என்றான் கோபி.

"என்ன திடீர்னு இதுல இன்ட்ரஸ்ட்."

"சும்மா தோணுச்சு. படிக்கிறேன்."

"நீ எந்த கம்யூனிஸ்ட்? இந்திய கம்யூனிஸ்ட்டா? மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட்டா?"

"இந்தியாவுல இருக்கறதெல்லாம் கம்யூனிஸ்ட் கட்சியே கிடையாது. இந்திய கம்யூனிஸ்ட் தலைவர்கள் குற்றச்சாட்டு எதுவுமில்லாம ஒழுக்கமா இருக்காங்க. அவ்வளவுதான்."

"ஏன் கம்யூனிஸ்ட் கட்சியே இல்லங்குற? எனக்கு கம்யூனிசத்தைப் பத்தித் தெரியாது. அதான் கேக்குறேன்."

"இவங்க அநியாயத்த எதிர்த்து மக்கள திரட்டி புரட்சி செய்யணும். என்னக்கி இவங்க பார்லிமென்ட் டெமாக்ரஸிய ஏத்துக்கிட்டாங்களோ அப்பவே இங்க

## ஹாலிவுட்டில் உதயமான கியூ டீ.வி!

"ஜீன்ஸ் படத்தின் ஷூட்டிங்குக்காக ஹாலிவுட் சென்றிருந்தபோது, அங்கே ஐஸ்வர்யா ராய்க்கு ஒரு வித்தியாசமான கௌரவம் அளிக்கப்பட்டது. நகர மேயரின் இருக்கையில் அவரை அமர்த்தி, கையில் ஒரு சாவியைக் கொடுத்தார்கள். இந்த சம்பவம் பற்றி யோசித்துக் கொண்டிருந்த போதுதான், நம் ஊரில், முதலமைச்சர் நாற்காலியில் ஒரு நாள் அமரும் வாய்ப்பு ஒரு சாமானியனுக்குக் கிடைத்தால்? என்ற பொறி தட்டியது. யோசித்தேன். தேர்தலில் ஜெயித்து முதல்வராகாமல், வேறு எப்படி ஆக முடியும்? இருவருக்குமிடையில் நேரடி மோதல்–சவால்– அதில் முதல்வருடன் மோதுவது யார்? ஒரு அதிகாரி அல்லது பத்திரிகையாளன். அதிகாரி என்றால் புதுசாய் இருக்காது. ஆகவே பத்திரிகையாளன். வெறும் பத்திரிகையாளன் என்பதைவிட, சாடிலைட் சேனல்கள் நிறைய இருக்கும் இன்றைய சூழ்நிலையில் டீ.வி. ரிப்போர்ட்டர் என்றால் இன்னும் நன்றாக இருக்கும். கற்பனையில் அடுக்கிக் கொண்டே போனேன். இப்படி உருவானதுதான் முதல்வன் படத்தில் வரும் அர்ஜுன் கேரக்டர்" என்கிறார் டைரக்டர் ஷங்கர்.



அந்தப் படத்தில் அர்ஜுன் பணியாற்றும் தனியார் டீ.வி. நிறுவனத்துக்கு ஏன் கியூ டீ.வி. என்று பெயர்...?

"ஆங்கில எழுத்துக்களுள் வித்தியாசமானது Q. Question என்ற சொல்லின் முதல் எழுத்து. கேள்விகள் எழுப்பும் சேனல் என்று குறிக்கவே அந்தப் பெயர்" என்கிறார் ஷங்கர்.

– மௌனி

கம்யூனிசம் செத்துபோயிருச்சு. இவங்க கம்யூனிசம் எனக்குப் புரியல."

"இந்த நாட்டுச் சூழல்ல இங்க இருக்கற கம்யூனிஸ்ட் கட்சிகள் இப்படித்தான் இயங்க முடியும். வேற வழியில்ல. சரி அத விடு. அப்பன்னா நீ எந்தவிதமான கம்யூனிஸ்ட்?"

"எந்த கம்யூனிஸ்ட்டும் கிடையாது. புத்தகம் படிக்கிறேன். கம்யூனிசம்தான் உலகத்துக்கு நல்லதுன்னு நினைக்கிறேன்."

"ரஷ்யாவிலேயே கம்யூனிசம் ஃபெயிலியராயிடுச்சு."

"அது கம்யூனிசத்தோட தப்பு இல்ல. அதை நடைமுறைப் படுத்தினவங்களோட தப்பு. கடைசியா கோர்பசேவோட தப்பு. எனக்கு நல்ல நம்பிக்கை இருக்கு. இப்ப தோத்துப் போன கம்யூனிசத்துலேயிருந்து, பாடம் கத்துக்கிட்டு இன்னும் வலுவா வரும். ஆனா அதுக்கு பல நூறு வருஷங்கள் ஆகும்'' என்று உணர்ச்சிவசப்பட்டுப் பேசி முடித்தான் கோபி.

ஆணித்தரமான அவன் பேச்சைக் கண்டு நாங்கள் எல்லோரும் வாயடைத்துப் போயிருந்தோம். அம்மா தாடையில் கையை வைத்துக் கொண்டு, அவனை பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தார். அப்பா "பாத்தியா என் குட்டிப்பையனை?" என்பது போல் என்னைப் பார்த்துச் சிரித்தார்.

அம்மாதான் சுதாரித்துக் கொண்டு, "நீயேதான் இது மாற பல நூறு வருஷமாகும்னு சொல்ற. இப்ப ஏன் இந்த புத்தகமெல்லாம் படிச்சுக்கிட்டிருக்க?" என்றார்.

கோபிக்கு சட்டென்று கோபம் வந்தது. "ஏன் படிச்சா என்ன?" என்றான்.

யாரும் பதில் சொல்லவில்லை. அவனே தொடர்ந்து, "இவன் தி. ஜானகிராமன், அசோகமித்திரன் படிக்கற மாதிரி நான் கம்யூனிசம் படிக்கிறேன். எனக்குத் தெரியும். உங்களுக்கு இதெல்லாம் பிடிக்காது. ஏன்னா பாட்டாளி வர்க்கத்தப் பத்தி, தொழிலாளி வர்க்கத்தப் பத்தியெல்லாம் உங்களுக்கு அக்கறை கிடையாது."

**கா**லம்தான் ஒரு மனிதனிடத்தில் எவ்வளவு மாற்றங்களைக் கொண்டு வருகிறது? இரண்டு வருடத்திற்கு முன்பு வரை, சிரிப்பும், கூத்தும், ரஹ்மான் பாட்டுமாக இருந்த பையன், எவ்வளவு பெரிய வார்த்தைகளைப் பேசுகிறான்.

நீண்ட நாட்கள் கோபி அப்படித்தான் இருந்தான். அந்த இளவயசுக்குரிய பையன்கள் போல் இருக்கவில்லை. நண்பர்களோடு பைப்படியில் அமர்ந்து, "சினிமா பாட்டு பாடவில்லை. டீக்கடையில் நண்பர்களுடன் மணிரத்னம் சினிமா குறித்து விவாதிப்பதில்லை. ஜீன்ஸ் பேண்ட் வேண்டும் என்று அடம்பிடிப்பதில்லை.

இப்படியே இருந்த அவன் வாழ்க்கையில் காலம் மீண்டும் மாற்றங்களைக் கொண்டு வந்தது. பேங்கில் லோன் வாங்கி, எலக்ட்ரானிக்ஸ் சாதனங்களுக்கு, உதிரிப் பொருள்கள் தயாரிக்கும் ஒரு சின்ன ஃபாக்டரி ஆரம்பித்தான். திடீரென்று எலக்ட்ரானிக்ஸ்

## போச்சு நிலா டீ.வி; வருமா இதயம் டீ.வி?

**ஒ**ளிபரப்பு நின்று போய்விட்ட நிலா டீ.வியை சுமார் மூன்றரைக் கோடி ரூபாய் முதல் போட்டு, ஆரம்பித்தவர் பகுஜன் சமாஜ் கட்சியின் தமிழ்நாடு கிளை தலைவரான பிசினஸ் பிரமுகர் தேவநாதன்தான்! இவர் கடந்த முறை வட சென்னையில் போட்டியிட்டுத் தோல்வி அடைந்தவர்.

சரி! ஒளிபரப்பு நின்று போனது ஏன்? பணத்தட்டுப்பாடுதான் காரணம். குறைந்த பட்சம் எட்டுக் கோடி தேவையாம் ஒரு சானல் ஆரம்பித்து நடத்த!

**இ**தயம் பேசுகிறது பத்திரிகை நடத்தும் சரவணா ஸ்டோர்ஸ்காரர்களுக்கு ஒரு தமிழ் சேனல் ஆரம்பிக்கும் எண்ணம் இருக்கிறதாம். பத்திரிகை, டீ.வி. இரண்டு மீடியாவிலும் புகுந்து கலக்கிவிட வேண்டும் என்ற எண்ணத்துடன் இருந்தவர்கள், பத்திரிகையின் வளர்ச்சி எதிர்பார்த்த வேகத்தில் இல்லாததால், சேனல் ஐடியாவைத் தள்ளிப்போட்டிருக்கிறார்களாம். ஆனாலும் அதை முற்றிலுமாகக் கைவிட்டுவிடவில்லை.

— பாரதி

## சட்டையில் ஆங்கிலம்; நிகழ்ச்சியில் நல்ல தமிழ்!

"ஏழெட்டு வயதில் குழந்தை இலக்கியங்களைப் படிக்க ஆரம்பித்த நான், தமிழில் ஏறத்தாழ எல்லா எழுத்தாளர்களது நாவல்களையும் படித்திருக்கிறேன்" என்கிறார் உமா. (வீட்டில் அபிராமி).

"ஜெயா டி.வி.யில் பேனா முனை நிகழ்ச்சியை வழங்க தமிழ் நூல்கள் நிறைய படித்த ஒருவர் தேவைப்பட்ட போது, என் அப்பாவின் நண்பர் ஒருவர் மூலமாக இந்த வாய்ப்புக் கிடைத்தது" என்கிறார்.

விரைவில், இந்த நிகழ்ச்சியில் தமிழ் எழுத்தாளர்களை பேட்டி காணவிருக்கும் உமாவின் தாத்தா, மிகப் பிரபல மான தமிழ் எழுத்தாளர். 'சித்திரப்பாவை' போல் உமா சிரிப்பதைப் பார்த்தாலே தெரியவில்லையா...?

## 'கட்' சொல்லத் தெரியாதா?

ஒரு சீனியர் நடிகர் நடிக்க, டிவி. சீரியல் ஒன்றின் படப்பிடிப்பு. அந்த சீனியர் நடிகர் நடந்து போக, அதை வேறு ஒருவர் பார்த்துக் கொண்டே நிற்பது போன்ற காட்சி. வசனம் ஏதும் கிடையாது. கேமரா ஓடத் தொடங்கி யது. எதிர்பாராமல், படப்பிடிப்புக் குழுவுக்குச் சம்பந்த மில்லாத ஒருவர், குறுக்கே வந்து விட்டார்!

காட்சியை இயக்கிக் கொண்டிருந்த டைரக்டர், "ஏய்... ஏய்... ஏய்.." என்று கத்தினார்!

திரும்பிப் பார்த்த நடிகருக்கு அசாத்திய கோபம் வந்து விட்டது! "கேமராவை நிறுத்த வேண்டுமென்றால் கட் சொல்ல வேண்டியதுதானே! அதை விட்டு விட்டு ஏய் என்று ஏன் கத்தறீங்க!" என்று சப்தம் போட்டு மூடு அவுட் ஆகி விட்டார்!

எப்படிப்பட்டவர்களெல்லாம் இன்று டிவி. சீரியல் இயக்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பதற்கு இது ஒரு உதாரணம்! கட்! கட்!

– மௌலி

சாதனங்களுக்கான டிமாண்ட் அதிகரிக்க, அவனுக்கு ஆர்டர்கள் வந்து குவிந்தன. எட்டே மாதத்தில் வெற்றிக்கொடியைப் பறக்கவிட்டான். படிப்பதற்கு நேரமில்லாத பிஸியான தொழிலதிபராகிவிட்டான். முதலாளிகள் போடும் ஆலன் ஷோலி சட்டை அணிகிறான். முதலாளிகள் சாப்பிடும் பெரிய ஹோட்டல்களில் சாப்பிட்டு விட்டு, "கீப் தி சேஞ்ச்" என்று வெய்ட்டரிடம் சொல்லிவிட்டு வருகிறான்.

கோபியின் வாழ்க்கையில் இப்படி மாற்றங்கள் நிகழ்ந்த பிறகு, அம்மாவுக்கு என்னிடம் சொல்வதற்கு விஷயங்கள் குறைந்து விட்டன. அம்மா இந்த முறை சொல்வதற்கு என்ன விஷயம் வைத்திருப்பார் என்று நினைத்துக் கொண்டே, திண்டிவனம் தாண்டியவுடன் தூங்கிப் போனேன்.

பஸ் வழியில் டிராஃபிக்கில் மாட்டி, ஊர் வந்து சேர காலை எட்டு மணியாகிவிட்டது.

நான் வீட்டினுள் நுழையும் பொழுது கோபி அவன் கம்பெனி மானேஜரிடம் கோபமாக பேசிக் கொண்டிருந்தான்.

"வேல செய்யறது நாப்பது பேரு. இதுக்கு ஒரு யூனியன் ஆரம்பிக்கிறானுங்களா?" என்றான் கோபி.

"ஆமாம் சார். ஆரம்பிச்சு போனஸ் கேக்கப்போறாங்களாம்."

"அடி செருப்பால... கம்பெனி ஆரம்பிச்சு ரெண்டு வருஷம் கூட ஆகல. அதுக்குள்ள போனஸ் கேக்குதா? யாரு... ரங்கசாமிதானே துள்றான். அவனை அழைச்சுட்டு வாங்க. நான் பேசிப் படிய வைக்கிறேன்."

"நான் பேசிப் பாத்துட்டேன் சார். கேக்க மாட்டேங்குறான்."

"நன்றிகெட்ட நாய்ங்க..." கோபி தொடர்ந்து பேசிக் கொண்டிருந்தான். ●

# பொன்னியின் செல்வன்

### ஏழாம் அத்தியாயம்

## வாலில்லாக் குரங்கு

மணிமேகலை சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தாள். தான் சற்று முன் கண்ட தோற்றம் வெறும் பிரமைதானா? அல்லது கனவில் கண்ட தோற்றமா? கனவாக இருந்தால் தான் தூங்கிக் கொண்டல்லவா இருக்க வேண்டும்? தன்னைத் தானே தொட்டுப் பார்த்துக் கொண்டாள். இல்லை; தான் தூங்கவில்லை. பழுவூர் இளைய ராணிக்காக ஆயத்தமாகியிருக்கும் அந்தப்புர அறை அல்லவா இது? பளிங்குக் கண்ணாடியில் தன் முகம் இதோ நன்றாகத் தெரிகிறது. அதோ குத்துவிளக்கு எரிந்து கொண்டிருக்கிறது. கண்ணாடிக்கு எதிரே சுவரை உற்றுப் பார்த்தாள். அங்கே ஒரு இரகசிய வாசல் இருப்பது அவளுக்குத் தெரியும். அதை வெளியிலிருந்தும் திறக்கலாம்; உள்ளிருந்தும் திறக்கலாம். மணிமேகலை அந்த இடத்தில் வந்து சுவர் ஓரமாக நின்று காதை சுவரோடு ஒட்டி வைத்து உற்றுக் கேட்டாள். அவ்விடத்தில் சுவரோடு சுவராக இருந்த இரகசியக் கதவு மரத்தினால் ஆனதுதான். ஆகையால் உள்ளே வேட்டை மண்டபத்தில் ஏதோ ஓசைப்பட்டது போல் கேட்டது.

அமரர் கல்கி

மணிமேகலை மெதுவாக இரகசியக் கதவைத் திறந்தாள். வேட்டை மண்டபத்தில் எட்டிப் பார்த்தாள். அந்த மண்டபத்தில் பெரும் பகுதியில் இருள் சூழ்ந்திருந்தது. ஒரு மூலையில் சிறிய அகல் விளக்கு எரிந்துகொண்டிருந்தது. திடீரென்று அச் சிறிய விளக்கின் ஒளி மங்கிற்று. அடுத்த கணம் முன் போல் பிரகாசித்தது. ஏதோ ஓர் உருவம் அவ் விளக்கின் முன்புறமாகக் குறுக்கே சென்றது போலிருந்தது. அக் காரணத்தினால்தான் விளக்கு ஒருகணம் மறைந்து அடுத்த கணம் பிரகாசித்திருக்க வேண்டும். அப்படி விளக்கை ஒரு கணம் மறைத்த உருவம் - அதன் முகம் - தான் சற்று முன் கண்ணாடியில் கண்ட முகம்தானா? அல்லது இதுவும் தன் சித்தக் கோளாறுதானா?

மணிமேகலை எட்டிப் பார்த்தபடியே கையைத் தட்டினாள். "யார் அங்கே?" என்று மெல்லிய குரலில் கேட்டாள். பதிலுக்கு ஒரு கனைப்புக் குரல் கேட்டது. வௌவால் ஒன்று, தான் மேல் கூரையில் தொங்கிய இடத்திலிருந்து கிளம்பி 'ஜிவ்'வென்று பறந்து போய், கூரையில் இன்னொரு இடத்தைப் பற்றிக்கொண்டு தொங்கிற்று. மறுபடியும் மிக மிக இலேசான இருமல் சத்தம்.

மணிமேகலை அவ் வாசற்படியில் நின்றபடியே "அடியே! சந்திரமதி!" என்று உரத்த குரலில் கூவினாள்.

"ஏன் அம்மா!" என்ற பதில் வந்தது.

"கை விளக்கு எடுத்துக்கொண்டு உடனே இங்கு வா!" என்றாள் மணிமேகலை.

சற்று நேரத்துக்கெல்லாம் ஒரு பணிப்பெண் கையில் விளக்குடன் வந்தாள்.

"இங்கேதான் நன்றாக விளக்கு எரிகிறதே? எதற்கு அம்மா, விளக்கு?"

"வேட்டை மண்டபத்துக்குள்ளே போய்ப் பார்க்க வேண்டும். ஏதோ ஓசை கேட்டது."

"வௌவால் இறகை அடித்துக் கொண்டிருக்கும், அம்மா! வேறு என்ன இருக்கப் போகிறது?"

"இல்லையடி! சற்று முன் இந்தப் பளிங்குக் கண்ணாடியில் பார்த்துக் கொண்டிருந்தேன். திடீரென்று என் முகத்துக்குப் பக்கத்தில் இன்னொரு முகம் தெரிந்ததடி!"

"அந்த முகம் எப்படி இருந்தது? மன்மதன் முகம் போல் இருந்ததா? அர்ச்சுனன் முகம் போல் இருந்ததா?" என்று கூறிவிட்டுப் பணிப்பெண் சிரித்தாள்.

"என்னடி, சந்திரமதி! பரிகாசமா செய்கிறாய்?"

"இல்லை, அம்மா, இல்லை! நீங்கள் அடிக்கடி கனவில் காண்பதாகச் சொல்வீர்களே? அவர்தான் இப்போது கண்ணாடியில் தோன்றினாரோ?"

"ஆமாமடி, சந்திரமதி! ஆனால் ரொம்ப ரொம்ப நிஜம் போலிருந்தது."

"எல்லாப் பெண்களுக்கும் இப்படித்தான் ஒரு சமயம் சித்தப் பிரமை பிடிக்கும். உங்களுக்கு இன்னும் இரண்டொரு நாள்தான் அப்படி இருக்கும். நாளைக்குக் காஞ்சியிலிருந்து வரும் இளவரசரைப் பார்த்து விட்டீர்களானால், அந்தப் பழைய முகம் அடியோடு மறந்து போய் விடும்."

"அது இருக்கட்டுமடி! இப்போது இந்த வேட்டை மண்டபத்துக்குள் போய்ப் பார்க்கலாம், வா!"

"வீண் வேலை, அம்மா! வேட்டை மண்டபத்தில் ஒரே தூசியும் துப்புமாக இருக்கும். சேலை வீணாய்ப் போய் விடும்."

"போனால் போகட்டுமடி!"

"இருமலும் தும்மலும் வரும். நாளைக்கு எல்லோரும் வரும் சமயத்தில்..."

"சும்மா வரட்டும்! வேட்டை மண்டபத்தை இப்போது சோதித்துப் பார்த்தேயாக வேண்டும். விளக்கை அசைத்து அணைத்து விடாமல் எடுத்து வா!"

இவ்விதம் கூறிக்கொண்டே மணிமேகலை வேட்டை மண்டபத்துக்குள் பிரவேசித்தாள். தோழியும் விளக்குடன்



என்று நீ மட்டும் என்னைப் பரிகாசம் செய்யவில்லையா?''

''ஒருவேளை உங்கள் கண்ணாடியில் தெரிந்த முகம் அந்தக் குரங்கின் முகம்தானோ என்னமோ! நாம் வந்த வாசலுக்கு நேரே இருக்கிறது. பாருங்கள்...! குரங்கு மறுபடியும் அசைகிறது!''

''சீச்சீ! உன் விளக்கின் நிழலடி! விளக்கின் நிழல் அசையும்போது அப்படிக் குரங்கு அசைவது போலத் தெரிகிறது. வா, போகலாம்! இங்கே ஒருவரையும் காணோம்!''

''அப்படியானால் அந்தக் குரங்கு முகம்தான். கண்ணாடியில் தெரிந்திருக்க வேண்டும். இல்லாவிடில் அதோ மேலே உட்கார்ந்திருக்கிறதே, அந்த ஆந்தையின் முகமாக இருக்கலாம். அது நம்மைப் பார்த்து எப்படி விழிக்கிறது, பாருங்கள்!''

''என்னை ஏன் சேர்த்துக் கொள்கிறாய்? உன் அழகைப் பார்த்துச் சொக்கிப் போய்த் தான் அந்த ஆந்தை அப்படிக் கண் கொட்டாமல் பார்க்கிறது!''

''பின்னே, தங்களைக் கண்ணாடியில் எட்டிப் பார்த்த முகம் யாருடைய முகமாயிருக்கும்?''

''அடியே! எனக்குத்தான் சித்தப்பிரமை என்று நீ முடிவு கட்டி விட்டாயே? என் கனவில் அடிக்கடி தோன்றும் முகம் கண்ணாடியிலும் தோன்றியிருக்கலாம். அந்தச் சுந்தர முகத்தைப் பார்த்த கண்ணால் இந்தக் குரங்கையும் ஆந்தையையும் பார்க்க வேண்டி வந்ததே என்று எனக்குக் கஷ்டமாயிருக்கிறது. வாடி, போகலாம்! கண்ணாடியில் இன்னொரு தடவை அந்த முகம் தெரியுமா என்று பார்க்கிறேன்...!

இரண்டு பெண்களும் மறுபடியும் அவளைத் தொடர்ந்து வந்தாள்.

இருவரும் சுற்றிப் பார்த்துக் கொண்டே வந்தார்கள். சந்திரமதி கையிலிருந்த தீபத்துக்கு மேலாக நோக்கி உயிர் அற்ற மிருகங்களை மட்டும் பார்த்துக்கொண்டே வந்தாள். மணிமேகலையோ சில சமயம் தரையிலும் பார்த்தாள். தரையில் படிந்திருந்த புழுதியில் அங்குமிங்கும் கால் சுவடுகள் இருந்ததைக் கவனித்துக் கொண்டாள்.

''அம்மா! அதோ!'' என்றாள் சந்திரமதி.

''என்னடி இப்படிப் பதறுகிறாய்?''

''அதோ அந்த வாலில்லாக் குரங்கு அசைந்தது போலிருந்தது!''

''உன்னைப் பார்த்து அதன் சந்தோஷத்தைத் தெரியப்படுத்தியதாக்கும்?''

''என்ன அம்மா, என்னைக் கேலி செய்கிறீர்களே?''

''நான் பிரமை பிடித்து அலைகிறேன்



வந்த வழியே புகுந்து அந்தப்புர அறைக்குள்ளே போனார்கள்.

வில்லாக் குரங்குக்குப் பின்னாலிருந்து வந்தியத்தேவன் வெளியில் வந்தான். இரண்டு மூன்று தடவை தும்மி மூக்கில் புகுந்திருந்த தூசி துப்பைகளைப் போக்கிக்கொண்டான்.

தன்னை அவ்வளவு நன்றாக மறைத்திருந்த வாவில்லாக் குரங்குக்குத் தனது நன்றியைச் செலுத்தினான்.

"ஏ குரங்கே! நீ வாழ்க! அந்தப் பணிப் பெண் என் முகத்தை உன் முகத்தோடு ஒப்பிட்டாள். அப்போது எனக்குக் கோபமாய்த்தான் இருந்தது. வெளியில் வந்து விடலாமா என்றுகூட எண்ணினேன். நல்லவேளையாய்ப் போயிற்று. மனத்தை அடக்கிக்கொண்டேன். நீ மட்டும் இங்கே ஆள் உயரத்துக்கு நின்றிரா விட்டால் என் கதி என்ன ஆகியிருக்கும்? அந்தப் பெண்களிடம் அகப்பட்டுக் கொண்டிருப்பேன்! குரங்கே! நீ நன்றாயிருக்க வேணும்!"

இப்படிச் சொல்லி முடிக்கும்போதே, அந்தப் பெண்களிடம் அகப்பட்டுக் கொண்டிருந்தாலும் அப்படி ஒன்றும் விபரீதமாகப் போயிராது என்ற எண்ணம் அவன் மனத்தில் தோன்றியது. அவர்கள் யார் என்பதை முன்னமே ஊகித்துக்கொண்டிருந்தான்.

அவர்கள் பேசிய வார்த்தைகள் யாவும் அவன் காதில் நன்றாய் விழுந்தன. அதிலும் மணிமேகலை

உரத்த குரலில் கணீர் என்று பேசினான். கனவில் கண்ட முகத்தைப் பற்றியும் கண்ணாடியில் பார்த்த முகத்தைப் பற்றியும் அவள் ஏதோ பேசினாளே, அது என்ன? பழைய சம்பவங்கள் அவனுக்கு நினைவு வந்தன. கந்தமாறன் அடிக்கடி இவளிடம் தன்னைப் பற்றிப் பேசியிருப்பதாகச் சொல்லியிருக்கிறான். முன் தடவை இந்த மாளிகைக்கு வந்திருந்தபோது அவளை அரை குறையாகப் பார்த்துச் சென்றதும், கந்தமாறன் அவளை வேறு பெரிய இடத்தில் மணம் செய்து கொடுக்கப் போவதாகச் சொன்னதும் ஞாபகத்துக்கு வந்தன. இந்தப் பேதைப் பெண் ஒருவேளை அவளுடைய மனத்தை மாற்றிக் கொள்ளாமல் இருக்கிறானா, என்ன...?

அதைப் பற்றி யோசிப்பதற்கு இப்போது நேரம் இல்லை. வெளியேறும் வழியைப் பார்க்க வேண்டும். யானைத் தந்தப் பிடியுள்ள வழி அந்தப் புரத்துக்குள் போகிறது. ஆகையால் அது தனக்குப் பயன்படாது. தான் வந்த வழியைத்தான் தேடிப் பிடிக்க வேண்டும். இரகசிய வழிகளின் கதவுகளை உள்ளேயிருந்து திறப்பதற்கும் வெளியிலிருந்து திறப்பதற்கும் வெவ்வேறு முறைகள் உண்டு என்பது அவனுக்குத் தெரிந்ததே. திறப்பது எப்படி என்று கஷ்டப்பட்டுக் கண்டு பிடிக்கலாம். ஆனால் இரகசிய வழி எங்கே இருக்கிறது என்று தெரிந்தால் அல்லவா திறப்பதற்கு வழி கண்டு பிடிக்கலாம்? சுவரை எவ்வளவு உற்றுப் பார்த்தாலும் ஒன்றும் தெரியவில்லை. வெளிச்சமும் போதவில்லை. தான் புகுந்த இடத்துக்குப் பக்கத்தில் முதலை ஒன்று கிடந்தது என்பது அவன் நினைவுக்கு வந்தது. அங்கே போய் அருகிலுள்ள சுவர்ப் பகுதியையெல்லாம் தடவிப் பார்த்தால், ஒருவேளை வெளியேறும் வழி புலப்படலாம்.


வ்வாறு நினைத்து முதலைக்கு அருகில் சென்று சுற்றுப் பக்கத்துச் சுவரையெல்லாம் தடவித் தடவிப் பார்த்தான். ஒன்றும் பயன் படவில்லை. நேரமாக ஆகக் கவலை அதிகரித்து வந்தது. இது என்ன தொல்லை? நன்றாக இந்தச் சிறைச்சாலையில் அகப்பட்டுக் கொண்டோமே? கடவுளே! அந்தப்புரத்துக்குள் புகுவதைத் தவிர வேறு வழி இல்லை போலிருக்கிறதே! அப்படி அந்தப் புரத்துக்குள் புகுந்தால் அதில் எத்தனை அபாயங்கள்! ஒருவேளை மணிமேகலை தன்னிடம் அனுதாபம் காட்டலாம். ஆயினும் அவளிடம் தான் இங்கே இப்படி இரகசியமாக வந்ததற்கு என்ன காரணம் சொல்வது? ''உன்னிடம் கொண்ட காதலினால் வந்தேன்!'' என்று சொல்லலாமா? அது எவ்வளவு கொடூரமான பொய்யாயிருக்கும்? துணிந்து அத்தகைய பொய் சொன்னாலும் அவள் நம்புவாளா? மணிமேகலை மட்டும் தனியாக இருப்பாள் என்பது என்ன நிச்சயம்? மற்றப் பெண் பிள்ளைகளுக்கிடையில் அகப்பட்டுக் கொண்டால்...? சம்புவரையர் அறிந்தால் கட்டாயம் தன்னைக் கொன்றே போடுவார்!

மறுபடியும் வந்தியத்தேவனுடைய கவனம் தரையில் கிடந்த முதலையின் மீது சென்றது. அதன் பேரில் அவனுக்குக் கோபம் வந்தது. ''முதலையே! எதற்காக இப்படி வாயைப் பிளந்து கொண்டே இருக்கிறாய்!'' என்று சொல்லிக்கொண்டே அதை ஓங்கி ஓர் உதை உதைத்தான். உதைத்த போது முதலை கொஞ்சம் நகர்ந்தது. அதே சமயத்தில் சுவர் ஓரமாகத் தரையில் ஒரு சிறிய பிளவு தெரிந்தது!

''ஆகா! நீதானா வழியை அடைத்துக்கொண்டிருக்கிறாய்? முட்டாள் முதலையே! முன்னாலேயே சொல்வதற்கு என்ன?'' என்று சொல்லிக் கொண்டே வந்தியத்தேவன் குனிந்து முதலையைப் பிடித்து நகர்த்தினான். முதலை நகர நகரச் சுவர் ஓரத்தில் துவாரம் பெரிதாகி வந்தது. கீழே படிகளும் தெரிந்தன.



எட்டாம் அத்தியாயம்

## இருட்டில் இரு கரங்கள்!

கடம்பூர் அரண்மனையில் இரகசிய வழிகளின் வாசல்கள் எவ்வளவு சாமர்த்தியமாக அமைக்கப் பட்டிருக்கின்றன என்பதை எண்ணி வந்தியத்தேவன் வியந்தான். அரை குறையாக அவற்றைக் குறித்து அறிந்தவன் அவசரமாக இறங்கவோ ஏறவோ முயன்றால் அபாயம் நேரலாம். பாதிப் படிகளில் இறங்கும்போது முதலை நகர்ந்து விட்டால் சுவர் இடுக்கில் அகப்பட்டுக் கொண்டு திண்டாட வேண்டியதாகும்.

முதலை அசையாமல் நிற்கிறதா என்று நிதானித்துப் பார்த்து விட்டு, வந்தியத்தேவன் துவாரத்தண்டை வந்து கீழே கால் வைக்கப் போனான். ஆ! அது என்ன? பில வழியில் காலடிச் சத்தம் கேட்கிறதே! வருகிறது யார்! ஒருவேளை ஆழ்வார்க்கடியானாயிருக்குமோ?

தன்னைத் தேடி வருகிறானோ? அவன் இங்கு சேராமல் தடுத்து விடுவதே நல்லது. இல்லை, இல்லை! வருகிறவன் ஒருவன் இல்லை. ஐந்தாறு பேர் வருவது போல் காலடிச் சத்தம் கேட்கிறது. அப்படி யானால், இடும்பன்காரியும் அவனுடைய கூட்டாளிகளுமாயிருக்கலாம். வந்தியத் தேவன் ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சென்று மறுபடியும் வாலில்லாக் குரங்கின் பின்னால் மறைந்துகொண்டான். ஆகா! இரகசிய வழியைத் திறந்து வைத்து விட்டு வந்து விட்டோமே? அதனால் ஏதேனும் சந்தேகம் ஏற்படுமோ? இல்லை, இல்லை! நாம் வரும்போது அந்த வழி திறந்து தானிருந்தது. நாம் மேற்படியில் ஏறிய பிறகுதான் வழி மூடிக்கொண்டது! ஆகை யால் திறந்திருப்பதே நல்லதாய்ப் போயிற்று. அதோ, துவாரத்தின் வழியாகத் தலை ஒன்று தெரிகிறது. இடும்பன்காரி யின் தலைதான்! இதோ மேற்படியில் ஒரு காலை வைத்து நின்று சுற்று முற்றும் அவன் பார்க்கிறான். ஒரு கால் மட்டும் கீழே இருக்கிறது. துவாரம் தானாக மூடிக் கொள்ளாமல் இருக்கும் பொருட்டு அப்படி அவன் ஒரு காலைக் கீழ்ப்படியில் வைத்துக்கொண்டிருக்கிறான் போலும்!

அடடே! இந்தப் பக்கத்தில் என்ன வெளிச்சம்! சுவரில் யானை முகம் இருந்த இடத்தை விட்டுப் பெயர்கிறதே! அந்தப் புர வழி புலப்படுகிறதே! அந்த வாசல் வழி யாக வருகிறது யார்? அதோ மணி மேகலையல்லவா தானே கையில் விளக்கு ஏந்திக்கொண்டு வருகிறாள்?

இடும்பன்காரி ஒரே பாய்ச்சலில் மேலேறி வருகிறான். அவன் வந்த வழி மூடிக் கொள்கிறது. இடும்பன்காரி தன் தலைப்பாகைத் துணியை எடுத்துக் கொண்டு அருகிலேயிருந்த புலியின் மேலுள்ள தூசை அவசரமாகத் தட்டத் தொடங்குகிறான்! இந்த நாடகத்தின் முடிவுதான் என்ன?

மணிமேகலை கை விளக்கைத் தூக்கிப் பிடித்து நாலுபுறமும் பார்த்தாள். இடும்பன்காரியின் மீது அவள் பார்வை விழுந்ததும் அவனை அதிசயத்துடன் நோக்கினாள்.

இடும்பன்காரி தூசு தட்டுவதை நிறுத்தி விட்டுப் பதிலுக்கு மணிமேகலையை வியப்புடன் பார்த்தான்.

"தாயே! இது என்ன? இந்த வேளையில் இங்கு எதற்காக வந்தது?" என்றான்.

"இடும்பா! நீதானா? என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என்று மணிமேகலை வினவினாள்.

"அம்மா! நாளை வருகிற விருந்தாளி களை இந்த வேட்டை மண்டபத்துக்கு அழைத்து வந்து காட்ட வேண்டியிருக்கு மல்லவா? அதற்காகச் சுத்தம் செய்து கொண்டிருக்கிறேன். சின்ன எஜமான் காஞ்சிக்குப் போகும்போது அவ்விதம் கட்டளையிட்டுச் சென்றார்கள்."

"ஆம், இடும்பா! இந்த அரண்மனை யிலேயே சின்ன எஜமானுக்கு உன்னிடமும் என்னிடமுந்தான் நம்பிக்கை. பழுவூர் ராணியம்மாள் தங்கப் போகிற அறையில் ஏற்பாடு சரியாயிருக்கிறதா என்று பார்த் துக்கொண்டிருந்தேன். அப்போது இங்கே என்னமோ சத்தம் கேட்டது. நீயாகத்தான் இருக்கும் என்று நினைத்தேன். வேறு யாருக்கு இந்த அரண்மனையின் இரகசிய வழிகள் தெரியும்? எத்தனை நேரமாக நீ இங்கே வேலை செய்துகொண்டிருக் கிறாய்?"

"ஒரு நாழிகைக்கு மேலே இருக்கும், தாயே! இன்னும் ஒரு நாழிகை வேலை இருக்கிறது. தாங்கள் தனியாகவா இங்கே வந்தீர்கள்? அந்த வாயாடிப் பெண் சந்திர மதி எங்கே?"

"ஏதோ சத்தம் கேட்கிறது என்று நான் அவளைப் போய்த் தந்தையை அழைத்து வரச் சொன்னேன். நீதானே இங்கு இருக் கிறாய்? நான் போய் அவளைத் தடுத்து நிறுத்தி விடுகிறேன்."



இவ்விதம் சொல்லிக் கொண்டே மணிமேகலை விளக்கைத் தூக்கிப் பிடித்து இடும்பன் காரியின் முக மாறுதலைக் கவனித்தாள். அடுத்தாற்போல், வாலில்லாக் குரங்கை நோக்கினாள். முன் னொரு தடவை அசைந்தது போல் அது அசைந்ததையும் பார்த்துக்கொண்டாள்.

"ஆம், தாயே! எஜமானுக்கு இன்று எவ்வளவோ அலுவல். தாங்கள் போய் அவரைக் கூப்பிட வேண்டாம் என்று சொல்லி விட்டு நிம்மதியாகப் படுத்துக் கொள்ளுங்கள். எல்லா வேலைகளையும்

நானே பார்த்துக் கொள்கிறேன்" என்றான் இடும்பன்காரி.

மணிமேகலை மறுபடியும் வந்த வழியே உள்ளே போனாள். இரகசியக் கதவு மூடிக் கொண்டது.

இடும்பன்காரி யானை முகத்தினருகில் சென்று சற்று நேரம் சுவரண்டை காது கொடுத்து உற்றுக் கேட்டான். அடுத்த அறையில் சத்தம் ஒன்றும் இல்லை என்று நிச்சயம் அடைந்த பிறகு திரும்பி வந்தான். பிலத் துவாரத்தைத் திறந்து வைத்துக் கொண்டு இடுப்பு வரை கீழே படிகளில் இறங்கி நின்றுகொண்டான்.

பிலத்துவாரத்தின் உட்புறமிருந்து ஆந்தையின் குரல் கேட்டது. பதிலுக்கு இடும்பன்காரி ஆந்தைக் குரல் ஒன்று கொடுத்தான்.

பில வழியில் ஆட்கள் நடந்து வரும் சத்தம் கேட்டது.

பின்னர் காரியங்கள் வெகு துரிதமாக நடைபெற்றன.

வௌவால் ஒன்று சடசடவென்று சிறகை அடித்துக்கொண்டு பறந்தது.

இடும்பன்காரி அதைப் பார்த்தான்.

பின்னாலிருந்து அவன் பேரில் வாலில்லாக் குரங்கு தடால் என்று விழுந்தது.

அது திடீரென்று விழுந்த வேகத்தினால் இடும்பன்காரியின் முழங்கால்கள் மடிந்து அவன் தடுமாறினான். அதனால் இன்னும் இரண்டு படிகள் அவன் கீழே இறங்க வேண்டியதாயிற்று.

தன் பேரில் விழுந்தது இன்னதென்று முதலில் இடும்பன்காரிக்குத் தெரியாமையால் அவன் உளறி அடித்துக்கொண்டு கைகளை வீசி உதறினான்.

பிறகு, உயிரற்ற வாலில்லாக் குரங்கு எப்படியோ தவறித் தன் பேரில் விழுந்திருக்கிறது என்று தெரிந்தது. மனத்தைத் தைரியப்படுத்திக்கொண்டு அதைத் தூக்கி நிறுத்தப் பார்த்தான்.

இதற்குள் உயிருள்ள மனிதனுடைய கரங்கள் போன்ற இரண்டு கரங்கள் மேலேயிருந்து துவாரத்துக்குள் வந்து அவனை இன்னும் கீழே தள்ளி அமுக்கின.

இடும்பன்காரியினால் அதை நம்பவே முடியவில்லை. ஒரு கணம் அவனைப் பெரும்பீதி பிடித்துக்கொண்டது.

மறுபடியும் மேலும் கீழும் பார்த்தான். வாலில்லாக் குரங்கு தலைகீழாகத் துவார வழியில் இறங்கியிருப்பதையும், அதன் பாதி உடம்பு வரையில் கீழே வந்த பிறகு துவாரக் கதவு நெருங்கி வந்திருப்பதையும் கவனித்தான்.

இரண்டு மனிதக் கரங்களாகத் தோன்றியவை தன்னுடைய மனப் பிராந்தியாகத்தான் இருக்க வேண்டும் என்று நிச்சயம் செய்துகொண்டான்.

இதற்குள் பிலத்துவாரத்தில் வந்தவர்கள் நெருங்கி வந்து விட்டார்கள். முன்னால் வந்த ரவிதாஸன், "அப்பனே! என்ன இது? எதற்காக இப்படி உளறி அடித்துக்கொண்டு அலறினாய்? அபாயம் ஏதேனும் உண்டா? நாங்கள் திரும்பிப் போகவா?" என்று கேட்டான்.

"வேண்டாம், வேண்டாம்! அபாயம் ஒன்றுமில்லை. பிலத் துவாரக் கதவைத் திறக்கும்போது, இந்த ராட்சதக் குரங்கு எப்படியோ இடம் பெயர்ந்து என் தலையில் விழுந்து விட்டது! ஒரு கணம் நானும் பீதி அடைந்து விட்டேன். இப்போது இந்தக் குரங்கு மேலேயும் போகாமல் கீழேயும் வராமல் வழியை அடைத்துக்கொண்டிருக்கிறது. கொஞ்சம் பொறுங்கள்; இந்தக் குரங்கை அகற்றி வழியைச் சரிப்படுத்தி விடுகிறேன்" என்றான் இடும்பன்காரி.

இடுமாறி விழுந்த இடும்பன்காரியை மேலேயிருந்து அமுக்கித் தள்ளிய கரங்கள் யாருடைய கரங்கள் என்பதை நேயர்கள் ஊகித்திருப்பார்கள். வந்தியத்தேவனுடைய அதிர்ஷ்டம் இச் சந்தர்ப்பத்திலும் அவன் பக்கம் இருந்தது. சரியான சமயத்தில் அவனுக்குச் சரியான யுக்தி தோன்றியது. இடும்பன்காரி பிலத்துவாரத்தின் படிகளில் நின்றபடி வௌவாலைப் பார்த்த தருணத்தில் அவன் தலை மீது வாலில்லாக் குரங்கைத் தள்ளினான். பிறகு அவன் தன்னுடைய முகத்தைப் பார்க்க முடியாதபடி நின்று கொண்டு கைகளினால் அவனைப் பிடித்துக் கீழே அமுக்கினான். அதன் பின்னர் வாலில்லாக் குரங்கையும் தலை கீழாகத் துவாரத்தினுள் தள்ளினான். கடைசியாக, முதலையையும் நகர்த்தி விட்டான்.

இவ்வளவையும் சில கண நேரத்தில் செய்து முடித்துவிட்டு வந்தியத்தேவன் யானை முகத்தண்டை ஓடினான்.

யானைத் தந்தங்களைப் பிடித்துத் தன் பலங்கொண்ட மட்டும் அழுத்தித் திருப்பினான்.

சுவரில் வழி உண்டாயிற்று. ஆனால் மணிமேகலை உள்ளிருந்து வந்தது போன்ற விசாலமான வழி அல்ல. வட்ட வடிவமான குறுகலான வழி. அது கதவுக்குள் கதவாயிருக்கலாம். முழுக் கதவையும் திறப்பது எப்படி என்று யோசிக்க அது சமயம் அல்ல. அதற்குள் சதிகாரக் கூட்டம் வேட்டை மண்டபத்துக்குள் புகுந்து விடலாம். பிறகு தான் தப்புவது துர்லபமாகி விடும்.

ஆகவே, திறந்த வழி குறுகலான வழியாக இருந்தாலும், அதற்குள் புகுந்து விட வேண்டியதுதான்.

தீர்மானித்தபடியே காரியத்தை நிறைவேற்றத் துணிந்து அந்த வட்ட வடிவமான துவாரத்தில் வந்தியத்தேவன் புகுந்தான். அவனுடைய தலையும் கைகளும் பாதி உடம்பும் உள்ளே வந்து விட்டன. மிச்சம் பாதி உடம்பு உள்ளே புகுவது பிரயாசையாயிருந்தது. கைகளினால் தாவிப் பிடித்துக் கொள்ள ஒன்றும் அகப்படவில்லை. இச் சமயத்தில் உள்ளேயிருந்த தீபம் அணைந்து இருள் சூழ்ந்தது.

வந்தியத்தேவன் அபயம் கேட்கும் குரலில் "சந்திரமதி! சந்திரமதி! என்னைக் காப்பாற்று!" என்றான்.

கலகலவென்று சிரிக்கும் பெண்ணின் குரல் கேட்டது.

"சந்திரமதி! நீ இங்கே இருந்து கொண்டு தானா வேடிக்கை பார்க்கிறாய்? இது நன்றாயிருக்கிறதா?"

அதற்குப் பதிலாக, மறுபடியும் சிரிப்பு. அதைத் தொடர்ந்து "நீ இப்படி அந்தப்புரத்தில் திருட்டுத்தனமாக நுழைவது மட்டும் நன்றாயிருக்கிறதா?" என்று ஒரு பெண்ணின் குரல் கேட்டது.

அது மணிமேகலையின் குரல் என்று வந்தியத்தேவன் தெரிந்துகொண்டான்.

ஆயினும் வேண்டுமென்றே "சந்திரமதி! நீ வரச் சொன்னதினால் தானே வந்தேன்! பின்னால் ஆட்கள் வருகிறார்கள். சீக்கிரம் என்னை எடுத்து விடு. இல்லாவிட்டால் விபரீதம் வரும்!" என்றான்.

"சந்திரமதி இவ்வளவு கெட்டிக்காரியா? இருக்கட்டும்; உனக்கும் அவளுக்கும் சேர்த்துப் புத்தி கற்பிக்கிறேன்!"

"ஓஹோ! தாங்கள் இளவரசி மணிமேகலையா? அம்மணி! இந்த ஒரு தடவை மட்டும் என்னை மன்னித்துக் காப்பாற்றி விடுங்கள்! இனி மேல் இம்மாதிரி தப்புக் காரியம் செய்ய மாட்டேன்! உங்களுக்குக் கோடி புண்ணியம் உண்டு!" என்று கெஞ்சினான் வந்தியத்தேவன்.

இருளில் இரு மெல்லிய கரங்கள் வந்தியத்தேவனுடைய தோள்களைப் பிடித்துத் தாங்கி, மெள்ள மெள்ளக் கீழே தரையில் இறக்கி விட்டன. சுவரில் தோன்றிய துவாரம் மூடிக்கொண்டது.

"இளவரசி! உங்களுக்கு அனந்தகோடி வந்தனம்!" என்றான்.

"கொஞ்சம் பொறு! நான் உன்னை என்ன செய்யப் போகிறேன் என்று தெரிந்துகொண்டு வந்தனம் செலுத்து!"

"தாங்கள் என்னை என்ன செய்தாலும் சரிதான்! கொலைகாரர்களிடமிருந்து என்னைத் தப்புவித்தீர்களே, அதுவே போதும்! அந்த அரக்கர் கைகளினால் சாவதைக் காட்டிலும் தங்களுடைய மணிக்கரத்தினால் சாகும்படி நேர்ந்தால் அது என்னுடைய பாக்கியந்தான்!"

"அடே அப்பா! பெரிய வீராதி வீரனாயிருக்கிறாயே? அப்படி உன்னைத் தேடி வரும் கொலைகாரர்கள் யார்? கொஞ்சம் பொறு! முதலில் விளக்கு ஏற்றி உன் முகம் எப்படியிருக்கிறது என்று பார்க்கிறேன்."

"அம்மணி! என் முகத்தை மறுபடியும் பார்க்க வேண்டுமா? தாங்கள் கண்ணாடியில் பார்த்துக்கொண்ட போது பின்னால் நின்று பார்த்த குரங்கு முகந்தான் என் முகம்! சந்திரமதிதான் வர்ணித்தாளே!" என்றான் வந்தியத்தேவன்.

இருட்டில் சிரிப்பின் ஒலியும் கை வளைகள் குலுங்கும் ஓசையும் கேட்டன.

வந்தியத்தேவன் அந்த அறைக்குள் தலையை நீட்டியபோது அந்த அறையில் எரிந்துகொண்டிருந்த விளக்கை மணிமேகலை மூடி விட்டாள். அதனால் இருட்டாயிற்று. இப்போது அதன் மூடியை அகற்றியதும் தீபம் சுடர் விட்டு ஒளிர்ந்தது. அதன் ஒளியில் வந்தியத்தேவனுடைய முகத்தைப் பார்த்த வண்ணம் மணிமேகலை மெய்மறந்து நின்றாள்.

பக்கத்து வேட்டை மண்டபத்திற்குள் தடதடவென்று பலர் பிரவேசிக்கும் சத்தம் அச்சமயம் கேட்டது.

(தொடரும்)

குழந்தை வீறிட்டு அழுதது. அவள் திடுக்கிட்டு விழித்துக் கொண்டாள். மணி 11:45. கண்கள் எரிந்தன. குழந்தையை வாரியணைத்து முதுகில் தட்ட ஆரம்பித்தாள்.

சாயந்திர நிகழ்ச்சிகள் ஞாபகம் வந்தன. ஏதோ ஒரு அல்ப விஷயத்திற்காக ஊரிலிருந்து வந்திருக்கும் மாமியாரிடம் சண்டை. அறிவுபூர்வமாக எழுந்த வாக்குவாதம் என்றால் சில நிமிடங்களில் வெற்றி, தோல்வி நிச்சயிக்கப்பட்டு அமைதி நிலவியிருக்கும். ஆனால் இரண்டு மனங்கள் சம்பந்தப்பட்ட விஷயம். 'ஈகோ'க்கள் விஸ்வரூபம் எடுத்ததால் சமாதானப் புறா பறக்க இடமே இல்லை. வழக்கம் போல் கணவரும், மாமனாரும் தலையிடவில்லை. 'உங்கள் பிரச்னையை நீங்கள் தான் தீர்த்துக் கொள்ள வேண்டும்' என்பது அவர்கள் அணுகுமுறை. எல்லோரும் பேருக்குச் சாப்பிட்டு விட்டுப் படுத்து விட்டார்கள்.

குழந்தை சட்டென்று அழுகையை நிறுத்த வேண்டுமே என்று மனம் பதைத்தது. சப்தம் கேட்டு மாமியார் எழுந்து வந்து, அவரிடம் குழந்தை சமாதானம் அடைந்து விட்டால், அது ஒரு அடையாளத் தோல்வியாக இருக்குமே என்ற பயம்! மாமனாரின் இருமல் சப்தம் கேட்டது.

''அழுகையை நிறுத்தேண்டா. என் மானத்தை வாங்கிடாதே!'' என்று அவசரமாக முணுமுணுத்தாள். தட்டலின் வேகத்தை அதிகரித்தாள்.

விழித்துக் கொண்ட கணவன், ''அம்மாவை வேணா கூப்பிடட்டுமா?'' என்றான்.

''ஒண்ணும் வேணாம். நீங்க பேசாம படுங்க!'' என்றபடி அறைக் கதவை மூடினாள்.

"எழுப்பினா என்ன?" என்றது பகுத்தறிவு. பெங்களூரிலிருந்து கணவனுக்கு டெல்லி ட்ரான்ஸ்ஃபர் ஆன பொழுது 'பாஷை தெரியாமல் கைக் குழந்தையுடன் கஷ்டப்படுவாயே' என்று உதவி செய்யத்தான் சென்னையிலிருந்து வந்திருக்கிறார்கள். மாமனார் சர்வீஸில் இருந்த பொழுது பல ஊர்களில் இருந்த அனுபவம். இருவரும் சரளமாக இந்தி பேசுவார்கள்.

குழந்தையும் அவர்களிடம் நன்றாக ஒட்டிக் கொண்






டான். தங்கள் உடல் சிரமங்களைப் பொருட் படுத்தாது குழந்தைக்குச் சமமாக விளையாடி னார்கள். மாமனாரின் வேலை பொருட்டு, வசதிகள் இல்லாத பல ஊர்களில் தன் ஒரே மகனை வளர்க்க பட்ட கஷ்டங்களைக் கூறி யுள்ளார் மாமியார். இன்னும் பத்து நாட் களில் சென்னை திரும்பி விடுவார்கள். கண வனும் வேலை விஷயமாக வெளியூர் சென்று, குழந்தையும் இப்படிப் படுத்தினால் என்ன செய்வது என்ற பயம் தோன்றியது. "இன்னும் கொஞ்ச நாள் இருந்து விட்டு போங்கள்" என்று எந்த முகத்தை வைத்துக் கொண்டு சொல்வது? நாம்தான் கொஞ்சம் விட்டுக் கொடுத்து, பெருந்தன்மையோடு நடந்து கொண்டால் என்ன என்று நினைத்துக் கொண்டாள்.

அழுகையின் தீவிரம் சற்று குறைந்ததே தவிர இன்னும் நிற்கவில்லை. ஒருவேளை வயிற்று வலியாக இருக்குமோ? அல்லது வேறு ஏதாவது உடம்புக்கு..? நாளைக்கு டாக்டரி டம் போகணும் என்றாலும் மாமியார் துணை யோடுதான் போகணும். புது வீட்டில்

**ரம்யா நாகேஸ்வரன்**

இன்னும் சாமான்களை கூட சரிவர அடுக்கி வைக்காத நிலையில், உடல் அலைச்சலுடன் இப்பொழுது மன உளைச்சல். லேசாகக் கண்ணீர் துளிர்த்தது.

"முருகா! நான் வயசானவங்க மனசு புண் படும்படியா நடந்திருந்தா மன்னிச்சுடப்பா. என் குழந்தையை தண்டிச்சுடாதே. என்னால தாங்க முடியாதப்பா!" கந்தசஷ்டி கவசம் சொல்ல ஆரம்பித்தாள். அழுகை நின்ற பாடில்லை.

"அம்மா, ஸாரிம்மா! கொஞ்சம் பட படன்னு பேசிட்டேன். இவனுக்கு கொஞ்சம் 'க்ரைப் வாட்டர்' கொடுத்துப் பார்க்கறீங் களா? ரொம்ப நேரமா அழறான். பயம்மா இருக்கு..." மனத்திற்குள் ஒத்திகை பார்த்துக் கொண்டே கதவை திறக்கப் போனாள்.

டக்கென்று அழுகை நின்றது. ஒரே சீராக மூச்சு விட்டபடி தூங்கிக் கொண்டிருந்தான் குழந்தை. மணி 11:58. பதின்மூன்று வருடங் களாக தோன்றிய பதின்மூன்று நிமிடங்கள்!

**கா**லையில் காப்பி போடுவதற்காக சமையலறையில் நுழைந்தாள்.

"குழந்தை ராத்திரி ரொம்ப அழுதான் போலிருக்கே" என்றார் மாமியார்.

"ம்ம். கொஞ்சம் அழுதான். நான் பத்தே நிமிஷத்துல சமாதானப்படுத்திட்டேனே!" வெடுக்கென்று வந்தது பதில்.

வெளியே மட்டும்தான் விடிந்திருந் தது.



# புண்ணிய காரியங்களை ஸங்கிராந்தியில் ஏன் அனுஷ்டிக்க வேண்டும் ?

மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரமமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் சூரிய பகவான்.

ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப் புண்ணிய காலங்களில் செய்கிற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம், முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் சூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

தேவலர் : ஸங்கராந்தி சமயம் சூட்க்ஷமமானது. நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸங்கரமணத்திற்கு முன்பு முப்பது பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குப்பலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்திராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மேஷம் | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயனம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுசு | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

- ஸம்க்ஷேப தர்மசாஸ்திரம்

# பாரதி இலக்கிய மகுடத்தில் ஒரு மயிலிறகு...

தமிழுக்கு திடீர் திடீரென்று சில அதிர்ஷ்டங்கள் அடிக்கும். நூறாயிரம் குப்பைப் புத்தகங்கள் காகிதத் தொழிற்சாலையின் கழிவுகளாய் வந்து குவியும்போது, அவற்றினிடையே பனிச்சென்று ஒரு நல்ல நூல் சிந்தனைக் கிளர்ச்சியை ஏற்படுத்தவென்றே மலரும். அப்படி மலர்ந்துள்ளதுதான் வேதங்களையும் பாரதி சிந்தனைகளையும் ஒப்பிட்டு எழுதப்பட்டுள்ள பெ. சு. மணியின் 'பாரதி இலக்கியத்தில் வேத இலக்கியத்தின் தாக்கம்' என்ற இந்த மணியான நூல். இவ்விதம் ஒரு நூல் எழுத வேண்டும் என்று நூலாசிரியரின் மனத்தில் தோன்றிய எண்ணமே கொண்டாடத்தக்கது.

தற்கால இலக்கியத்தின் ஆன்மிகத் தாக்கத்திற்கு, 'கணபதிராயன் அவனிரு காலைப் பிடித்திடுவோம்' எனப் பிள்ளையார் சுழி போட்டவர், புதுச்சேரி மணக்குள விநாயகரின் பக்தராயிருந்த பாரதியார்தான். ந. பிச்சமூர்த்தி, 'இதய நாதம்' சிதம்பர சுப்பிரமணியன், தி. ஜானகிராமன், சி. சு. செல்லப்பா, தருமூசிவராமு, வை. மு. கோதைநாயகி, திருவி.க., கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை, நாமக்கல் கவிஞர், ச.து.சு. யோகியார், என்றெல்லாம் தொடங்கி, சிட்டி, எம்.வி. வெங்கட்ராம் என இன்னும் தொடர்கிறது இலக்கிய ஆன்மிகவாதிகளின் பட்டியல்.

மகாகவியின் ஆன்மிகப் பரம்பரை, நாவல், சிறுகதை போன்றவற்றில் மட்டுமல்ல, மரபுக் கவிதை ஏன் புதுக்கவிதை போன்ற துறைகளிலும் கூடக் கிளைநதிகளாய்த் தொடர்ந்து பாய்கிறது.

இந்திய ஆன்மிகத்தின் 'மூலம்' வேதங்களும் உபநிடதங்களுமே. தாகூர் உள்பட இந்தியப் படைப்பாளிகள் பலரும் வேதச் சிந்தனைகளால் தாக்கம் பெற்றவர்கள்தான். பாரதியும் விதிவிலக்கல்லர். வேதங்களை ஆராய்ந்து தெளிந்து அதன் உண்மை உணர்ந்து போற்றிப் பின்பற்றியவர் பாரதி. வேதங்களுக்கான உரைகளில் காலப்போக்கில் கலந்துவிட்ட கசடுகளை மனச்சாட்சி என்ற உரைகல் கொண்டு உரசிப் பார்த்துச் சுட்டெரிக்கும் வல்லமை பெற்ற ஞானி அவர். மகாகவியின் இலக்கியத்தில் வேதச் செழுமையை உண்டாக்க அரவிந்தரின் கூட்டுறவும் உதவியுள்ளது. (காண்க: இந் நூலில் அத்தியாயம் ஆறு).

கட்டுரைகளில், கவிதைகளில், வசன கவிதைகளில் என பாரதி இலக்கியத்தில் வேத இலக்கியத்தின் தாக்கத்தை முப்பெரும் பகுப்புகளாக்கி ஆராய்கிறார் ஆசிரியர். ஏற்கெனவே ஆய்வு நூல்கள் பலவற்றை எழுதிய தேர்ச்சி, பாரதி இலக்கியத்தில் முக்குளித்த ஞானம், பண்பட்ட பட்டறிவு ஆகியவை கொண்டு நுண்மாண் நுழைபுலத்தின் மூலம் உண்மைகளை வெளிக் கொணர்கிறார்.



இந்தப் புத்தகத்தில், ஏராளமான இடங்களில் அவசியமற்ற சந்தர்ப்பங்களிலெல்லாம் ஒற்றெழுத்து தென்படுவது வியப்பளிக்கிறது. 'எடுத்துக்காட்டப் பெற்றச் சான்று' என்பது ஓர் எடுத்துக்காட்டு. (பக்.120). அடுத்த பதிப்பிலாவது இக்குறைகள் களையப்பட வேண்டும்.

வடசொல்லைத் தமிழாக்கும் போது ஏதாவது ஒரு சீரான பாணி பின்பற்றப்பட வேண்டும். நூலெங்கும் 'ரிக் வேதம்' ரிக் வேதமாகவே இருக்கிறது. 'இருக்கு வேதமாக' இருக்கவில்லை. ஆனால், 'சம்ஸ்க்ருதம்' என்ற சொல் மட்டும் ஏன் எல்லா இடங்களிலும் சம்சுகிருதம் என எழுதப்பட்டுள்ளது?

நூலின் தலைப்பை வாசிப்பவர்கள் வாசித்து விட்டு ஒரு தம்ளர் தண்ணீர் அருந்த வேண்டியிருக்கும்! எதற்கு இவ்வளவு நீண்ட தலைப்பு? 'பாரதியும் வேதங்களும்' என்பது போல் தலைப்பு எளிமைப்படுத்தப்பட்டிருக்கலாம்.

இந்த உயரிய நூல், பாரதி இலக்கிய மகுடத்தில் அதை மேலும் அழகுபடுத்தும் ஒரு மயிலிறகு. 'பல்வேறு வரலாற்றுக் காரணங்களால் வேதங்களைப் பற்றியும், வேதக் கல்வியைப் பற்றியும் முரண்பாடுகளும் மோதல்களும் ஆதிக்கம் செலுத்தும் இன்றைய தமிழகச் சூழலில் பாரதியாரின் வேத இலக்கியப் பயிற்சியையும் அணுகுமுறையையும் தமிழ் வாசகர்கள் புரிந்து கொள்ள வேண்டியது அவசியமாகின்றது' என முன்னுரையில் எழுதிச் செல்கிறார் நூலாசிரியர்.

அதன் பொருட்டே இந்தச் சிறந்த ஆய்வு நூலை அனைவரும் படிப்பதும் அவசியமாகின்றது.

**— திருப்பூர் கிருஷ்ணன்**

*(பாரதி இலக்கியத்தில் வேத இலக்கியத்தின் தாக்கம்/ஆசிரியர் : பெ. சு. மணி/பூங்கொடி பதிப்பகம், 14, சித்திரைக் குளம் மேற்கு வீதி, சென்னை- 4/விலை ரூ. 70/-)*

## செய்யாறு தி. தா. நாராயணன்

லேசர் கன்னுடன் குறிபார்த்துத் தயாராய் நின்ற கோபக்ஸை பார்த்தவுடன் சூர்யாவுக்கு பொறிகலங்கி விட்டது. பெரும்பகுதி ரிஃப்லெக்ஸ் செயல்பாடு. ஐக்யூ ஐம்பது அல்லது அதற்குள் இருக்கலாம். சிந்தனை வேகம் நிச்சயம் பத்து டெர்ராஃப்ளாப் இருக்கலாம். நாம் யோசிப்பதற்குள் அது யோசித்து செயலையே முடித்து விடும்.

''எத்தனை முறை எச்சரித்தேன்? நீ உன்னை மாற்றிக் கொள்ளவில்லை. இனி முடியாது. ஹாலிஸ் காமெட் பாதையில் தான் உன்னை வீசியெறிய திட்டமிருந்தது. ஆனால் இப்போது செவ்வாயில்தான் உன் சமாதி அமைய வேண்டியிருக்கிறது போலும். உன் பாக்கியம்.''

சூர்யா பின்வாங்கினாள்.

''வேண்டாம் கோபக்ஸ்! என் அப்பாவுக்கு உன்னால் பதில் சொல்ல முடியாது.''

''ஷ்ஷ்ஷ்...'' என்று மிகக் குறைந்த சப்தத்துடன் கோபக்ஸின் துப்பாக்கியிலிருந்து ஒரு துனுக்கு லேசர் கற்றை, பெட்டியை வைத்திருந்த அவள் இடதுகையை தீய்த்து விட்டுச் சென்றது. ஓவென்று அலறியபடி பெட்டியைக் கீழே போட்டு விட்டு கண் மண் தெரியாமல் ஓட ஆரம்பித்தாள்.

கோபக்ஸ் நகர்ந்து அந்தப் பெட்டியை எடுத்துக் கொண்டு அவளைத் துரத்த ஆரம்பித்தது. இருநூறு மீட்டர் இடைவெளியில் இருவரும் தொடர்ந்து ஓடிக் கொண்டிருக்க, ஒரு வினாடி திரும்பிப் பார்த்தாள். லேசர் கன்னை தோளில் மாட்டியிருக்க அது ஓடி வந்து கொண்டிருந்தது. இப்போதைக்கு சுட எண்ணமில்லை. ஓட்டத்தை நிறுத்திய பின்புதான் கன்னைக் கையிலெடுக்கும். எப்படியும் என்னைப் பொசுக்கி விடும். தடுக்க ரஷ்ஷுவுமில்லை. இருந்தாலும் அவன் தடுப்பான் என்று தோன்றவில்லை. சட்டென்று அடிமனத்தில் ஒரு பொறி.

'நாம் முந்திக் கொண்டு அதை அழித்து விட்டால் என்ன?... ஆனால் அப்புறம் திரும்பி பூமிக்குப் போக வழி? கோபக்ஸ் இல்லாமல் முடியாதே. அதனால்தானே யோசிக்க வேண்டியிருக்கிறது. முயற்சி செய்தால் உன்னால் முடியாதா? கம்ப்யூட்டரில் நீ எத்தனை பெரிய மேதை? மூளையைக் கசக்கு. திரும்பிப் போகும் ப்ளானின் பாஸ்வேர்ட் என்னவென்று உன்னால் கண்டு பிடிக்க முடியும். கொஞ்சம் தேடு. டைரக்டரியிலேயே ஏதாவது க்ளு கிடைக்கும். ஓ.கே.!'

மனசு தந்த தைரியத்தில் ஓடிக் கொண்டே திரும்பிப் பார்த்தாள். கோபெக்ஸ் இன்னும் சற்று பின்தங்கியிருந்தது. ஆனால் ஸ்டெடியான ஓட்டம். சூர்யா விடுவிடுவென்று ஓடி ராக்கெட்டில் ஏறினாள். இப்போது அது நெருங்கி விட்டது. மூச்சைப் பிடித்துக் கொண்டு இரண்டிரண்டு படியாய்த் தாண்டி, உள்ளே ஓடி, இரண்டாவது சேம்பருக்குள் புகுந்து கொண்டாள். லேசர் கன்னை தூக்கிப் பிடித்துக் கொண்டு, கதவை காலால் தள்ளி சாத்தினாள். கன்னை சரியாய்ப் பிடிக்க முடியவில்லை. தீய்ந்த கை திகுதிகுவென எரிந்தது.

வரட்டுமா? சுமான் கோபக்ஸ்.

வா வா! உன்னைத் தீர்த்து விட்டு... 'என் தற்காப்புக்காகத்தான் செய்ய வேண்டியிருந்து' என்று தப்பித்துக் கொள்



கிறேன். வா வா!

அப்போது கோபக்ஸ் விண்கல ஏணியில் ஒவ்வொரு படியாய் ஏறும் சப்தம் கேட்டது. இற்று விடும் போல் மூச்சு இரைத்தது. அது மேலே வந்து விட்டது. இப்போது கதவுக்கு வெளியே அதன் காலடி சப்தம். 'ஒரு வினாடி' தயங்கி நின்றது. லப் டப் லப் டப். சூர்யா திணறினாள்.

கொஞ்சமாய்க் கதவு தள்ளி திறக்கப்பட, லேசர்கன்னின் முனை மட்டும் எட்டிப் பார்த்தது.

"சூர்யா! கம் அவுட்! என் வேகம் உனக்குத் தெரியாது."

சூர்யா வாயைத் திறக்காமல் தன் கன்னை குறிபார்த்தபடி போகஸில் நின்றாள். இப்போது மேலும் சிறிது கதவு திறந்தது. இப்போது அதன் கை மட்டும். சூர்யா அவசரமாய்ச் சற்று குனிந்து சரியான பொஸிஷனில் கன்னைப் பிடித்தபடி நின்றாள். தயாராய் ஸ்விட்சில் ஆள்காட்டி விரல். அப்போது வெளியேயிருந்து ஏதோ சப்தம் கேட்டது. ரஷ்ஷுவின் குரல்தான் அது.

"கோபக்ஸ் என்ன இது மடத்தனம்? கன்னை கீழே இறக்கு."

"முடியாது. இதோ இந்தப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு போய் உடைக்க முயற்சி செய்தாள். எவ்வளவு எச்சரிக்கை செய்தோம்? இனி முடியாது."

"சரி! பெட்டியை உடைத்துத் தெரிந்து கொண்டு விட்டாளா?"

"இல்லை."

"பின்னே? நடக்காத குற்றத்துக்கு ஏன் தண்டனை?"

"ம்... ம். நீ இப்போது என்... என் நண்பனா விரோதியா?"

"வெய்ட்! இப்ப நான் ஒரு சொல்யூஷன் சொல்றேன். சூர்யா! வெளியே வா!"

லேசர் கன்னைக் குறிபார்த்தபடி அரைமனத்துடன் வெளியே வந்தாள்.

"ஓ! நீயும் அந்த அளவுக்கு எதிர்க்கத் துணிஞ்சிட்டியா? வேண்டாம். கோபக்ஸ் கையால் செத்துப் போவாய்."

# உயிர்களைத் தேடித் தேடி

# 14

"தூ! இப்படிச் சொல்ல வெட்கமாயில்லை? ஒரு இயந்திரத்திடம் அடங்கிப் போவதை பெருமையாய் நினைக்கிற பேடித்தனம்" – கையை ஊன்றினான். எரிச்சல் தாங்கவில்லை. மேல் தோல் பொசுங்கிச் சிவப்பாயிருந்தது.

"இருக்கட்டும். நான் இதற்கு ஒரு தீர்வு சொல்றேன். நாம எது செய்தாலும் அது நம் நாட்டுக்கு நன்மையாக முடியணும். வந்த வேலையை மறந்து விட்டு, இப்படி நீங்க சண்டை போட்டுக்கிறதும் ஒருத்தரையொருத்தர் அழிக்கப் பார்க்கிறதும் தவறு. ரெண்டு பேரும் யோசியுங்க. சூர்யா! இனி மேல் எங்க ஆராய்ச்சியைக் கண்டுபிடிக்கிற திருட்டுத்தனமெல்லாம் உனக்கு வேண்டாம். கீழே போன பின்பு அப்பாவிடமே கேட்டுத் தெரிந்து கொள். ஏனென்றால் இந்த உத்தரவைப் போட்டதே அப்பாதான். அதே போல் கோபக்ஸ்! சின்ன விஷயத்திற்கெல்லாம் கன்னை தூக்காதே. அழிப்பது சுலபம். திரும்பப் பெற முடியாது. அவளின்

மூளை நாட்டுக்குப் பயன்படாமலே போய் விடும். நம் ரகசியங்களை அவன் தெரிந்து கொண்டு விட்டான் என்றால் என் சம்மதமின்றி உடனே அவனைத் தீர்த்து விடு. சரியா? நமக்குள் பிளவு வேண்டாம்" – கையை நீட்டினான்.

இருவரும் தயக்கமாய் தத்தம் கைகளை அவன் கையின் மேல் வைத்தார்கள். ஆனால் கையை நீட்டிய அந்த நொடியில் கவனித்து விட்டாள். கோபக்ஸ் இவளையே வித்தியாசமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தது. எதையோ ப்ளான் பண்ணுகிறது. அவளுக் குப் பிடறியில் சில்லிட்டது.

அவரவர் வேலைகளில் மூழ்கி விட்டார்கள். ரஷ்ஷாவை அடிக்கடி பார்க்க முடிவதில்லை. ஆயிற்று. பூமிக்குத் திரும்பும் நாளும் நெருங்கிக் கொண்டிருந்தது. பூமியின் தொடர்பு விட்டுப் போன பின்பு இந்த ஓராண்டாக எப்போதாவது இருவரும் சந்தித்தால் அப்பா எப்படி வேதனைப்படு கிறாரோ என்றுதான் பேசிக் கொண்டிருப் பார்கள். இப்போதெல்லாம் தன் சாவைப் பற்றி சூர்யா அதிகம் கவலைப்படுவதில்லை. கவலைப்பட்டு என்ன ஆகப் போகிறது. ரஷ்ஷாவும் நிச்சயம் கோபக்ஸ் உன்னைக் கொல்லாது என்று தைரியமூட்டிக் கொண் டேயிருந்தான்.

அன்றைக்கு சூர்யா சுற்றியலைந்து விட்டு எஸாக்கு வர நேரமாகி விட்டது. இருட்ட ஆரம்பித்திருந்தது. இதற்கு மேல் குளிரடிக்கும். ரஷ்ஷா இன்னும் வரக் காணோம். கோபக்ஸ் ரஷ்ஷாவை, கொடுக் கப்பட்டிருக்கும் எல்லா ஃப்ரீக்வன்ஸிகளி லும் பிடிக்க முயன்று கொண்டிருந்தது.

"என்ன கோபக்ஸ்?"

"ரஷ்ஷாவுடன் தொடர்பு கிடைக்க வில்லை."

"ஆறரை மணிதானே ஆகிறது. வந்து விடுவான்."

"இரவு ஏழு மணிக்கு மேல் கூட ரஷ்ஷா வந்து சேர்ந்திருக்கிறார். ஆனால் அடிக்கடி வயர்லெஸ்ஸில் தொடர்பு கொண்டிருப் போம். இப்போது கடந்த ஆறு மணி நேர மாகத் தொடர்பு கிடைக்கவில்லை."

"என்ன சொல்ல வர்றே?" – அவளுக்கு லேசாய் முகம் மாறியது.

"ஏழு மணி ஆகப் போகிறது. இருட்டி விட்டது. பார் சூர்யா! இன்னும் சிறிது நேரத்தில் டெம்ப்ரேச்சர் மைனஸ் நான்கு

## தந்தையைப் போல பெண்!

"குரல் ஏற்ற இறக்கம், உச்சரிப்பு ஆகியவற்றைத் திருத்திப் பயிற்சி கொடுத்தார் அப்பா. செலக்ட் ஆகிவிட்டேன்" என்கிறார் ஜெயா டி.வியில் செய்தி வாசிக்கும் புவனேஸ்வரி. இவருடைய அப்பா, தூர்தர்ஷன் நியூஸ் ரீடரான ஸ்ரீதர்.

சென்னையிலுள்ள அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகத் தில் முதலாண்டு எம்.ஏ. மாஸ் கம்யூனிகேஷன் படித்துக் கொண்டிருக்கிறார்.

சிறுவயது முதலே பேச்சுப் போட்டிகளில் பங்கேற்று வந்தது இப்போது கைகொடுக்கிற தாம்!

படம்: ஸ்ரீஹரி

டிகிரிக்கு வந்து விடும். ரஷ்ஷு வராதது சற்று யோசிக்க வைக்கிறது" - கோபக்ஸ் மீண்டும் ஒருமுறை எல்லா ஃப்ரீக்வன்ஸி களிலும் தேடவாரம்பித்தது.

"ஹலோ... ஹலோ... ரஷ்ஷு... ரஷ்ஷு... ஹலோ..."

சூர்யா முதலில் தைரியமாயிருந்தவள் பின்பு சலனப்பட்டு, உதடுகள் துடிக்க, வறுக் வறுக் என்று நகத்தைக் கொறிக்க ஆரம் பித்தாள். கண்ணீர் துளித்தது.

"சூர்யா! ப்ளீஸ் மனதிடத்தை இழந்து விடாதீர்கள். ரஷ்ஷுவுக்கு எதுவுமாகி விடாது."

"பேசாதே!" - எல்லாக் கோபத்தையும் திரட்டிச் சீறினாள்.

"நீதான்... ரஷ்ஷுவின் கதிக்கு நீதான் காரணம்! அப்படி என்ன ரகசியம் உங்களுக் குள்? இதை மட்டும் சொல். ரஷ்ஷு இங்கே என்ன செய்து கொண்டிருந்தான்? என் தம்பியின் உயிரோடு விளையாடாதே, கமான்... சொல்லு!"

சற்று நேரம் வேகவேகமாய் கண்களை மூடி மூடித் திறந்து விட்டு, "வளிமண்டல ஆராய்ச்சி" என்றது.

அது தரையிலா நடக்கிறது! ஒருநாள் அவனை நிக்ஸ் ஒலிம்பிசா எரிமலையின் பக்கம் பார்த்தேனே."

"எனக்குத் தெரியாது."

அவள் உஷ்ணமாய் முறைத்தாள்.

"உன் முழுத் திறமைகளையும் வெளிப் படுத்திக் கொண்டிருக்கிறாய் கோபக்ஸ்! வேண்டாம், பொய்கள் என்னிடம் எடு படாது."

"இல்லை... இல்லை. பொய்கள் மனிதர் களுக்கே சொந்தமானவை சூர்யா! நிஜத்தில் ரஷ்ஷு ஓஸோன் அடுக்கை ஆராயவே பணிக்கப்பட்டிருந்தார்."

"ஓ! மணி எட்டாகி விட்டது. அப்படி யானால்... ரஷ்ஷுவுக்கு என்னவோ ஆகி விட்டது" - சொல்லும்போதே அவளுக்கு வார்த்தை பிசிறியது.

"வெய்ட்... வெய்ட்... அழாதீர்கள் சூர்யா! எப்படியும் இன்னும் ஒரு மணி நேரத்தில் ரஷ்ஷுவைக் கண்டுபிடித்து அழைத்து வருகிறேன்."

**ஃபோ**ர் வீலரில் பறந்தது. ஆனால் அடுத்த இரண்டு நாட்களும் இரவு பகலாய் தேடியும் ரஷ்ஷு கிடைக்கவேயில்லை. என்னவானான்? அவ்வளவு பெரிய கிளை டர் விமானத்துடன் மறைந்து போனது



"போலி பிறப்புச் சான்றிதழ் கொடுத்து இப்படி மாட்டிக்கிட்டீங்களே?"

**"போலி மார்க்ஷீட்டும், சாதிச் சான்றிதழும் கொடுத்ததை யாராலும் கண்டுபிடிக்க முடிய லையே, அதுக்கு என்ன சொல்றே?"**

**– சீர்காழி ரேவதி**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

எப்படி?

சூர்யா சதா அழுது கொண்டிருந்தாள். பல பல லட்சியங்கள், எதிர்பார்ப்புகள், சாதனைகள், தீரச்செயல்கள் இவைகள் உள் ளடங்கிய இந்தப் பயணத்தில் ரஷ்ஷுவின் கதி இப்படியாகும் என்பது நினைத்துப் பார்க்காத ஒன்று. ஆயினும் விஞ்ஞானத்தில் ஒரு வெற்றிக்கு எப்போதும் பல தோல் விகள்தாம் அடித்தளமிடுகின்றன. என்ன செய்ய...?

'உன்னை நான் இழந்து விட்டேன் ரஷ்ஷு! இதற்காகத்தான் அப்பா உன்னைப் போக விடாமல் தடுத்தாரா? நான் முட் டாள். பாதை தெரிந்தும் அதிலிருக்கும் பள் ளங்கள் தெரியாதவள். அப்பாவுக்குத் தெரிந் தால்... அப்பா...!'

"இரண்டொரு தினம் பார்ப்போம் மிஸ் சூர்யா! எனக்கு நம்பிக்கையிருக்கிறது."

அவள் கண்ணீருடன் திரும்பினாள்.

"என்ன உளர்றே? மைனஸ் நாலு டிகிரி. அதுவும் முழுசாய் இரண்டு நாள் முடிந்து விட்டது. வெறுமனே என்னை சமாதானப் படுத்தப் பார்க்காதே. ஆறாயிரத்து எண் ணூறு கிலோ மீட்டர் குறுக்களவுள்ள இந் தக் கிரகத்தில் ரஷ்ஷு எங்கியோ ஒரு இடத் தில் செத்துப் போய்க் கிடக்கிறான். ஆமாம்." சொல்லிவிட்டு அழுதாள்.

"இங்கிருக்கும் ஒருசில மலைக் குகை களில் எப்போதும் உஷ்ணம் கதகதப்பா யிருக்கிறது. நானே ஆராய்ந்திருக்கின்றேன். காரணம் அந்தக் குகைகள் ஒருகாலத்தில் எரிமலைகளாய் இருந்திருக்கின்றன. எரி

மலைக் குழம்பு மக்மா வெளிப்பட்ட பாதையின் வழியே இக் கிரகத்தின் உள் வெப்பம் இன்றும் இலேசாய்க் கசிந்து கொண்டிருக்கின்றது. அந்தப் பகுதியில் தேட வேண்டும் மிஸ் சூர்யா! அழாதீர்கள்."

"அங்கேயும் இல்லையென்றால்?"

அவளை உற்றுப் பார்த்தது.'

''பெஸிமிஸ்ட். பாசிட்டிவ்வாக நினையுங்கள். இல்லையென்றால் என்ன பண்ண முடியும்? இதுபோன்ற தீரப் பயணங்களில் மரண சம்பவிப்பு நடக்கக்கூடியதே. அப்புறம் கொஞ்ச நேரம் ரஷ்ஷுவுக்காக அழுது விடு சூர்யா!"

இடும் என்று சூர்யா ஆவேசம் பிடித்தவளாகக் கத்த ஆரம்பித்தாள்.

"கமான்... கமான் கோபக்ஸ்! வா என்னையும் அழித்து விடு. அதற்காகத் தானே காத்துக் கொண்டிருக்கின்றாய்? ரஷ்ஷுவையும் நீதான் கொன்றாய். தெரியும், வா. நான் சாகத் தயார்" – இரண்டு கைகளையும் அகல விரித்து மார்பைக் காட்டிக் கொண்டு நின்றாள்.

"இல்லை சூர்: ா' இல்லை."

"உம். உன் ஷெட்யூல்படி முடித்து விடு, வா!"

"சூர்யா! அவசர முடிவுகள் எதையும் எடுக்க வேண்டாம். முதலில் ரஷ்ஷுவைக் கண்டுபிடித்தேயாக வேண்டும். திஸ் ஈஸ் மஸ்ட். நாங்கள் தேடிக் கொண்டு வந்த விஷயம் ரஷ்ஷுவிடம்தான் மாட்டிக் கொண்டிருக்கிறது. என் கடமை ரஷ்ஷுவை உயிரோடு கொண்டு போய்ச் சேர்க்க வேண்டும்."

அடுத்த நாளிலிருந்து இருவரும் ரஷ்ஷுவைத் தேட கிளம்பினார்கள். குகைகள்தாம் குறி. கோபக்ஸ் நிக்ஸ் ஒலிம்பிசாவின் பக்கம். சூர்யா தென் திசையில் முடிந்தவரையிலும் மனம் போனபடியெல்லாம் காடு மேடு என்று சுற்றிச் சுற்றி எல்லா முயற்சிகளும் வீண். ஒரு சின்னத் தடயம் கூட கிடைக்கவில்லை. மாலை சோர்வாய்த் திரும்பினாள். வயர்லெஸ் போன் அலறியது.

"ஹலோ!"

"மிஸ். சூர்யா நான் கோபக்ஸ்."

"எங்கிருக்கிறாய்? என்ன?"

கிளைடரைக் கண்டுபிடித்து விட்டேன்.

(தொடரும்)



## கண்ணி வெடிக் கொடூரம்!

''இன்றைக்குத்தான் முதல் தடவையாக செய்திவாசிக்கப் போவதுபோல தினமும் நினைத்துக் கொள்வேன்'' என்கிறார் நிர்மலா ராமன். அதுவே எனக்கு ஆழமான ஈடுபாட்டை ஏற்படுத்தி விடும். வெறுமனே, எழுதிக் கொடுக்கிற செய்தியைப் படித்துவிட்டுப் போகிற பழக்கம் என்னிடம் இல்லை. தினமும் பல சேனல் நியூஸ் பார்ப்பேன். பேப்பர்கள் படிப்பேன். எனவே, இன்று ஒரு நியூஸ் படித்தால், அதன் பின்னணி என்ன என்று தெரிந்து படிக்கிறேன். அது என்னமோ தெரியவில்லை, கண்ணி வெடியில் சிக்கி இறந்தவர்கள் பற்றிய செய்தி படிக்கிறபோது ரொம்ப சோகமாக உணருவேன். யாரோ எப்போதே நிலத்தில் புதைத்த வெடிகளுக்கு, சம்பந்தமில்லாத வேறு அப்பாவிகள் மரணமடைவது எத்தனை கொடூரம்?

நிர்மலாவுக்கு ஒரே பெண். பெயர்: ஸ்வேதா. ஆச்சரியப்படாதீர்கள். பெண் பிலானியில் இஞ்சினியரிங் படிக்கிறார்!

– கௌதம்

படம்: ஸ்ரீஹரி



# குடும்ப நல்வாழ்வு சிறப்பு மருத்துவ முகாம்

**டிசம்பர் 1 முதல் 15 வரை**

## இப்ப தயங்கினா பின்னால தவிக்க வேண்டி வரும்.



பிறப்புறுப்புகளில் சீழ் வடிந்தாலோ, வீக்கம் இருந்தாலோ அல்லது புண், படை இருந்தாலோ, உடனே மருத்துவரை அணுகுங்கள். அது பால்வினை நோயின் அறிகுறியாக இருக்கக் கூடும். ஆனால் அதை எளிதில் குணப்படுத்தலாம்.

தயக்கம் காட்டினால், பிறப்புறுப்பு நோய் மூலம் ஏற்படும் விளைவுகள் ஆபத்தாகி விடும். எனவே ஆரம்ப நிலையிலேயே சிகிச்சை பெற்று பிறப்புறுப்பு நோயை குணப்படுத்திக் கொள்ளுங்கள்.

இதற்காக **சிறப்பு முகாம்** பின்வரும் மாவட்டங்களிலும் மாநகராட்சிகளிலும் நடைபெறுகிறது. ஆகவே தயக்கத்தை விட்டு உங்கள் பகுதியிலுள்ள துணை சுகாதார நிலையத்தில் நடக்கும் சிறப்பு முகாமிற்குச் சென்று சிகிச்சை பெற்றுக் கொள்ளுங்கள்.

**மாவட்டங்கள் :** திருவள்ளூர், கோயம்புத்தூர், தர்மபுரி, வேலூர், திருவண்ணாமலை, கடலூர், ஈரோடு, கன்னியாகுமரி, இராமநாதபுரம், கரூர், பெரம்பலூர், தேனி.

**மாநகராட்சிகள் :** சென்னை, மதுரை, கோயம்புத்தூர், திருச்சிராப்பள்ளி, சேலம்.

மேலும் மாவட்டங்களில் உள்ள மற்ற நகராட்சிகளிலும் கிராமப்புறங்களிலும் நடைபெறுகிறது.

**இன்றே தயக்கத்தை விடுவீர்! சிகிச்சை பெறுவீர்!**

TNSACS

அனிமல் பிளானட்:

# ஆண்டுக்கு ஐந்து கோடி செலவு!

கடந்த மார்ச் மாதத்தில் இந்தியாவில் தனது ஒளிபரப்பைத் துவங்கிய 'அனிமல் பிளானட்' சேனல், சூப்பர் ஹிட்டாம். ஒளிபரப்பைத் துவக்கிய ஐந்தே மாதங்களில் ஐம்பது லட்சம் வீடுகளில் கேபிள் மற்றும் நேரடி ஸாடிலைட் தொடர்பு மூலம் 'அனிமல் பிளானட்' மக்களைச் சந்தோஷப் படுத்திக் கொண்டிருக்கிறதாம்.

அனிமல் பிளானட்டின் நட்சத்திர பட்டாளங்கள் பறவைகள், விலங்கினங்கள் மற்றும் புழு, பூச்சிகள்தான். இருந்தாலும் இந்தியாவில் இருபது வயதுக்குட்பட்ட சுமார் ஒன்பது லட்சம் பேர் அனிமல் பிளானட்டின் தீவிர ரசிகர்கள் என்று ஒரு புள்ளி விவரம் சொல்கிறது. ஒரு பக்கம் வி.சேனல், எம்.டி.வி, எஃப் சேனல் என்று இளைஞர்களைச் சுண்டிவிழுக்கும் சேனல்கள் இருந்தாலும், அனிமல் பிளானட்டுக்குக் கிடைத்திருக்கும் வரவேற்பு ஸாட்டிலைட் ஒளிபரப்பாளர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியிருக்கிறது.

1996ல் டிஸ்கவரி சேனல் உரிமையாளர்கள், பி.பி.ஸி.யுடன் இணைந்து அனிமல் பிளானட்'டை துவக்கினார்கள். (நேஷனல் ஜியாகரபிக் சேனல் ஸ்டார் டீவியுடன் இணைந்தது) உலகம் முழுவதும் ஏழு கோடி சந்தாதாரர்கள் இருக்கிறார்கள். இது ஒரு பே சேனல். ஒரு இணைப்புக்கு இவர்கள் வாங்கும் கட்டணம் மாதம் இரண்டரை ரூபாய்தான்.

வருடத்திற்கு ஐந்து கோடி ரூபாய் நிகழ்ச்சி தயாரிப்புக்காகச் செலவழிக்கிறார்கள். "டிஸ்கவரி சேனல் போல் மூளைக்கு வேலை கொடுக்கும் நிகழ்ச்சிகளை நாங்கள் ஒளிபரப்புவதில்லை. எங்கள் நோக்கம் பொழுதுபோக்கு மற்றும் தகவல்கள் சொல்வதுதான். அனிமல் பிளானட்டின் வெற்றியைப் பார்க்கும்போது காலப் போக்கில் டிஸ்கவரி சேனலையே ஓவர்டேக் செய்துவிடும் போலிருக்கிறது" என்று பெருமிதத்துடன் சொல்கிறார் நிர்வாக இயக்குனரான கிரண் கார்னிக்.

— ஆரெஸ்வி

குருக்கள் வீட்டுப் பெண், கோமு என்கிற கோமதி ஓடிப் போனது, வானம் இடிந்து விழும் உற்பாதம் என்று பாரதிக்குத் தோன்றவில்லைதான். என்றாலும், இதில் மூன்று பார்வைகள் இருக்கவே செய்தன. ஒன்று, காதலர்கள் பார்வை. மற்றது, தாய் தந்தையர்கள் அதை எடுத்துக் கொள்ளும் கோணம். மூன்றாவது, சமூகம் என்கிற மக்கள் பார்க்கும் கேவலம்.

வைத்தியநாதன், பஞ்சாயத்தை முடித்து விட்டு, அப்போதுதான் திரும்பியிருந்தார். களைப்பாகச் சாய்வு நாற்காலியில் அமர்ந்தார்.

"என்னப்பா, என்ன ஆச்சு?" என்று அப்பாவைக் கேட்டாள் பாரதி.

''என்ன ஆகவேண்டியிருக்கு, இனிமேல்? பெண், போய்ட்டா. குருக்கள் முன்னாலே, ஒரு கடமை இருக்கு. பெண்ணையும் பிள்ளையையும் அழைச்சு வந்து, கல்யாணம் பண்ணி வச்சு, அதை முறைப்படுத்தி விடலாம். அதைத்தான் நான் சொன்னேன்.''

"குருக்கள் என்ன சொல்றார்?''

"ஜாதி சனம் கேவலமாய்ப் பேசுமே என்கிறார்!''

"இப்பவும்தானே பேசும்.''

''சரி, நடந்தது நடந்து போச்சு. இனி என்ன பண்றது? ஒப்புக் கொள்ள வேண்டியதுதானே? சிமான்கிற பையன் எப்படிப்பா?''

"கிறிஸ்தவப் பையனாம்.''

வைத்தியநாதனே தொடர்ந்து சொன்னார்.

"காலம் மாறிக்கிட்டு வருது. அதுக்கு ஏத்தாற்போல, மதிப்பீடுகளை மாத்திக்கணும். பிடிவாதமா இருந்தா, முதலுக்கே மோசமா யிடும்.''

"குருக்கள் என்ன செய்யப் போறாராம்?''

''தொலைச்சுத் தலைமுழுகிட்டேன்னு கத்தினார்கள் ஆம்படையானும் பெண்டாட்டியும். இதெல்லாம் மயான வைராக்கியம் மாதிரிதான். கோமுவுக்கு ஒரு குழந்தை பிறந்தா, மாமிதான் முதல்ல போய் நிப்பான்.''

காதலிக்கவும், குழந்தை



# முதல் மழைத்துளி

பெற்றுக் கொள்ளவும், கடவுள் குறுக்கே நிற்பதில்லையே. மனிதர்கள் மட்டும், எதற்கு அவர் பெயரைச் சொல்லி சண்டை போட்டுக் கொள்கிறார்கள்?

பாரதி எதிர்பார்க்காமலே, மறுநாள், மதியம் கோமுவே, அவளைப் பார்க்க வந்திருந்தாள். வந்தவளுக்குக் காப்பி கொடுத்த பாரதி, சொன்னாள்.

''என்னடி இப்படிப் பண்ணிட்டே, கோமு?''

''என்ன பண்றது, பாரதி. என்னமோ, அவர் மேல, எனக்கு ஈடுபாடு வந்துடுச்சு.''

''எப்படி இந்த ஈடுபாடு அல்லது காதல் வந்துச்சாம்? உன் மலரும் நினைவுகளைச் சொல்லேன்.''

கோமு சந்தோஷமாக இருந்தாள். அது



''உன் மருமகள் எழுதிய கடிதத்தைப் படித்ததும் உன் முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடிக்க ஆரம்பிச்சிடுச்சே! என்ன எழுதியிருக்கா அப்படி?''

'' 'நலம்... நலமில்லாமை அறிய ஆவல்'னு!''

– உ. ராஜாஜி

அப்படித்தான் இருக்கும். அப்படியில்லாமல் இருந்தால்தான் தவறு. கடவுள், மனிதர்களுக்கு அளிக்கும் பரிசு, இளமை. பரிசு, யாருக்குத்தான் சந்தோஷம் தராது.

கோமுவின் பக்கத்து வீட்டுக்காரியும், வகுப்புத் தோழியுமான ஸ்நேகா, ஒரு 'டூ-வீலர்' வாங்கியிருந்தாள். அது அடிக்கடி ரிப்பேர் ஆகிவிடும். அதை ரிப்பேர் செய்ய சீமானின் ஒர்க்-ஷாப்புக்குப் போவாள், ஸ்நேகா. உடன் கோமுவும் போவாள். சீமான், படித்தவனாம். நிறைய சம்பாதிக்கிறானாம். சிரிக்கச் சிரிக்கப் பேசுகிறவனாம். மனசைப் பறிகொடுத்து விட்டாளாம். அயல் மதத்துக்காரனுடன் எப்படிக் கல்யாணம் பண்ணிவிப்பார்கள், குருக்கள் வீட்டார்?

''சரி, இருக்கட்டும். பையனுடன் பேசினாயா, பழகினாயா, அவன் மனத்தைப் புரிந்து கொண்டாயா? எத்தனை நாள் பழக்கம்?''

''இல்லை. எதுவும் இல்லை.''

வாழ்க்கையில், பிரச்னை வந்தால், சமாளிக்கலாம். வாழ்க்கையே 'ரிஸ்க்' எடுத்துக் கொண்டு, காதல் என்றால்? கேட்க வேண்டும் என்று தோன்றியது பாரதிக்கு. ஆனால், கேட்கவில்லை. அவள் மட்டும் என்ன வாழ்ந்தாள்?

கோமு போய்ச் சேர்ந்தாள்.

பாரதிக்கு, அவள் கணவன் சொன்ன அந்தப் பிரச்னை நினைவுக்கு வந்தது. அவன் சார்ந்த கம்பெனிக்கு, ஏற்றுமதி லைசென்ஸ் தேவைப்படுகிறது. மத்திய அரசாங்கம், செய்ய வேண்டிய காரியம் அது. அரவிந்தனுக்குத் தேவையான மனிதர்கள் அங்கே இருக்கிறார்கள். அரவிந்தன் மூலம், அது முடியலாம். பாரதி, அதுக்காக, அவனைத் தூண்டி, அதுக்காக அரவிந்தன் நட்பை மேலும் பெருக்கிக் கொண்டு, அதைச் சாதிக்கலாம்.

கனகராஜ், பெரிய மனசு வைத்து, அதை அனுமதிக்கிறான்.

சிநேகத்தை, அதுவும் கலை ரசனையை முன்வைத்து இயங்கும் நட்பை, இப்படிச் சிறுமைப்படுத்துவது, சரிதானா? எப்படி இதை அவனிடம் கேட்பது? அப்பா கூடச் சொன்னார்.

''எதை விற்று, எதை வாங்குவது என்று ஒரு வரைமுறை இருக்கு, பாரதி. என்ன நேர்ந்தாலும், இந்தத் தப்பை எல்லாம் செய்யாதே...''

அன்று மாலை, அரவிந்தன், பாரதி வீட்டுக்கு வந்திருந்தான். அவன் ஒரு பெரிய பட்டியலுடன் வந்திருந்தான்.

''பாரதி மேடம். நீங்க செய்ய வேண்டியது பற்றிப் பேச வந்திருக்கேன். கேசட் கம்பெனியில் பேசி விட்டேன். அவர்கள் சந்தோஷமாக, 'பாரதி மேடம் பாடிக் கொடுத்தால், உடனே தயாராக இருக்கிறோம்' என்கிறார்கள். பணமும், அது முக்கியம் இல்லை என்றாலும், அவசியம்தானே, கணிசமாகத் தரத் தயார் என்கிறார்கள். ஒரு சமயத்தில் ஆறு கேசட் தொகுதி வெளியிடவும் ஒப்புக் கொள்கிறார்கள். என்ன சரியா?''

வைத்யநாதன், ''ஒப்புக் கொள்'' என்றார்.

''நான் பாட்டுக்களைத் தேர்வு செய்து, டைப் செய்து கொண்டு வந்திருக்கேன்.

அதுக்கு நீங்களே 'டியூன்' போட்டுக் கொள்ளலாம். பாடிப் பழகிக் கொள்ளுங் கள்..."

பாரதி, அவன் காட்டிய பக்கங்களைப் படித்தாள். அழகான பாட்டுக்களைத் தெரிவு செய்திருந்தான்...

"இந்தப் பாட்டுக்கு என்ன அர்த்தம்?"

அரவிந்தன் சொன்னான்.

"போருக்குப் போன தலைவன், இன்னும் திரும்பலை. தலைவி மனம் மிகவும் சங்கடப் படுகிறது. தோழி வந்து, தலைவிக்கு ஆறுதல் சொல்கிறாள். ஆனாலும் தலைவி மனசு, ஆறவில்லை. அந்த நேரத்தில், காக்கை ஒன்று அங்கு பறந்து வந்து அமர்ந்து கரைகிறது. தோழி அதைக் காட்டி, "விருந்து வருகிறது, பார்" என்கிறாள். தலைவனும் வந்து விடு கிறான். தலைவன், தோழிக்கு, அவள் தலைவிக்கு ஆறுதல் கூறியமைக்காக நன்றி சொல்கிறான். தோழி அவனிடம், எனக்கு நன்றி சொல்ல வேண்டாம். அந்தக் காக் கைக்கு நன்றி சொல்லுங்கள். இந்தத் தொண்டிநாட்டில், விளைந்த அரிசியில், நெய் இட்டு ஏழு பாத்திரத்தில் வைத்துக் கொடுத்தாலும் ஈடாகாது என்கிறாள்."

அவன் பாட்டைப் படித்தான்.

"திண்தேர் நள்ளி கானத்து அண்டர்
பல் ஆ பயந்த நெய்யில், தொண்டி
முழுதுடன் விளைந்த வெண்நெல் வெண்சோறு
எழு கலத்து ஏந்தினும், சிறிது, என் தோழி
பெருந்தோள் நெகிழ்ந்த செல்வற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே...."

"இது மக்களுக்குப் புரியுமா?" என்று கேட்டாள் பாரதி.

"புரிந்து கொள்ள முயற்சிப்பது அவர் களுக்கு நல்லது. மக்களுக்கு இனிப்பு மிட்டாய் மட்டுமே கொடுப்பது, அவர் களைக் கொல்வதற்குச் சமம். 'டிங்கிரி டிங் காலே - மீனாட்சி டிங்கிரி டிங்காலே' புரிஞ் சுதே. 'டோல் டப்பி மா'ன்னு ஒன்று. அது புரிஞ்சுதே. சொந்தப் பேரை, 'மோனியன்னு' சொல்ற தமிழன், தெளிவா மனீஷா கொய் ராலான்னு சொல்றதுக்குப் புரியுதே. அவ னது, பழைய சிறட்டைப் புரிஞ்சுக்க முடி யாதா? முடியும். முடியணும். நம்மால் ஆன தைச் செய்வோம். மேடம்."

பாரதி, சிரித்தாள். குழந்தை, "ஏன் மாமா... நீங்க சொன்ன பாட்டு என்ன பாட்டு?" என்றாள்.

"பழைய தமிழ்ப் பாட்டும்மா."

"ஓகோ" என்றாள்.

மறுநாள் காலையே, முதல் பாட்டின் ராகம் என்ன என்பதை அவள் தீர்மானித்து விட்டாள். டியூனும் போட்டு விட்டாள். உடனே, லலிதா மூலம் அரவிந்தனுக்குத் தெரியப்படுத்தினாள். மறுநாள் மாலை, லலிதா வீட்டு மாடியில் சந்திப்பது என்று முடிவாகி, சந்திக்கவும் செய்தார்கள்.

தன்யாசி ராகத்தில், அந்தச் செய்யுளுக்கு டியூன் போட்டிருந்தாள் பாரதி. தன்யாசி, சுபாவத்திலேயே, ஞானவானின் குணத்தைக் கொண்ட ராகம். பிஞ்சிலே பழுத்த சுகர் மாதிரி. இரக்கம், அன்பு, தயவு எல்லா மேலான நற்குணங்களின் சாயை மிதக்கிற, ராகம் அது. இன்னும் கொஞ்சம் சோறு




போடேன் என்கிற ராகம். மழை பெய்த பிறகு, குளிர்ந்த பூமி மாதிரி மனசைக் குளிர்விக்கிற ராகம் அது.

பாடி முடித்தாள்.

"புரிகிறதா?" என்றான் அரவிந்தன்.

"சுமாராகப் புரியுது" என்றாள் லலிதா.

"அது போதும். முழுசாகப் பிறகு புரிந்து கொள்ளலாம். புரிந்து கொண்டா, ஒரு முழு வாழ்க்கையை வாழ்ந்து சாகிறோம். புரிந்து கொண்டா கல்யாணம் பண்ணிக் கொள் கிறோம். பிள்ளையைப் புரிந்து கொண்டா வளர்க்கிறோம்... அது மாதிரிதான் இதுவும்... கலை புரிந்து கொள்ள அல்ல, லலிதா. அனுபவிக்க.."

"புரிந்தால் கூடுதலாக அனுபவிக்கலாம்



### டேப் செய்து போட்டு...

சிறு வயது முதலே பி.பி.சி. நியூஸ் கேட்டு கேட்டு, நியூஸ் ரீடராக வேண்டும் என்று ஆர்வம் வந்தது ஷோபாவுக்கு. ஜெயா டீவியில் நியூஸ் ரீடராகச் சேரும் நேரம் ஷோபா நந்தகோபால் பதினாறு வயதுப் பெண்ணுக்கு அம்மா!

''செய்தி வாசிப்பதற்கு வயது வரம்பு ஏதேனும் உண்டா?'' என்று கேட்டிருக்கிறார் யதேச்சையாக ஒரு விழாவில் சந்தித்த ஜெயா டீவி செய்தி ஆலோசகர் கே. பி. சுனிலிடம்.

''இல்லை. ஆனால் ஸ்கிரீன் டெஸ்ட் உண்டு'' என்று பதில் வர, அதில் பாஸாகியிருக்கும் ஷோபா, சென்னை கோதாரி அகாடமியில் ஆங்கில ஆசிரியையும் கூட.

''ஸ்க்ரீன் டெஸ்டுக்கு ஒரு வாரம் முன்னதாக தினமும் பேப்பரை வைத்துக் கொண்டு செய்தி வாசித்து, டேப்பில் பதிவுசெய்து, போட்டுக் கேட்டுத் தவறுகளைத் திருத்திக் கொண்டேன்'' என்கிறார்.

நியூஸ் ரீடரான பிறகும் இந்தப் பயிற்சியை எல்லோரும் மேற்கொண்டால் என்ன! ❍

இல்லையா?''

அரவிந்தன் பேசவில்லை.

''கனகராஜைப் புரிந்து கொண்டிருந்தால், பாரதி அவனைக் கல்யாணம் பண்ணியே இருக்க மாட்டாள்.''

சட்டென்று ஒரு அமைதி. பாரதி, தலை கவிழ்ந்து இருந்து விட்டுச் சொன்னாள்.

''இனிமையான வேளையில் எதற்கு அந்தப் பேச்சு. பாட்டு எப்படி என்று சொல்லவில்லையே, அரவிந்தன்?''

''என்ன சொல்ல? இந்த முயற்சி பெரிய வெற்றியைப் பெறும் என்று நிச்சயமாகவே என்னால் சொல்ல முடியும்.''

''பொருத்தமான பாட்டுக்குப் பொருத்தமான ராகம். இசை என்பது, பாட்டை, சூழ்நிலையை, மனத்தை பொருத்தமாக ஏற்ற இடத்துக்கு இசைவிப்பது. இந்தப் பாட்டின் அர்த்தம், இரங்கல். அதாவது வருந்துதல்; வருத்தம் இசையிலும் கொப்பளிக்கணும். அப்போதுதான், பாட்டும் பூர்த்தி பெறும். இசையும் பூர்த்தி பெறும். இந்தக் கருத்தை அழகாகச் செய்திருக்கிறீர்கள். எனக்குச் சந்தோஷமாக இருக்கிறது.''

லலிதா, கிண்டல் செய்வது போலச் சொன்னாள்.

''பாரதி... இவர் பேசும் போது, ஒழுங்காகப் பேசுவார். எழுதும் போது மட்டும் புரியாமல் எழுதுவார். புரியாமல் எழுதியே, பெரிய கவிஞர்னு இவரைச் சொல்லும்படி பண்ணிட்டாரு. இவரை மாதிரியே சில ஆட்கள். அவர்களுக்கு இவர், கவிச்சக்ரவர்த்தி.''

லலிதா, சிரிப்புத் தாங்காமல், இருமிக் கொண்டே சொன்னாள்.

பாரதி சிரிக்கவில்லை.

''உங்கள் கவிதைகள், நினைவில் இருந்தால், ஏதாவது ஒன்றிரண்டு சொல்லுங்களேன்.''

''உண்மையாகவா?''

''ஏன் சந்தேகம்?''

''இல்லை. கிண்டல் செய்யப் போகிறீர்களோ என்று யோசிக்கிறேன்.''

''சேச்சே. கவிதை விஷயமாக, யாராவது கிண்டல் செய்வார்களா, என்ன?''

''அது கவிதையாக இருந்தால்...'' என்றாள் லலிதா.

அவன் சொன்னான். சாதாரணமாகப் பேசிக் கொண்டிருந்தவன், தன் குரலை, உயர்த்தித் தெளிவாக, அழகாகச் சொல்ல ஆரம்பித்தான்...

வானம் கருத்து
வளவளன்னு பெய்த மழை
வாய்க்கால் வழி ஓடி
ஊரு கண்மாய் நிறைஞ்சிடுச்சு...
ஊத்துத் தண்ணி பொங்கிடுச்சு...
யாரு கண்ணு பட்டுச்சோ
ஊரு ரெண்டாச்சு
ஊறும் தண்ணி பகையாச்சு
வானத்து மழைக்காக
வழக்கும் வந்திருச்சு...
வெட்டு குத்துப் பகையாகி,
செயிலிலே நாலு பேரு
சென்பாத்தாம் ஆறு பேரு
வாய்க்கால் வந்திடுச்சு...
வாய்ப் பேச்சும் சுருங்கிடுச்சு...
யாருக்கு யார் உறவோ
யார் மனுஷர் யாருக்கோ
மனசு வறண்டாச்சு...
மனுஷ குலம் வெடிப்பாச்சு...."

"சபாஷ்..." என்றாள் லலிதா.

"நல்ல கவிதை. ஊர்ப் பிரச்னை, காவிரிப் பிரச்னை என்று பலதுக்கும் பொருந்தி வர்ற மாதிரி பல அர்த்தம், பல கோணம் உள்ள கவிதை."

"இது மாதிரி எழுதேன்... அரவிந்தன்."

"இப்படியே எழுதிக்கிட்டு இருக்க முடியுமா? இருண்ட விஷயத்தை இருண்ட வார்த்தையாலதானே சொல்ல முடியும்?"

பாரதியும் அரவிந்தனும் புறப்பட்டார்கள்.

அரவிந்தன், பாரதியிடம், "உங்கள் கணவர் கனகராஜ் எனக்கு போன் செய்தார்."

"என்னவாம்?"

"ஒரு சிபாரிசு விஷயமாக..."

"அதைச் செய்ய வேண்டாம்."

"ஏன் அப்படி?"

"வேண்டாம். நம் நட்பின் தளம் வேறு."

"இருந்தாலும், என் நண்பரின் கணவருக்கு..."

"வேண்டாம் என்றால் வேண்டாம் தான்..."

அரவிந்தன், என்ன பதில் சொல்வது என்று யோசித்தான்...

(தொடரும்)

---

## யாதெனக் கேட்டேன்!

**ந**டிப்பு தவிர படிப்பதிலும் ஆர்வம் கொண்டவர் கணிசமான டீ.வி. தொடர்களில் இன்று நடித்துக் கொண்டிருக்கும் மௌனிகா. சிறுகதை, நாவல், கவிதைகள் எல்லாமே படிக்கிறார். தாம் சமீபத்தில் படித்து மிகவும் ரசித்த கவிதை ஒன்றைக் கூறுகிறார்:

பிறப்பில் வருவது யாதெனக் கேட்டேன்
பிறந்து பாரென இறைவன் பணித்தான்
இறப்பில் வருவது யாதெனக் கேட்டேன்
இறந்து பாரென இறைவன் பணித்தான்
மனையாள் சுகமெனில் யாதெனக்
கேட்டேன்
மணந்து பாரென இறைவன் பணித்தான்
அனுபவத்தாலே வருவது வாழ்வெனில்
ஆண்டவனே நீ ஏனெனக் கேட்டேன்
ஆண்டவனோ சற்று அருகிலே வந்து
அனுபவம் என்பதே நான் தான்
என்றான்!

"நான் மிகவும் ரசித்த இந்தக் கவிதையை எழுதியவர் யார் தெரியுமா? கண்ணதாசன்!"

தகவல்: பாரதி



**ம**ன்ற உறுப்பினர்கள்ல யார் யாரெல் லாம் முதல்வன் பார்த்திங்க? அதுல அர்ஜு னோட அப்பாவா நடிக்கறவர்தான் என் அழகான முகத்தை அற்புதமா கார்டூன் பண்ற நடனம்! சின்ன ரோல்னாலும் பின்னி ருக்கார் இல்லே?

ஒரு விஷயம் தெரியுமா? முதல்வன் ஷூட்டிங் நடந்துட்டிருந்தப்ப நடனம் சாருக்கு உடம்பு சரி யில்லை. ஒரே சமயத்துல ரெண்டு ஆபரேஷன் பண்ண வேண்டிய கட்டாயம்!

ஆபரேஷன் முடிஞ்சி பெட் ரெஸ்ட்ல இருந்தவர், படுத்தவாக்குலயே ஒரு கார்டூன் வரைஞ்சி தந்திருக்கார், படத்துக்கு. (அந்த யானையை எலி இழுக்கற கார்டூன்!)

படத்துல, பல பக்க வசனங்கள் சொல்ல வேண்டிய விஷயத்தையெல்லாம் அவரோட சில கார்டூன்ஸ், எக்ஸலென்டா கன்வே பண்ணிடறதை ரொம்ப ரசிச்சேன்.

"என்ன சார், தொடர்ந்து நடிப்புல இறங் கிடற ஐடியா இருக்கா"ன்னு கேட்டேன் அவர்கிட்ட.

"சேச்சே! இது சுஜாதா சொல்லி ஷங்கர் கம்பல் பண்ணதால ஒத்துண்டது. பார்க்க லாம். இது மாதிரி நல்ல ரோல்ஸ் கிடைச்சா, எப்பவாவது பண்ண லாம்னுதான் ஐடியா"ன் னார்.

சோ, எம்.பி. ஆனாலும் துக்ளக் வேலை பாதிக்காதுன்னு அறிக்கை விட்ட மாதிரி, நடனம் நடிக்கப் போனாலும் என் இருதிரு உருவத்தை வாரா வாரம் வரைஞ்சி தர்றதும் பாதிக்காதுன்னு அவர் சார்புல நானே சொல்லிடறேன்!

# கதை சொல்லும்

கொசுறா இந்த வாரம் ஒய் ஏ சி எம் ரிசர்ச் டீமையும் கார்டூன் போட்டிருக்கார் பாருங்க நடனம். இன்ஸ்ட்ருமென்ட்ஸ்லயெல்லாம் ஒட்டடை படிய விட்டு மிலெனியம் ப்ரோக்ராம் தயாரிப்புல முழுகியிருக்காங்கன்ற மாதிரி போட்டி ருக்கறதைப் பார்த்துட்டு அத்தனை பேரும் சுருதி சேர்ந்து சண்டைக்கு வரப் போறாங்க! அஃப்கோர்ஸ், இந்த கார்டூனை சாலஞ்ச் பண்ற மாதிரி எல்லாருமே சென்ல தனிப் பட்ட பர்பார்மன்ஸ்லயும் வெளுத்துக் கட்டு வாங்கன்றதைச் சொல்ல அக்னி சர்மா தேவையில்ல...





மன்ற உறுப்பினர்களுக்கு நற்செய்தி : இந்த இஷ்யூ கல்கிலேருந்து உங்களோட இந்த அபிமான சுமி பேஜை 'கட்' பண்ணி எடுத்துட்டுப் போகிற முதல் முப்பது பேருக்கு டிசம்பர் 31 நடக்கவிருக்கற On a Musical Track நிகழ்ச்சிக்கு உத்தரவாதமா டிக்கெட் கிடைக்கும் (விலைக்குத்தான்!). டிக் கெட் ரேட்ஸ் : ரூ 400, ரூ 200, ரூ 100, ரூ 75. டிசம்பர் எட்டாம் தேதி காலைல பத்து



**சுமி சூப்பர்மார்க்கெட்**

மணிலேருந்து மியூசிக் அகடமியில டிக்கட் விற்பனை ஆரம்பிக்குது.

அசோகமித்திரன், கணையாழி எடிட்டரா இருந்தப்ப எழுதின கட்டுரைகளைத் தொகுத்து கலைஞன்ல ஒரு புக் ரிலீஸ் பண்ணிருக்காங்க. (காலக் கண்ணாடி)

இந்த நூற்றாண்டு கடைசில வந்திருக்கற மிக முக்கியமான புக் இது. ஒரு காலகட்டத்துல லிட்ரரி ஃபீல்டுல நடந்த எந்த ஒரு விஷயத்தையும் விடாம, கவனமா தொகுத்து, திறமையான சின்னச் சின்னக் கட்டுரைகளைத் தந்திருக்கார் அ.மி.

இலக்கியச் சிந்தனை விழாக்கள், நவீன நாடக முயற்சிகள், திரைப்பட விழாக்கள், சி.எல்.எஸ். கூட்டங்கள், முக்கியமான இழப்புகள், (தமிழ்வாணன் தொடங்கி ஆர்.வி., வரைக்கும்; நா.பா. தொடங்கி சாண்டில்யன் வரைக்கும்) புத்தக மதிப்புரைகள் இப்படி சுமார் இருவத்தஞ்சு





வருஷத்து இலக்கியப் பதிவு இது.

இதுல இருக்கற சில இரங்கல் குறிப்புகளை - கொஞ்சம் கூட உணர்ச்சிவசப்படாம, அதே சமயம் படிக்கிறவர் உணர்ச்சி வசப்படறாப்பல அவர் எப்படி நேரேட் பண்ணியிருக்கார்ங்கறதை சுலபத்துல விளக்க முடியாது.

ஒரே ஒரு எக்ஸாம்பிள் : (ஆதவன் மறைவு பற்றி எழுதும் போது)

"ஆதவன் தன் படைப்புகளுக்காகக் கற்பனையில் எவ்வளவு முறை சாவை அனுபவித்து விட்டார்!"

இந்த ஒரு வரில, ஒரு இழப்பு தெரியுது. அதற்கான வருத்தம் தெரியுது. ஸேம் டைம், ஆதவனோட கதைகளில் சாவு அதிகம்ங்கற செய்தியும் கன்வே ஆயிடுது இல்லியா?

அசோகமித்திரனோட கட்டுரைகள் அவர் கதைகளைப் போலவே படிச்சு முடிச்சதும் மனசு கனக்கச் செய்யற ரகம்.

பைதவே, கலைஞன் பதிப்பாளர் நந்தனுக்கு ஒரு கேள்வி. புக் பிரிண்ட் ஆறதுக்கு முன்னாடி ப்ரூஃப் பார்க்கறதுன்னு ஒரு ஸ்டேஜ் இருக்கறதை மறந்துட்டீங்களா? என் கண்ணுல அகப்பட்ட வரைக்கும் எண்பத்தி மூணு மிஸ்டேக்ஸ்.

இந்த Column ஆரம்பிச்ச புதுசுல ஒரு சமாசாரம் சொல்லியிருந்தேன், ஞாபகமிருக்கா? 'யாராவது ஒரு ஏமாந்த பப்ளிஷர் அகப்படாமலா போவார், இதையெல்லாம் தொகுத்து புக்கா போட'ன்னு? அப்படியொரு ஆசாமி வசம்மா அகப்பட்டிருக்கார். பட், நான் இன்னும் ஒரு வருஷம் வெயிட் பண்ண முடிவு பண்ணியிருக்கேன். இன்னும்

# கார்ஜூன்ஸ்!

சுவாரஸ்யமான ஜோக்ஸ், பிட்ஸ், நியூஸ், போயம்ஸ், க்ரிடிஸிஸமெல்லாம் ரீடர்ஸிடமிருந்து வரணும். இந்த Columnஐ கம்பைல் பண்றதோட நிறுத்திக்கிட்டு, உங்களுக்கே நிறைய ஸ்கோப் தரணும்னுதான் பார்க்கறேன். புக்கா வரும் போது நம்ப ரெண்டு தரப்பு ரைட்டிங்கும் மிக்ஸ் ஆனாத்தானே ஒரு 'பெப்' இருக்கும்? ஸோ, நிறைய எதிர்பார்க்கறேன். ரிடையர்மென்ட்ல போயிட்ட லாவண்யா, ராணி குருநாதன், அசோக் ராஜாவுக்கெல்லாம் சர்வீஸ் எக்ஸ்டென்ஷன் தர ஆட்சேபணை இல்லை.

— சுமி

சின்னத் திரையை ஆட்டிப் படைக்கும் நெ.1 ஸ்டார் இன்று சேகர் சுமன்தான்! யூகிசேதுவுக்கு பெரியண்ணன் என 'வைத்துக் கொள்ளலாம். இவரது மூவர்ஸ் & ஷேகர்ஸ் நிகழ்ச்சி, நையாண்டி தர்பாருக்கு கொள்ளுத் தாத்தா காலத்தியது. இரண்டுமே இறக்குமதிச் சரக்குதானென்றாலும், இந்தித் தழுவலில் கலகலப்பு அதிகம்! சின்னத் திரை, பெரிய திரை, நாடக மேடை என எதையும் விட்டு வைக்கவில்லை சுமன்! "பெஸ்ட் ஆங்கர் ஆஃப் தி மிலெனியம்", "பெஸ்ட் டி.வி ஸ்டார் ஆஃப் தி மிலெனியம்" அவார்டுகளை அண்மையில் பெற்றிருக்கிறார். 'ஹீரா ஃபேரி' ஷூட்டிங்கில் இவரைச் சந்தித்தபோது, 'கல்கி பத்திரிகையுடன் தான் நாங்களெல்லாம் வளர்ந்தோம்' என்று இயக்குனர் அனந்த் மஹாதேவன் சொன்னது, இவரது மலர்ந்த முகத்தை மேலும் பிரகாசமாக்கியது.

**கேள்வி:** எப்படி இவ்வளவு நகைச்சுவையாகப் பேசுகிறீர்கள்? 'பட்' டென்று துளிர்க்கும் நகைச்சுவையா அல்லது முன்கூட்டியே தயாரித்த சரக்கா?

பதில்: நகைச்சுவையே அவ்வப்போது, சமய சந்தர்ப்பத்துக்கேற்றவாறு துளிர்ப்பது தானே? ஆற அமர யோசித்து, ஊறப் போட்டுத் தயாரித்து வெளியிட்டால் அதில் ஒரு செயற்கைத் தனம் எட்டிப் பார்க்கும். சிரிக்க வைப்பதென்பது எனக்கு இறைவன் அளித்த வரம்.

கே: உங்களுக்கு ஸ்க்ரிப்ட் ரைட்டர்ஸே கிடையாதா?

ப: மூவர்ஸ் & ஷேகர்ஸுக்கு உண்டு; ஆனால் அதில் நான் பேட்டி காண்பவர் களிடம் என்ன பேசப் போகிறேன் என்பது எனக்கே தெரியாது; அந்தக் கணத்தில் என்ன தோன்றுகிறதோ அதைக் கேட்டு வைப்பேன்.

கே: அது என்ன லாலுவிடம் அப்படி ஒரு மோகம்? அவரை ஒருநாள் கிண் டலடிக்கவில்லை என்றால் தலை வெடித்து விடுமா?

ப: லாலுவும் நம்ம 'பேட்டை'தான்! நானும் ஒரு பீஹாரி! லாலுவிடம் ஒரு நகைச் சுவை மண்டியே குடியிருக்கிறதே! அவரைப் பற்றிய எந்த ஒரு விஷயம் சிரிப்புக்கிட மில்லாமல் இருக்கிறது சொல்லுங்கள்?... வாஜ்பாயும் என் 'ஹாட் ஃபேவரிட்'தான்!

கே: தெற்கில் 'அம்மா'வைத் தவிர வேறு யாரும் தேறவில்லையா?

ப: ஏன்? இப்போதெல்லாம் சந்திரபாபு நாயுடு, வெங்கையா நாயுடு இவர்களும்



• சேகர் சுமன்: 'ஹீரா ஃபேரி' தொடரில்.

மாட்டுகிறார்களே?

கே: பால்தாக்கரேவை மட்டும் தாக்க மாட்டேனென்கிறீர்களே... பயமா?

ப: இல்லை; அவரைக் கிண்டல் செய்வதை அவரே ரசிக்கக் கூடியவர்தான். அவர் நகைச்சுவை உணர்வு மிக்கவர். ஆனால் அவரைச் சுற்றியிருப்பவர்கள் அனாவசியமாக வம்பு வளர்ப்பார்கள். அதை சேனல் காரர்கள் விரும்புவதில்லை! அதனால்தான் இந்த ஓரங்கட்டல்.

கே: எந்த சானலுடனாவது... ஏதாவது தகராறு...?

ப: இருந்ததேயில்லை!

கே: 'லேடி கெஸ்ட்' என்றால் மட்டும் 'ஸ்பெஷல்' வரவேற்பாயிருக்கிறதே? ஆண்கள் என்ன பாவம் செய்தார்கள்?

ப: நான் ஆண்களைக் கட்டித் தழுவி முத்தமிட்டால் அதை வேறு விதமான வம்பாக்கி விடுவார்களே? பெண்களிலும் ஒரு சிலரைக் கும்பிடுவேன்;

# லாலுவைக் கிண்டலடிப்பதென்றால் எனக்குச் சர்க்கரைப் பொங்கல்!

• சேகர் சுமன்: கிண்டல் மயமானவர்

சிலரை நமஸ்கரிப்பேன்; சிலருடன் கை குலுக்கல்... எல்லாம் வயசுக்குத் தகுந்த மரியாதைதான்!

கே: நடிகர், தொகுப்புரையாளர்... எது பிடிக்கும்?

ப: நடிப்புத்தான் பிரதானம்; தொகுத்து வழங்குவதென்பது அதன் ஒரு கிளைதான்!

கே: நடிகராக நீங்கள் விரும்பிச் செய்த பாத்திரங்கள்?

ப: "உத்சவ்" படத்தில் ரேகாவுடன் செய்த ரோல்; 'அனுரோக்'கில் பத்மினி கோலாப்புரியுடன் நடித்த பாத்திரம்; டீவி. ஸீரியல்களில் 'தேக் பாய் தேக்'கின் சாச்சு, 'ரிப்போர்ட்டரில்' வரும் பத்திரிகையாளர், தற்சமயம் 'மை' தொடரில் செய்யும் ரோல்...

கே: கங்கிராட்ஸ்... டீ.வி ஸ்டார் ஆஃப் தி மிலெனியம் ஆகிவிட்டீர்களே? எப்படி இருந்தது?

ப: ரொம்ப ரொம்ப சந்தோஷமாய்; முதுகில் ஒரு 'ஷொட்டு'

கொடுத்தது போல்.

கே: 'மிலெனியம்' என்ற பதத்தின் அர்த்தம் தெரியாதவர்கள் அதைக் கொடுத்திருப்பதாக சில பத்திரிகைகள் விமர்சித்தபோது நொந்து போனீர்களா?

ப: இல்லவே இல்லை. அந்தப் பத்திரிகைகளுக்கு நான் பேட்டியளித்திருக்க மாட்டேன்; அந்த எரிச்சலாக இருக்கும்; இந்தப் பரிசை வழங்கிய டில்லி அமைப்பு அவ்வளவு பிரபலமாகாததால் இவர்கள் எகிறுகிறார்கள். அதுவே 'அவுட்லுக்' பத்திரிகை 'ஒபினியன் போல்' நடத்தி, அட்டையில் என்னைப் போட்டு, 'பெஸ்ட் டீவி anchor of the millennium' அவார்டை அறிவித்தபோது, எல்லோரும் 'கப்சிப்'பாகி விட்டார்களே? மக்கள் மத்தியில் எனக்கொரு அங்கீகாரம் கிடைத்திருக்கிறது; அவர்கள் மனத்தில் எனக்கொரு இடமிருக்கிறது. அதுதான் மிகப் பெரிய பரிசு!

கே: 'ஸ்டார் அப் தி மிலெனியம்' ஆக நீங்கள் யாருக்கு வோட்டளிப்பீர்கள்?

ப: நிச்சயமாக மதர் தெரஸாவுக்குத்தான்; அவர் மனித உருவில் வந்த அன்புத் தெய்வம்!

கே: நீங்கள் அழுதுகொண்டே பிறரை எப்படி சிரிக்க வைக்கிறீர்கள்? உங்கள் மகனின் பேரிழப்பை விழுங்கிக்கொண்டு காமெடி செய்வதென்பது எப்படி சாத்தியமாயிற்று?

ப: ஒரு தந்தைக்குத் தன் மகனை, நோய்க்கு பலி கொடுப்பதென்பதைக் காட்டிலும் பெரிய சோகம் வேறெதுவுமில்லை; நான் நொறுங்கியே போய்விட்டேன்; இறைவனைத் திட்டித் தீர்த்தேன்; உற்றார், உறவினர், நண்பர்கள் ஆறுதல் கூறினர்; அனுதாபக் கடிதங்கள் மலை போல் குவிந்தன. என் மனைவி இடிதாங்கி போல் நின்றாள். அவளது மன உறுதியை 'Savvy'யில் கூட அற்புதமாக வடித்திருந்தார்கள். என்னால் எழ முடியவில்லை; துயரச் சுமை அழுத்தியது. ஆனால் கொஞ்சம் கொஞ்சமாக, என்னிலும் அதிக வேதனையில் வாடுவோரைக் கண்டு மெதுவாகத் தேற்றிக்கொண்டேன். துக்கத்தை மறக்க, ஓய்வொழிச்சலே இல்லாமல் நடிக்க ஆரம்பித்தேன். ஒருநாள் கூட லீவெடுத்ததில்லை! "Comedy is an extension of tragedy" என்பார்கள். என் வாழ்க்கையில் அது உண்மையாகி விட்டது. என் துயரை மறக்க நான் சிரித்தேன்; பிறரையும் சிரிக்க வைத்தேன். இன்னும் என் கண்மணி என்னைச் சுற்றி, என் அருகாமையில் எங்கேயோ இருப்பதாக உள்ளுணர்வு சொல்கிறது. அவனை என்னால் மறக்க முடியவில்லை;

ஆனாலும் என்ன செய்வது...? எனக்கொரு மனைவியும், இன்னொரு மகனும் இருக்கிறார்களே? அவர்களுக்காக நான் வாழ்ந்து தானே ஆக வேண்டும்?

கே: க்ரேட்... உங்களுக்குச் சவாலாய் அமைந்த ரோல்?

ப: 'தேக் பாய் தேக்'கில் செய்த ரோல் தான்; அப்போதுதான் என் குழந்தை கொஞ்சம் கொஞ்சமாக மரித்துக் கொண்டிருந்தான். அந்தச் சித்திரவதையை அனுபவித்துக் கொண்டு, முழு நீள காமெடி செய்வதென்பது மரண வேதனைதான்.

கே: இன்று டீ.வி.யில் மிக அதிகமாக சம்பளம் வாங்கும் ஸ்டார் நீங்கள்தான். உங்கள் வீட்டில் ஐ.டி ரெய்ட் என்பதெல்லாம்...

ப: உண்மைதான்! சாதாரணமாகவே நான் கணக்கு வழக்குகளில் அதிக கவனம் செலுத்துபவனில்லை; என் மகன் உயிருடன் போராடிக் கொண்டிருந்தபோது எனக்கு அதில் சுத்தமாக ஆர்வமேயிருக்கவில்லை. என் சார்டர்ட் அக்கௌண்டெண்ட் எல்லாவற்றையும் குழப்பிக் கூத்தாடியதை நான் கவனிக்கத் தவறியதால் வந்த வினை அது. பண விஷயத்தில் யாரையும் நம்பக் கூடாது என்ற கசப்பான உண்மையைக் கற்றுக் கொண்டேன். சம்பள விஷயத்தில், மற்றவர்கள் எவ்வளவு வாங்குகிறார்கள் என்பது எனக்குத் தெரியாது; ஆனால் எனக்குக் கொடுப்பதைச் சந்தோஷமாகத்தான் தருகிறார்கள் என்பது நிச்சயம்!

கே: உங்கள் குடும்பம் பற்றி...

ப: நான் டெக்னேக்ராட்டுகளும் ப்யூரோக்ராட்டுகளும் நிறைந்த ஒரு குடும்பத்தில் பிறந்தவன்; என் தந்தை பெரிய சர்ஜன்; ஆனால் என்னிஷ்டப்படி என்னை நடிப்புக் கல்லூரியில் படிக்க வைத்து, இந்தத் துறையில் நுழைய அனுமதித்தார். என் பிள்ளைக்கும் அந்தச் சுதந்தரம் உண்டு!

கே: மிலெனிய இரவுக்கென்று நாக்பூரில் சிறப்பு நிகழ்ச்சி வழங்கப் போகிறீர்களாமே?

ப: அந்த ஒரு நாளாவது என் குடும்பத்தாருடன் கழிக்க ஆசைப்பட்டு, எவ்வளவோ மறுத்துப் பார்த்தேன். ஆனால் அவர்களோ, உங்கள் தூரத்து உறவினர்களை எல்லாம் அழைத்து வாருங்கள்; அவர்களுக்கு என்ட்ரி ஃப்ரீ என வற்புறுத்துகிறார்கள்.

கே: அப்படியா அண்ணே?

ப: ஆமாம் தங்காய்! எல்லோரும் நாக்பூரில் சந்திப்போம்... பை!

*(கை குலுக்கல் மட்டும்தான்)*

**— ஜெ.ஆர்**




**"பாங்க் மானேஜரைச் சுட்டு விட்டு நீங்கள் பணத்தைக் கொள்ளையடிக்க நாங்க விட மாட்டோம்!"**

**"நீங்க யார் அதைக் கேட்க?"**

**"நாங்களும் அவரைச் சுட்டுவிட்டு பாங்கைக் கொள்ளையடிக்க வந்தவர்கள்!"**

**— வை. வெங்கடேசன்**



''அந்த டாக்டர் பேஷண்ட்டைப் பார்த்த உடனே சொல்லிடுவாரு...''

''என்ன வியாதின்னா...?''

''இல்ல! எவ்வளவு ஃபீஸ்னு...''

— வி. சாரதிடேச்சு



**"நம்ம ரௌடி முனுசாமி ஏன் தற்கொலை செய்துக்கிட்டான்?"**

**"பிஸ்தாவாக பிரமோஷனாக முடியாமல் இருபது வருஷமா ரௌடியாகவே இருந்துட்ட விரக்தி தாங்காமல்தான்!"**

**— உ. ராஜாஜி**

# தக்ஷாவின் சல்வார் சித்தாந்தம்!

பழைய ஜி.ஈ.ஸி., விஜய், பழைய ஜெஜெ டிவிக்களில் பெண்கள் நிகழ்ச்சிகளை நடத்தி வந்த தக்ஷா இப்போது ஜெயாவில் கவனித்துக் கொள்வது 'இனிய இல்லம்' நிகழ்ச்சியை.

''படிச்சிட்டு, வேலைக்குப் போகாம வீட்டுல இருக்கற பெண்கள்தான் என் டார்கெட் ஆடியன்ஸ். அவங்களைக் கொஞ்சம் கொஞ்சமா ஊக்கு விச்சி, ஏதாவது சுயதொழிலாவது தொடங்க நினைக்கற அளவுக்குத் தூண்டி விடணும்னு நினைச்சித்தான் 'இனிய இல்லம்' பண்றேன்'' என்னும் தக்ஷா, ஒரு நூதனமான கண்டு பிடிப்பை முன்வைக்கிறார்.

''தமிழ்நாட்டுப் பெண்கள் என்று சல்வார் அணிய ஆரம்பித்தார்களோ, அன்றுதான் துணிந்து வெளியே வரவும் ஆரம்பித்தார்கள்! சுதந்தரமான கருத்து வெளிப்பாடு என்பது, ஆடையிலிருந்தும் தொடங்குகிறது'' என்கிறார். விட்டால் சல்வார் புராணம் பாடுவார் போலிருந்தது!

மூன்றரை வயதுக் குழந்தைக்கு அம்மாவான தக்ஷாவுக்கு, 'குழந்தைகள் நிகழ்ச்சியில் ஆர்வம் அதிகம்.

''நான் ஒரு பெண்ணியவாதி ஆகி விடுவேனோ, மேடை ஏறிப் பேசத் தொடங்குவேனோ என்றெல்லாம் என் வீட்டாருக்குக் கவலை இருக்கிறது. எனக்குப் பெண்கள் சுதந்திரமாகச் சிந்தித்து இயங்க வேண்டும் என்கிற விருப்பம் தானே தவிர, நாளைக்கு அரசியல்வாதியாகும் ஆர்வமில்லை'' என்கிறார்.

— ஜக்கு

படம்: ப்ரவீண்குமார்

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

இலவச இணைப்பு

# கல்கி

KALKI
12.12.99





## சின்னத்திரை ஸ்பெஷல் - II



• அட, அட்டையில் இருக்கறவங்கதாங்க இவங்க...

# கலக்கும் மாணவிகள் கூட்டணி!

டெலிவிஷன் தொடர்கள் என்பவை வர வர பள்ளிக்கூடம் போகிற பெண் குழந்தைகளின் 'ஹோம் வொர்க்' மாதிரி ஆகிவிடும் போலிருக்கிறது. பின்னே பாருங்களேன், இப்போது சன் டீ.வியில் ஒளிபரப்பாகிக் கொண்டிருக்கும் 'தி' தொடரில் நடித்துக் கொண்டிருக்கிற வைஷ்ணவி, ஸ்ரீமதி, சௌம்யா, பிரியா பிள்ளை ஆகிய நால்வரில் வைஷ்ணவி ஒன்பதாம் வகுப்பு மாணவி; ஸ்ரீமதி பிளஸ் டூ மாணவி, சௌம்யா பி.காம் படித்துக் கொண்டிருக்கிறார்.

ஆனாலும் இம்மூவரும் இதையே தங்கள் வாழ்க்கையின் லட்சியமாகவெல்லாம் எடுத்துக் கொள்ளவில்லை. வைஷ்ணவியின் லட்சியம் எஞ்ஜினியர் ஆவது. ஸ்ரீமதிக்கு பி.ஏ. ஆங்கில இலக்கியம் படிக்க ஆசையாம். அப்புறம் கம்ப்யூட்டர் மாதிரி எதையாவது கற்றுக் கொள்வதுதான் லட்சியமாம்! இடையிடையே மாடலிங்கும் ஓகேவாம்.

சௌம்யாவுக்கும் மாடலிங் ஓகேதான். ஆனாலும் "இதையெல்லாம் முழு நேரத் தொழிலாக நினைக்கவில்லை. வாய்ப்புக் கிடைக்கிறவரை செய்யலாம். கிடைக்காத போது, ஓடித் துரத்திப் பிடிக்கவெல்லாம் எனக்கு இஷ்டமில்லை. ஏதாவது ஒரு அலுவலகத்தில் வேலை பார்க்கிற அளவுக்கு எனக்கொரு தகுதி வேண்டும். அதை வளர்த்துக் கொள்வதுதான் முக்கியம்!" என்கிறார் சௌம்யா.

"என்றாலும் மாடலிங்கையோ அல்லது இப்போது தொடர்களில் நடித்துக் கொண்டிருப்பதையோ ஒரு பொழுது போக்கு போல ஏனோதானோவென்றும் செய்யவில்லை. முடிந்தவரை அதில் எங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டுதான் நடித்துக் கொண்டிருக்கிறோம்!" என்கிறார்கள் இவர்கள்.

அது சரி, இத்தனை சின்ன வயதில் பயங்கரத் தொடரில் நடிப்பதற்கு பயமாக இல்லையா என்றால், "நடிப்பவர்களுக்கு ஏது பயங்கரம்? பார்ப்பவர்களுக்குத்தானே அதெல்லாம்!" என்கிறார்கள் கூலாக!

இவர்களைப் போன்ற மாணவிகளும், மாடல் அழகிகளும்தான் இன்றைய டீ.வி. தொடர்களில் ஆதிக்கம் செலுத்த ஆரம்பித்திருக்கிறார்கள். பார்த்த முகங்களையே பார்த்துப் பார்த்து அலுத்துப் போகிற நிலை இனி டீ.வி. ரசிகர்களுக்கு வராது என்கிறார்கள்.

— பிரின்ஸ்

அட்டையில்: **ஸ்ரீமதி, வைஷ்ணவி, சௌம்யா**

ராமாவரத்தில் எம்.ஜி.ஆர் தோட்த்தை ஒட்டி, சற்று உள்வாங்கி இருக்கிறது டுதல் டி.ஜி.பி. ஹரிஹரனேயின் வீடு. 'டரகோட்டா பொம்மைகள், அந்தக் ாலத்து கலைப் பொருள்கள் என்று வீடு முழுவதும் பழைமை மணம். ஊழல் ுகாருக்கு ஆளாகி இப்போது தனி நீதி ன்ற முதல் தீர்ப்பின்படி விடுவிக்கப்பட்ட ஹரிஹரனே, "யெஸ்" என்றபடி நம்மை வரவேற்கிறார்.

"நான் என்ன பாலிடிஷியனா? பேட்டியெல்லாம் கொடுப்பதற்கு... தீயணைப்புத் துறையில் இயக்குனராக இருந்தபோது விதிகளின்படியும், மனசாட்சிப் படியும் செயல்பட்டேன். இருந்தபோதும் சிலரின் சதியால் ஊழல் வழக்கில் சிக்க வைக்கப் பட்டேன். ஆனால் கடவுள் என்னைக் கைவிட்டு விடவில்லை. இனிமேலும் கைவிட மாட்டார் என்று உறுதியாக நம்புகிறேன்!" - வார்த்தைகளை நிதானமாக அளந்து பேசுகிறார். பாண்டிச்சேரி இவரது பூர்வீகம்.

முப்பத்து மூன்று வருட போலீஸ் வாழ்க்கையில் எந்தவித அப்பழுக்கும் இல்லாமல் பணியாற்றியவர்தான் ஹரிஹரனே. 1989-90ம் ஆண்டுகளில் தி.மு.க. ஆட்சியின்போது தீயணைப்புத் துறையில் சில நவீன சாதனங்கள் வாங்குவதற்கு டெண்டர் விட்டபோது, சுமார் 23 லட்சம் ரூபாய் அரசுக்கு வருவாய் இழப்பு ஏற்படும்படி நடந்து கொண்டார் என்பதுதான் குற்றச்சாட்டு.

"அவர் கமிஷன் வாங்கினார் என்று குற்றம் சாட்டப்படவில்லை" என்கிறார் ஹரிஹரனேயின் வழக்கறிஞரான தினகரன். "குறைந்த பட்ச டெண்டர் கேட்ட நிறுவனத்துக்கு ஆர்டர் கொடுக்காமல், நிசாரஸ் என்ற வேறொரு நிறுவனத்துக்கு ஆர்டர் கொடுத்ததுதான் விவகாரத்தின் துவக்கம். நிசாரஸ் நிறுவனம், தீயணைப்புத் துறை சாதனங்களில் அனுபவம் பெற்ற நிறுவனம். சர்வதேச அளவில் புகழ் பெற்ற வாடியா நிறுவனத்தின் பிரதிநிதியாகவும் செயல்பட்ட நிறுவனம். நிசாரஸ் நிறுவனம் கேட்ட தொகையை ஒப்பிடும்போது, அதற்கடுத்துக் கேட்ட நிறுவனம் இருபத்து மூன்று லட்ச ரூபாய் குறைவாய்க் கேட்டது. அதைத்தான் வருவாய் இழப்பு என்றது அரசு. அதைத் தவிர நிசாரஸ் நிறுவனமே போலி நிறுவனம் என்றது. அவர்கள் பல வருடங்களாக தீயணைப்புத் துறைக்குச் சாதனங்களை சப்ளை செய்து கொண்டிருக்கிறார்கள். கொஞ்சம் அதிக தொகையாக இருந்தாலும், தரமான நிறுவனமாதலால் அவர்களுக்கு டெண்டர் கொடுக்கப்பட்டதை ஆடிட்டிங் வந்த ஏ.ஜி. அலுவலக அதிகாரிகளே ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

"நிசாரஸ் நிறுவனம் போலி நிறுவனம் என்பதையெல்லாம் நீதிபதி ஒப்புக் கொள்ளவில்லை. குற்றம் சாட்டப்பட்டவர், குற்றம் செய்திருக்கிறார் என்று சந்தேகமில்லாமல் நிரூபிக்க வேண்டிய பொறுப்பு அரசு தரப்புக்கு உண்டு. ஆனால் கோப்புகளில் பதிவு செய்யப்பட்ட தகவல்கள் படியும் சாட்சியங்கள் படியும், அரசு தரப்பால் அப்படி நிரூபிக்க முடியவில்லை. இந்த ஒரு வழக்கில் இப்படியொரு தீர்ப்பு வந்திருப்பதால் மற்ற வழக்குகளில் எப்படி வருமோ தீர்ப்பு என்று சிலர் வினா எழுப்புகிறார்கள். ஒவ்வொரு வழக்கும் வித்தியாசமானது. ஒவ்வொன்றுக்கும் merits and demerits உண்டு. ஒன்றோடொன்றைப் பொருத்திப் பார்க்கக்



கூடாது" என்கிறார் தினகரன்.

**தீ**யணைப்புத் துறையில் தொடர்ந்து பல வருடங்களாக சாதனங்கள் வாங்க ஒதுக்கப்பட்ட தொகை உபயோகிக்கப் படாமல் இருந்ததாம். அந்தத் துறையின் கீழ்நிலை அதிகாரிகள் இயக்குனர் பதவிக்கு வரும் காவல்துறை அதிகாரிகளைக் கொஞ் சம் கடுப்புடன்தான் பார்ப்பார்களாம். காரணம் அவர்கள் பணியைச் சேர்ந்தவர் களுக்குத்தான் இயக்குனர் பொறுப்பு கொடுக்கப்பட வேண்டுமென்பது அவர்கள் கோரிக்கை. எனவே இது போன்ற சாதனங்கள் வாங்கும்போது பெட்டிஷன் போடுவது சகஜமாம். அப்படிப்பட்ட பெட்டிஷன்தான் ஹரிஹரனேயின் மீதும் போடப்பட்டது. ஆனால் துரதிர்ஷ்டம் என்னவென்றால், சில சீனியர் காவல் துறை அதிகாரிகளும் சேர்ந்துகொண்டு

# கடவுள் என்னைக் கைவிட மாட்டார்!

புகாரை விசிறி விட்டார்கள். சீனியாரிட்டிபடி ஹரிஹரனே அடுத்து காவல் துறை தலைவர் (டி.ஜி.பி) பதவிக்கு வர வேண்டியவர். அதை விரும்பாதவர்கள், விஜிலன்ஸில் தூங்கிக் கொண்டிருந்த புகாரை சி.பி.சி.ஐ.டிக்கு மாற்றி, தனி நீதிமன்றத்தில் வழக்குப் பதிவு செய்யத் தூண்டினார்களாம். ஹரிஹரனேயை முதலில் கைது செய்வதாகவே இல்லையாம். ஆனால் தனிநீதிமன்றங்களில் சரமாரியாக ஊழல் வழக்குகள் பதிவு செய்யப்பட்டபோது, நான்கைந்து ஐ.ஏ.எஸ். அதிகாரிகள் கைது செய்யப்பட்டார்கள். இதைக் கண்டு வெகுண்டெழுந்த ஐ.ஏ.எஸ். அதிகார வர்க்கம் 'நாம் மட்டும் என்ன பாவம் செய்தோம்... ஐ.பி.எஸ். அதிகாரிகள் ஒன்றும் புத்தர்கள் அல்ல' என்று காண்பிப்பதற்காக ஹரிஹரனேயை மாட்ட வைத்து விட்டார்களாம்!

"**ஹ**ரிஹரனேயின் வழக்கில் தீர்ப்பு வழங்கிய நீதிபதி ராதாகிருஷ்ணன் விஷயங்களை அலசி ஆராய்ந்து தீர்ப்புச் சொல்பவர். உயர்நீதி மன்ற நீதிபதி பதவிக்கு சிபாரிசு செய்யப்பட்டிருப்பவர். எந்தவித அடிப்படையும் இல்லாமல், சில உயரதிகாரிகளின் சதி காரணமாகவே ஹரிஹரனே இந்த வழக்கில் சிக்க வைக்கப் பட்டார். அதனால்தான் அரசுத் தரப்பால் நிரூபிக்க முடியவில்லை. தனி நீதிமன்றங்களில் இப்போது நடக்கும் பல வழக்குகளில் சாட்சிகள் பல்டி அடித்துக் கொண்டிருக்கிறார்கள். இனிமேல் வரும் தீர்ப்புகள் அரசுக்கு எதிராகவே இருக்குமோ; ஊழல் அரசியல்வாதிகள் தப்பித்து விடுவார்களோ என்றெல்லாம் பொதுமக்கள் கவலைப்படத் தேவையில்லை. ஓர் அரசியல்வாதி ஊழல் செய்திருக்கிறார் என்று அரசு நம்புமேயானால், அதைச் சந்தேகமற நிரூபிப்பது அரசின் கடமை. அதில் அது தவறுமேயானால் ஊழல் வழக்குகள் அரசியல் பழி வாங்கலாகவே சித்திரிக்கப்படும்!" என்கிறார் தனி நீதிமன்றத்தில் முன்னாள் மாண்புமிகுக்களுக்கு ஆஜராகும் சீனியர் வழக்கறிஞர் ஒருவர்.

ஹரிஹரனே நிரபராதி என்று தீர்ப்பு வழங்கப்பட்டாலும் உடனடியாக அவர் பணியில் சேர முடியாது. காரணம் இதுபோன்ற மற்றொரு வழக்கு அவர் மீது தனி நீதிமன்றத்தில் நிலுவையில் இருக்கிறது. ஹரிஹரனே விடுதலை பற்றி அரசு மற்றும் காவல்துறை வட்டாரங்கள் மௌனம் சாதிக்கின்றன. "இந்த வழக்கில் மேல் முறையீடு செய்வது பற்றி நிறைய யோசிக்க வேண்டியிருக்கிறது" என்கிறார் நீதித்துறை அதிகாரி ஒருவர்.

**— ப்ரியன்**

# சுரேஷ் சக்கரவர்த்தியைத் திணற வைத்தோம்!



ஜெயா டிவியில் சுரேஷ் சக்கரவர்த்தி நடத்தும் 'வாய் ஜாலம்' நிகழ்ச்சி ரொம்ப பாபுலர். சுரேஷ் கேட்கும் கேள்விகளோ கடி ரகம். பதில் சொல்ல அவர் விதிக்கும் நிபந்தனைகளோ, மரணக் கடி ரகம்! இந்த மனுஷனை என்ன செய்தால் தேவலாம்?

அவர் ஸ்டைலிலேயே சில கேள்விகளை எடுத்துக்கொண்டு அவர் வீட்டுக்குப் போனோம். பதில் சொல்ல அதே கண்டிஷன்கள்.

1. இரண்டாவது கேள்விக்குத்தான் முதலில் பதில் சொல்ல வேண்டும். மூன்றாவது கேள்வி கேட்கும்போது முதல் கேள்வியை ஞாபகம் வைத்துக்கொண்டு, அதற்கு பதில் சொல்ல வேண்டும். மாற்றிச் சொன்னால் அவுட்.

2. எந்தக் கேள்விக்கும் மூன்று வார்த்தைகளுக்குக் குறையாமல் பதில் வர வேண்டும்.

3. ஆங்கிலக் கலப்பே கூடாது.

4. தடுமாறினால் காலி!

- இந்த கண்டிஷன்களுடன் கூடுதலாக நாம் சேர்த்தது, பதில்கள் தமாஷாகவும் இருக்க வேண்டும் என்பது!

"ஆளை விடுங்க! நான் முதல் கேள்வியிலேயே அவுட் ஆயிடுவேன். எனக்குக் கேட்டுத்தான் பழக்கம். பதில் சொல்லிப் பழக்கமில்லை!" என்று ஓடப் பார்த்தவரை அன்பாக மிரட்டி உட்கார வைத்து ஆரம்பித்தோம். (எத்தனை பேர் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டிருக்கிறார்!)

**"சினிமால ஏன் இன்னும் குட்டி வேஷங்களிலேயே வர்றீங்க?"**

"................"

**"கலகலப்பான ஷோ-மேன் ஆன நீங்கள் வீட்டில் எப்படி?"**

"பெரிய ரோல் தர மாட்டேங்கறாங்களே."

**"எப்ப எம்.எல்.ஏ.வாகப் போறீங்க?"**

"வீட்டுல ஷோ காட்டினா பின்னிடுவாங்களே!"

**"தென்னை மரத்துல ஏறி, தேங்காய் பறிச்சிருக்கீங்களா?"**

"அரசியலா! ஆளை விட்றா சாமி!"

**"மனைவிகிட்ட அடி வாங்கிருக்கீங்களா?"**

"தென்னை மரத்துல ஏறி, பக்கத்து மாமரத்துல மாங்கா பறிச்சிருக்கேன்."

**"ஜெயமோகனோட புது நாவல் பேர் தெரியுமா?"**

"இதுவரைக்கும் வாங்கினதில்லை. உங்களுக்குப் பார்க்க ஆசையா இருந்தா

சொல்லுங்க."

**"ஜெயா டீவிக்கு வந்த பேயை வாய்ஜாலம் நிகழ்ச்சிக்குக் கூப்பிட்டா முதல் கேள்வி என்ன கேட்பீங்க?"**

"தெரியலையே. சொன்னா தெரிஞ்சிக்கறேன்."

**"பாரத ரத்னாவுக்கு உங்களை யாராவது ரெகமண்ட் பண்ணியிருக்காங்களா?"**

"எப்படி என்னைப் பார்த்து பயப்படாம இருக்கே?"

**"ஒரு வருஷம் மௌன விரதம் இருந்தாகணும்னு உங்களை யாராவது கட்டளையிட்டா இருப்பீங்களா?"**

"பாரதத்துல பிறந்தவங்க எல்லாருமே பாரத ரத்னாதானே!"

**"வயலும் வாழ்வும் பார்த்திருக்கீங்களா?"**

"மௌன விரதமா? வாய் வெடிச்சிடும். நம்மால முடியாது."

**"மரண தண்டனை வேணுமா வேணாமா?"**

"வயலும் வாழ்வும் பார்த்ததில்லை."

**"சுரண்டல் லாட்டரி வாங்கியிருக்கீங்களா எப்பவாவது?"**

"எனக்கெதுக்கு மரண தண்டனை? நான் என்ன தப்பு செஞ்சேன்?"

**"முதல் ஆட்டோகிராஃப் யார் வாங்கினாங்க உங்ககிட்ட?"**

"சேச்சே! அந்தப் பழக்கமெல்லாம் இல்லீங்க."

**"முதல்வன்ல அர்ஜுனுக்கு பதிலா நீங்க நடிச்சிருந்தா என்ன ஆயிருக்கும்?"**

"ஞாபகமில்லையே."

**"யாருக்காவது லவ்லெட்டர் குடுத்திருக்கீங்களா?"**

"ஷங்கர் சன்னியாசி ஆகியிருப்பார்."

**"கேள்விகள் அவ்ளோதான்!"**

"யார் யாருக்குக் குடுக்கலைன்னு கேளுங்க. சொல்ல சுலபமா இருக்கும்!"

**சு**ரேஷ் சக்கரவர்த்திக்கு வெற்றிகரமான தோல்வி! ரோல், ஷோ என இரண்டு ஆங்கில வார்த்தைகளைப் பயன்படுத்தியதால்!

"நான் சொல்லலை? எனக்குக் கேட்கத்தான் வரும்; முதல் கேள்வியிலேயே ஊத்திப்பேன்னு?"

அற்புதமான சமையல் ஸ்பெஷலிஸ்டான சுரேஷ், நமது 'நறநற'வுக்குப் பழி வாங்கும் விதமாக ஒரு டீ கொடுத்து 'அன்புடன்' அனுப்பி வைத்தார்.

**— ஜக்கு**

படங்கள்: **ப்ரவீண்குமார்**

"விஷயம் தெரியுமா? கௌரி சங்கரோட மருந்து பாட்டிலை மோலி மாத்தி வெச்சுட்டா. பாவம், கௌரிக்கு என்ன ஆகப் போவுதோ தெரியலை!"

"என்ன மருந்து? கௌரி ஆக்ஸிடென்ட்ல இல்ல அடிபட்டுப் படுத்திருக்கான்?"

"அதான், அந்த சித்தவைத்தியர் காலுக்குத் தடவ ஒரு எண்ணெய் சொன்னாரில்ல? இந்தக் கடங்காரி அதுக்குப் பதிலா, எழுந்து நடக்கவே முடியாத ஒரு பாய்ஸன் எண்ணெயைக் கொண்டு வந்து வெச்சிட்டா..."

"சரியான வில்லி அவ! ராட்சஸி!"

– இரு பெண்கள் பேசுவது என்பதை யூகிக்க சிரமம் இருக்காது. ஆனால் எது பற்றி? யார் மோலி? யார் கௌரி சங்கர்? என்ன ஆக்ஸிடெண்ட்? ஏன் இவள் எண்ணெயை மாற்ற வேண்டும்?

இதெல்லாம் தெரிய வேண்டுமென்றால் தினசரி பிற்பகல் 12:30க்கு, 'சொந்தம்' பார்ப்பதைத் தவிர வேறு வழியில்லை.

ஒரு நாள் தவற விட்ட தாய்க்குலங்கள் மறக்காமல் மற்றவரிடம் கேட்டு கதையைத் தெரிந்து கொள்ளாவிட்டால் தலை வெடித்து விடும். இந்த நிலைமை, 'சொந்தம்' சீரியலுக்கு மட்டுமல்ல. எத்தனை மனிதர்கள், பெண்ணின் கதை, அட்சயா, ஜன்னல், பஞ்சவர்ணக் கிளி இப்படி ஒரு நேஷனல் ஹைவே நீளத்துக்கு வரும் தொலைக்காட்சித் தொடர் பட்டியல்களுக்கும் உண்டு.

"தினம் தினம் பார்க்கறதால நம்ம வீட்டு மனுஷங்க மாதிரி அந்த கேரக்டர்லோட ஒரு உறவு டெவலப் ஆயிடுது. அவங்க படற கஷ்டமெல்லாம் – கதைதான்னு தெரிஞ்சாலும் – நமக்கு வருத்தம் தருது. யாராவது ஒரு கேரக்டருக்கு ஏதாவது சந்தோஷமான அனுபவம் கிடைச்சா நமக்கே கிடைச்ச மாதிரி இருக்கு. கணவர், குழந்தைகளெல்லாம் ஆபீஸ் போயிடறாங்க. என்னை மாதிரி வீட்டுல இருக்கற லேடீஸுக்கு இந்த சீரியல் மனிதர்கள்தான் நல்ல கம்பனி" என்கிறார் விசாலாட்சி பாலசுப்பிரமணியன்.

"ஐயோ, இவ அடிக்கற கூத்து தாங்க முடியலை சார். யாரோ அகிலாவாமே, 'சொந்தத்து'ல அவ ஒரு ஊனமுற்றவனை கல்யாணம் பண்ணிக்கறாளாம். அன்னிக்கு முழுக்க, 'என்ன பரந்த மனசு பாருங்க. எல்லாப் பொண்ணுங்களும் இவளை மாதிரி மனசு இருந்தா எவ்ளோ நல்லா இருக்கும்'னு உருகறா!" – இது திருவாளர் பாலசுப்பிரமணியனின் ரியாக்ஷன்.

"எங்கம்மாவுக்கு காய்கறி நறுக்கற சிரமம் தெரியக்கூடாதேன்னு நாகை முகுந்தன் சொற்பொழிவாற்றுவார். சாப்பிடற போது போரடிக்கக் கூடாதேன்னு உமா சிரிச்சிச் சிரிச்சிப் பேசுவா. வாஷிங்மெஷின்ல துணி போட்டா லோக்கல் கேபிள்ல புதுப் பாடல் போடுவான். தூங்கப் போறதுக்கு முன்னாடி பால்தினகரன் அன்பா பேசி, அனுப்பி வெப்பாரு" என்று கிண்டலடிக்கும் ஜனார்த்தனன் குரோம்பேட்டை அரசுப் பள்ளியின் பிளஸ் டூ மாணவர்.

# வீட்டுக்குள்

"நாம முழிச்சிட்டிருக்கற நேரமெல்லாம் டீவி ஓடிட்டிருக்கணும்னு விதியாயிடுச்சி சார். நல்லா இருக்கா, இல்லியான்னு பிரச்னையில்லை. அந்த சவுண்ட் இருந்தாத்தான் சரிப்படுது. எங்க வீட்டுல மொத்தம் அஞ்சு பேர். எங்கப்பா டீவியை 'சிக்ஸ்த் மெம்பர்'னுதான் சொல்லுவார்."

சமையல் நிகழ்ச்சிகள் எதுவும் உருப்படியாக இல்லை; எதையும் வீட்டில் செய்து பார்த்தால் சரியாக வருவதில்லை என்று குறைபடும் பிரவீணா ஹரிகிருஷ்ணன், விஜய் டீவியின் ஆபாசத்துக்கு எல்லையே இல்லையா? பையன்கள் கெட்டுக் குட்டிச் சுவராகிறார்களே என்று கலங்கும் நாராயணமூர்த்தி, வலம்புரிஜானின் வைத்தியக் குறிப்புகளுக்கு என் சொத்தில் பாதி எழுதி வைக்கப் போகிறேன் என்று (தமாஷாக)



உணர்ச்சிவசப்படும் சங்கரலிங்கையா, பெப்ஸி உமாவுக்குப் புதிய கேள்வித்தாள் யாராவது தயாரித்துத் தர மாட்டார்களா என்று இன்டலடிக்கும் அனுபமா – இப்படி நாம் பேச்சுக் கொடுத்த எல்லாரையும் டீவி பாதித்திருக்கிறது – மிகத் தீவிரமாக.

"பரீட்சை நேரமானாலும் மர்மதேசம் பார்க்காம இருக்க மாட்டான் எங்க வெங்கடசூர்யா" என்கிறார் நிர்மலா. வெங்கடசூர்யா படிப்பது இரண்டாம் வகுப்பு!

"கருப்பு எவ்ளோ பவர்ஃபுல் சாமி தெரியுமா? என்னை எப்பப் பார் திட்டிட்டே இருக்கற 'டமில்' மிஸ்ஸை கடிச்சுடுன்னு அதுகிட்டே சொல்லியிருக்கேன்."

– நம்பித்தான் ஆக வேண்டும். இது இரண்டாம் வகுப்புச் சிறுவனின் ஸ்டேட் மென்ட். இப்போது கருப்பு வராததில் கழுத்து வரை அவனுக்குத் துக்கம். இயந்திரப் பறவையைப் பார்ப்பதில்லை என்கிறான்.

# ஒரு பூதம்!

"நீ சமர்த்தா சாப்பிட்டாத்தான் மந்திர வாசல் பாப்பா மாதிரி புஷ்க் புஷ்க்குனு ஆவே. அப்பத்தானே நீயும் டீவில வர முடியும்?"

அம்புலியைக் காட்டிச் சோறூட்டிய அன்னையருக்கு இப்போது சாடிலைட் சேனல்களே சரணாலயம்.

"எங்க பப்பு ரொம்ப சமர்த்து. டாப் டென் பார்த்துண்டே ஹோம் ஒர்க் முடிச்சிடும்" என்று பூரிக்கிறார் சாந்தா மணி!

"சௌம்யா. கை கூப்பிண்டு ஒரு சுலோகம் பாடு!" என்று சௌம்யாவின் பெரியம்மா சந்திரா சீண்டிவிட்டால், குழந்தை கண் மூடி, கைகூப்பிப் பாடுகிறது : "திருப்பதி ஏழுமலை வெங்கடேசா. காதலுக்குப் பச்சைக் கொடி காட்டு லேசா."

"கட்டுப்பாடுகளெல்லாம் முன் மாதிரி இல்லைங்க. டீவி வந்துதான் பசங்க கெட்டுப் போவுதுன்னு சொல்ல முடியாது. மீடியாக்களோட நோக்கம் என்டர்டெயின்மென்ட்தான்னு ஆயிப் போச்சு. பசங்க இப்பல்லாம் பிறக்கும்போதே விவரம் தெரிஞ்சுதான் பிறக்கறாங்க. பெரிசா கவலைப்படறதில்லை. ஆனா, நைட்பில்ஸ், காண்டம், நாப்கின் விளம்பரங்களை இன்னும் நாசூக்கா சொன்னாங்கன்னா, குடும்பத்தோட பார்க்கும் போது யாரும் நெளிய வேண்டியிருக்காது!" என்கிறார் பத்மநாபன் என்கிற ஓய்வுபெற்ற அரசு ஊழியர்.

— விசித்திரக்குள்ளன்



" அங்க பாரு
வெள்ளைக் காக்கா
பறக்குது..."
"அச்சச்சோ!
அதெல்லாம் நம்ம
சீரியல்ல மட்டும்தான்
வரும்னு
நினைச்சேன்..."

"நான் என்ன தப்பு செஞ்சேன், என்னை ஏன் அந்த சீரியல்லேருந்து கழட்டி விட்டுட்டாங்கன்னு தெரியலையே!"

"வாயை வெச்சிட்டு சும்மா இருக்காம, டைரக்டர்கிட்ட, நீங்க சைடுல சூயிங்கம் உற்பத்தி செய்யறீங்களான்னு கேட்டா, பின்ன என்ன பண்ணுவாரு?"





"உப்புப் பெறாத விஷயத்துக்
கெல்லாம் இந்த ஹுசைனி
சண்டைக்கு வருவார்னு இனிமே
ஒரு பய சொல்ல முடியாது!"

''உனக்கும் எனக்கும் நிகழ்ச்சி தொகுப்பாளர் வேலை என்னிக்குத்தான் கிடைக்கும்...?''

''நாம இப்படி சுத்தமா தமிழ் பேசறவரைக்கும் வாய்ப்பேயில்ல...!''

# ஹி. டீ. ஜி.!

''இருந்தாலும் இந்த டீவிகாரங்க இவ்ளோ மோசமா பேசக்கூடாது!''

''என்னவாம்?''

''உங்க ஆபீசுக்குப் பேய் வந்ததாமேன்னு கேட்டா, எதிர்க்கட்சிக்காரங்கதான் திட்டமிட்டுச் சதி செய்து அனுப்பியிருக்காங்கன்றாங்க.''

— விசித்திரகுள்ளன்

**தனியார் சேனல்களின் போட்டி நிறைந்த இன்றைய சூழ்நிலையில் தூர்தர்ஷன் நிலை என்ன? சென்னை தொலைக்காட்சி நிலைய இயக்குனர் ஸ்ரீனிவாசா சொல்கிறார் :**

*"தனியார் சேனல்களின் போட்டி காரணமாக, தூர்தர்ஷனுக்கு மக்களிடையே இன்று மவுசு குறைந்து விட்டதல்லவா?"*

"இன்றைக்கும், தூர்தர்ஷன்தான், மிகவும் பிரம்மாண்டமான வீச்சு கொண்ட சேனல். நாட்டில் சுமார் எண்பது சதவீத பரப்பை தரைவழி ஒளிபரப்பு மூலமே தூர்தர்ஷன் சென்றடைகிறது. தனியார் சேனல்களுக்கு பொழுதுபோக்குதான் முதல் லட்சியம்; வியாபாரம்தான் இலக்கு. ஆனால் மக்களின் வரிப்பணத்தில் இயங்குகிற தூர்தர்ஷன் அப்படி நடந்து கொள்வது சாத்தியமில்லையே! சமுதாயப் பொறுப்புணர்வுடன் நாங்கள் இருக்க வேண்டுமல்லவா?

"ஒவ்வொரு குடிமகனும், தான் செலுத்தும் வரிப் பணத்தை அரசாங்கம் என்ன செய்கிறது என்று தெரிந்து கொள்ளும் உரிமை பெற்றவர். எனவே அரசாங்கத்தின் முன்னேற்றப் பணிகளை, திட்டங்களை அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டிய கடமை எங்களுக்கு இருக்கிறது. அடுத்தது கற்பித்தல். பள்ளி மாணவர்களுக்கென்றே பிரத்யேகமாக, கல்வி ஒளிபரப்பு நடத்துகிறோம். மூன்றாவதுதான் பொழுதுபோக்கு. எனவே, பொழுதுபோக்கு நிகழ்ச்சிகள் வழங்கப்பட்டாலும், அதற்கு மட்டுமே முக்கியத்துவம் தர இயலாது."

*"அதற்காக, மாற்றம் என்பதுதான் உலகில் நிலையானது என்பதையே புரிந்து கொள்ளாமல், அரைத்த மாவையே – புளித்துப் போன பாணியிலேயே இன்னும் தந்து கொண்டிருக்க வேண்டுமா என்ன?"*

"தூர்தர்ஷன் ஒளிபரப்பு என்பது ஒரு வழித் தகவல் தொடர்பு சாதனம் என்பதை மாற்றி, இருவழித் தொடர்பு என்று நிரூபித்துக் கொண்டிருக்கிறோமே! தீபாவளி, பொங்கல் போன்ற சமயங்களில், நிகழ்ச்சிகளின் இடையிடையே போட்டிகள் நடத்தி, டெலிபோனில் நேயர்களை பதில் சொல்ல வைத்து, பரிசுக்குரியவர்களை, நேரடியாகத் தேர்ந்தெடுத்து, அன்றைய தினமே ஸ்பான்சர், பரிசு பெறுபவர், வி.ஐ.பிகளை வரவழைத்து, பரிசுகளை வழங்கி விடுகிறோமே! அண்மையில் நவராத்திரியின் போது, தமிழகம் முழுதும் தூர்தர்ஷன் குழுவினரை அனுப்பி, ஒன்பது சக்தி திருக்கோயில்களைப் படம்பிடித்து வரச் செய்து, தினமும் ஒன்றாக ஒளிபரப்பினோம். அதற்கு மக்களிடையே ஏகோபித்த வரவேற்பு.

"எங்கள் நேரடி டெலிபோன் தொடர்பு நிகழ்ச்சிகள் ரொம்ப பாபுலராக உள்ளன. பல்வேறு மருத்துவர்கள், எல்.ஐ.சி., வருமான வரித்துறை, சுற்றுலா என்று பல்துறை வல்லுனர்களுடனும் மக்கள் டெலிபோனில் தங்கள் சந்தேகங்களைக் கேட்டு, விளக்கங்கள் பெற முடிவதால், இதை மிகவும் பயனுள்ள நிகழ்ச்சியாக மக்கள் நினைக்கிறார்கள்.



தூர்தர்ஷனில் ஒளிபரப்பாகும் நாடகங்களில் கூட இப்போது வித்தியாசத்தைப் பார்க்கலாம். நிறைய அவுட்டோர் காட்சிகள் இடம்பெறுகின்றன."

"விளம்பர வருவாயினைப் பொறுத்த வரை ஆண்டுக்கு ஆண்டு, குறைந்து கொண்டே வருவதாக புள்ளி விவரம் கூறுகிறதே?"

"அது உண்மைதான். முன்பு தூர்தர்ஷன் ஏகபோகமாக இருந்தது. இப்போது நிறைய சேனல்கள் வந்து விட்டன. எனவே விளம்பர வருமானம் பகிர்ந்து கொள்ளப்படுகிறது. வருமானம் சம்பாதிப்பதற்காக, வர்த்தகரீதியிலான நிகழ்ச்சிகளாகவே தர இயலாது என்பதை ஏற்கெனவே சொன்னேன். பொழுதுபோக்கு நிகழ்ச்சிகளுக்கு நிறைய ஸ்பான்சர்கள் இன்னமும் வந்து கொண்டுதான் இருக்கிறார்கள். பிற்பகலில் ஒளிபரப்பாகும் சீரியல்கள் குடும்பத் தலைவிகள் மத்தியில் மிகவும் பிரபலமாக உள்ளன. ஏவி.எம். போன்ற பெரிய நிறுவனங்கள், தூர்தர்ஷனில் தொடர்களைத் தயாரித்து வழங்குகிறார்கள். விரைவில் பாலசந்தரின் தொடர் வரப் போகிறது. மிகச் சிறந்த கிரிக்கெட், டென்னிஸ் மேட்ச்களை தூர்தர்ஷன் வழங்கிக் கொண்டிருக்கிறது."

"தூர்தர்ஷனுக்கென்றே பழைய திரைப்படங்களை எங்கேயிருந்து தேடிப் பிடிக்கிறீர்கள்?"

"சமீபத்தில், ஒரு தனியார் சேனல், நாற்பது லட்ச ரூபாய் கொடுத்து ஒரு புதிய தமிழ்ப் படத்தை வாங்கி ஒளிபரப்பினார்கள் என்று கேள்விப்பட்டேன். ஆனால், தூர்தர்ஷன் ஒரே சினிமாவுக்காக, மக்கள் வரிப் பணத்தை லட்சங்களில் வாரிக் கொடுத்து விட முடியாது. எங்களுக்கு ஞாயிற்றுக்கிழமை தமிழ்ப் படத்துக்கான பட்ஜெட் ஒரு லட்சம் ரூபாய்தான்."

"தூர்தர்ஷனில் செய்திக்கு முக்கியத்துவம் தரப்பட்டாலும் கூட, இரவு எட்டரை மணி நியூஸை வெறும் பதினைந்து நிமிடங்களுக்குக் குறைத்து விட்டீர்களே!"

"முன்பு எட்டரை முதல் ஒன்பது மணி வரை அங்கே இந்தி நியூஸ் ஒளிபரப்பாகும். அப்போது இங்கே தமிழ் நியூஸ். ஆனால் இப்போது, எட்டரை முதல் எட்டே முக்கால் வரை இந்தி நியூஸ். அதன்பின் ஒன்பது வரை ஆங்கிலத்தில் செய்திகள். எனவே, இந்தி நியூஸ் நேரத்துக்கு ஏற்ப, தமிழ் நியூசையும் பதினைந்து நிமிடமாக்க வேண்டியதாகி விட்டது."

"செயற்கைக் கோள் தமிழ் ஒளிபரப்புக்கு வரவேற்பு எப்படியிருக்கிறது?"

"டி.டி. 5, செயற்கைக் கோள் ஒளிபரப்பை இப்போது இந்தியாவில் மட்டுமின்றி, ஆஸ்திரேலியா, வளைகுடா நாடுகள், சில ஆப்ரிக்க நாடுகளில் கூடப் பார்க்க முடியும். அதற்கான நிகழ்ச்சிகளைப் பொறுத்த வரை நாங்களே முடிவு செய்து கொள்ளும் படியான ஏற்பாடு விரைவில் வரவிருக்கிறது. தவிர, கேபிள் ஆபரேட்டர்கள், டி.டி.யின் ஏதாவது இரண்டு செயற்கைக் கோள் சேனல்களைக் கட்டாயமாக, நன்கு தெரியும் படி வழங்க வேண்டும் என்று ஒரு விதி இருக்கிறதே!"

"தூர்தர்ஷனின் மிலெனியம் ஸ்பெஷல் புரோகிராம் என்ன?"

"புதிய நூற்றாண்டில், முதன் முதலில் சூரிய ஒளி விழப் போகிற இடம், அந்தமானைச் சேர்ந்த கட்சால் என்ற தீவு. அங்கிருந்து, புதிய நூற்றாண்டின் துவக்கத்தை நேரடியாக ஒளிபரப்பப் போகிறது டி.டி. அதற்கான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன!"




சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

படம் : **ஸ்ரீஹரி**

இங்கிருந்து எல்லோரும் அங்கே ஓடிக் கொண்டிருக்கையில், கனடாவிலிருந்து இங்கே வந்து செட்டிலான வினோதினி இந்த ரூபி! (பாட்டியா... தற்சமயம்); ஒரு கலகல மூட்டை! முடிச்சவிழ்த்தால் முகிழ்வது பளபள கண்கள், ஆ்ஃப்வைட் (க்ளோசப் விளம்பரம் நினைவில்லை?) பற்கள், பிரவாகப் பேச்சு, போனஸாக ஒரு மடை திறந்த சிரிப்பு—

கனடாவில் இந்தியர்களுக்கு நடந்த அழகிப் போட்டியில், முதல் ரன்னர் ஆகி, பட வேண்டியவர்கள் கண்ணில் பட்டு, இந்தி(ய) டீ.வியில் ஆக்கிரமிப்பு செய்திருக்கும் டீ.வி. ஸ்டார்! சென்ற வருடம் விருதெல்லாம் கூட கனடா அரசு வழங்கியது. ப்ளானட் ரூபி, பி.பி.எல் ஓயே, ஊலாலா ஸீரியல்கள், தற்சமயம் கைனடிக் மெகா ஸ்டார் ஷோ... என்று சக்கைப் போடு போடுகிறார். ''எப்படி இருக்கீங்க'' என்ற கொஞ்சலான (தமிழில்தான்) விசாரிப்புடன் (ஸன், ராஜ், விஜய்... அறிவிப்பாளர்கள் ஜாக்கிரதை! போட்டி காத்திருக்கிறது) பேசத் தொடங்கினார்...

# "இந்திய ஆணாதிக்கத்தில்



**கேள்வி:** ஒரு டீ.வி. 'anchor'க்கு மிகத் தேவையானவை...?

பதில்: நிகழ்ச்சியில் ஈடுபாடு, செயற்கையின்மை, சரளமாக உரையாடும் திறன், கொஞ்சம் நகைச்சுவை, கொஞ்சம் 'சீரியஸ்' தன்மை, பார்வைக்கு அழகு, நடை உடை பாவனைகளில் ஒரு மெருகு... ஹாங்... முக்கியமாக முகத்தில் ஒரு 'பளிச்' ஒளி!

கே: நீங்கள் விரும்புவது 'VJ'யிங்கா? ஸீரியல்களில் நடிப்பதா? 'ஆங்கரிங்'கா?

ப: கடைசியில் குறிப்பிட்டதுதான். ஏனென்றால் 'VJ'க்களுக்கு இசை நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்க வேண்டிய வேலை மட்டும்தான்! நடிப்பென்று வரும் போது, டைரக்டர் சொல்படி கேட்க வேண்டும்; நிகழ்ச்சித் தொகுப்பில்தான் பூரண சுதந்தரம்! இதில் கொஞ்சம் நடிக்கலாம், கொஞ்சம் உரையாடலாம், கொஞ்சம் பாடலாம், கொஞ்சம் ஆடலாம்... எதுவும் செய்யலாம்... சந்தோஷமாக!

கே: ஒரு நிகழ்ச்சியின் வெற்றிக்கு, தொகுத்து வழங்குபவரைத் தவிர வேறு யார் யார் காரணமாகிறார்கள்?

ப: 'ஸ்க்ரிப்ட் ரைட்டர்' இன்றியமையாதவர்; அவரையும் விட முக்கியமானவர் இயக்குனர். இயக்குனர் சரியாக அமையாத காரணத்தால், என்னு

டைய சில அருமையான நிகழ்ச்சிகள் 'க்ளிக்'காகாமல் போய்விட்டன!

கே: உங்களுக்கென சில முன்னுதாரணங்கள் (ரோல் மாடல்கள்) இருந்திருப்பார்களே?

ப: என் வாழ்க்கையை அமைத்துத் தந்ததில் பெற்றோர்தான் பெரிய ரோல் மாடல். என் தாய், எப்படிப் பேசுவது, எப்படி உட்காருவது என்பதிலிருந்து, எப்படி பொறுப்புணர்ச்சியுடனும், கண்ணியத்துடனும் நடந்து கொள்வது என்பதுவரை சொல்லிக் கொடுத்திருக்கிறார். அவர் அடிக்கடி லேடி டயானாவைக் காட்டி, 'பார்... பெண் என்றால் இப்படி அல்லவோ இருக்க வேண்டும்?' என்பார்!

எதிலும் முதன்மையாகத் திகழ வேண்டும் என்ற எண்ணத்துக்கு வித்திட்டவர் என் தந்தை. ஒரு காரியத்தை நன்றாகச் செய்வதற்கும், அதில் தனித் தன்மையுடன் பிரகாசிப்பதற்கும் இடையே உள்ள வேறுபாட்டை விளக்கி, அதற்குத் தேவை கொஞ்சம் அதிக முயற்சி மட்டுமே என்பதை எனக்குப் புரிய வைத்தார். கனடாவில் நாட்டியம் கற்றுக் கொண்டபோது, பரீட்சையில் எப்போதும் எனக்கு 'ஹானர்ஸ்'தான் கிடைக்கும்; 'டிஸ்டிங்ஷன்' குறிப்பிட்ட ஒன்றி

# "ஒரு கவர்ச்சி இருக்கிறது!"

ரண்டு பெண்களுக்கே கிடைத்துக் கொண்டிருந்தது எனக்கு வருத்தத்தை அளித்தது. என் தந்தை என்னிடம், 'நீ தினமும் எத்தனை நேரம் ப்ராக்டீஸ் செய்கிறாய்?' என்றார்; 'நான் ஒருமணி நேரம்' என்றேன். 'நாளையிலிருந்து ஒருமணி பதினைந்து நிமிடம் ப்ராக்டீஸ் செய்; டிஸ்டிங்ஷன் வாங்குவாய்' என்றார். அப்படியே செய்தேன்; நம்ப மாட்டீர்கள்... அந்த முறை எனக்கு டிஸ்டிங்ஷன்தான்!

தொழில் ரீதியாக எனக்கு ரேகாதான் ரோல் மாடல்! அந்த கலாட்டா இல்லாத அமைதியான கவர்ச்சி, ஆடம்பரமற்ற அடக்கம், மோகமயமான முதிர்ச்சி... எல்லாமே ரொம்பப் பிடிக்கும்.

கே: கனடாவில் வளர்ந்துவிட்டு இந்தியாவில் செட்டிலாகிவிட்டீர்களே? இந்தியா பிடித்திருக்கிறதா?

ப: ரொம்ப! இந்தியா மீது கொள்ளைப் பிரியம் எனக்கு; நம் வேதங்களின் சாரத்தையும், தொன்மையான கலாசாரத்தையும் நினைத்தால், பெருமை தாங்காது. கர்மா, மறுபிறவி, வேதாந்தத் தத்துவங்கள் எல்லாம் என்னை மிகவும் கவர்ந்தவை. சல்வார் கமீஸைப் போட்டுக் கொண்டு வீட்டில் இந்தியக் கலாசாரத்தைப் பின்பற்றுவதாகப் பலர் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். உண்மையில் பெரியோரிடத்தில் மரியாதை, இறையுணர்வு போன்றவை தான் நம் சொத்து.

கே: டிவி இளைய தலைமுறையைக் கெடுக்கிறதா?

ப: நிச்சயமாக! நல்ல புத்தகங்களைப் படிப்பதையும், ஓடி விளையாடுவதையும் விட்டுவிட்டு, டீ.வியே கதி என்று குழந்தைகள் கிடப்பது மிகுந்த வருத்தத்தை அளிக்கிறது.

கே: வி, எம்.டிவி சானல்களின் 'ட்ரெஸ் கோட்' நமக்கு ஒரு கலாசார அதிர்ச்சியைத் தருவது போல் உங்களுக்குத் தோன்றவில்லையா?

ப: ஏனில்லாமல்? நம் கலாசாரம் காற்றோடு போய் விட்டது போல்தான் தோன்றும். நானும் 'வி' சானலிலிருந்தபோது கண்ணியமற்ற உடைகளை உடுத்தியிருக்கிறேன். அப்போது எனக்கு எந்தவித அதிகாரமும் இருந்ததில்லை; ஆனால் இன்று ஓரளவு எனக்கொரு 'குரல்' இருக்கிறது! எனக்குக் கிடைத்திருக்கும் பெயரையும் புகழையும் நற்காரியங்களுக்கென்று அர்ப்பணிக்க இருக்கிறேன்.

கே: ஒரு 'பாப்' ஆல்பம் கூட செய்தீர்கள் இல்லையா?

ப: ஆம்; என் முன்னாள் கணவர் நிதின்

## வரப் போகிறது ஞான் தர்ஷன்!

தூர்தர்ஷன் விரைவில் ஒரு புது சேனலை ஆரம்பிக்கப் போகிறது. பெயர்: ஞான் தர்ஷன். முழுக்க முழுக்க ஞானத்தைத் தருகிற கல்வி ஒளிபரப்பாக இருக்குமாம்!

பாலி ஒரு சிறந்த பாடகர். அவர் குரலிலேயே ஒரு மயக்க மிருக்கும்; மிகுந்த திறமைசாலி, அவர் மீதிருந்த மிதமிஞ்சிய காதலின் வெளிப்பாடு தான் அந்த ஆல்பம். நிதின் ஒரு பரந்த மனப் பான்மை உள்ள ஆண்தான்; ஆனாலும் எங்களிடையே வேற்றுமைகள் தலை தூக்கின. இன்று அது ஒரு மறைந்து போன காதல் காவியம்! அதற்கு எந்த அர்த்தமுமில்லை!

கே: நீங்கள் கனடாவில் பல ஆண்டுகள் இருந்திருக்கிறீர்களே? கொள்கையளவில் அங்குள்ள ஆண்களுக்கும் இந்திய ஆண்களுக்கும் என்ன வித்தியாசம்?

ப: வேலையைப் பொறுத்தவரை அங்குள்ள ஆண்களுக்கு, ஆண், பெண் என்ற பேதமே கிடையாது; அங்கே ஒரு ஆண், கிச்சனில் நுழைந்து, மனைவிக்கு உதவுவான்; அவள் வேலைகளைப் பகிர்ந்து கொள்வான்; இங்கே அது அபூர்வம். ஆனால் அங்குள்ள ஆண், தன் மனைவியைப் பொத்திப் பொத்திப் பாதுகாப்பானா என்பது சந்தேகம். இந்திய ஆணின் 'மேல் சாவனிஸ'த்தில் ஒரு கவர்ச்சி இருக்கிறது. அதிகாரம் செய்வானேயன்றி, அவளுக்குத் தேவையானவற்றை எல்லாம் தானே தர வேண்டும் என எண்ணுவான். அங்கே உள்ள ஆண், பெண்ணைச் சமமான திறமைகள் உள்ளவளாக எண்ணுகிறான். இங்கே அவளை ஒரு கவர்ச்சிப் பொருளாகவே நோக்குகிறான். இங்குள்ள ஆண்கள் ஒரு "frustrated" டைப்! அதற்குப் பெண்களும் ஓரளவு காரணம். இங்கே ஒரு 18 வயது இளம் பெண் அமரும் தோரணையையும், நிற்கும் நிலையையும் பேசும் பேச்சையும் பாருங்கள். என்னவோ வளைந்து, நெளிந்து, வெட்கப்பட்டு... ஒரு தன்னம்பிக்கையே இல்லாமல்... வேதனையாக இருக்கிறது. பெண், மென்மையாகப் பேசுபவளாக, ஆனால் உள்ளத்தால் உரமேறியவளாக இருக்க வேண்டும். அத்தகைய பெண்ணை எந்த ஆடவனும் மதிப்பான்.

கே: மறுபடியும் மண முடிப்பீர்களா?

ப: நிச்சயமாக. காத்துக் கொண்டிருக்கிறேன். 'இந்து' சமயத்தைச் சார்ந்தவராகவும், மனதுக்கிசைந்தவராகவும் இருந்தால் திருமணம்தான்!

கே: கைனடிக் மெகா ஸ்டார் ஷோவில், யாருடைய பேட்டியை நீங்கள் ரொம்பவும் ரசித்தீர்கள்?

ப: அக்ஷய் குமாருடையது! ரொம்ப நெர்வஸாகி, என்னிடம், "இதைக் கேட்காதீர்கள் அதை டச் பண்ணாதீர்கள்" என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தார். ஆனால் பேட்டி துவங்கியதும், உணர்வு பூர்வமாகவும், உணர்ச்சி வசப்பட்டும், திறந்த மனத்துடனும் பேசியது ரொம்பப் பிடித்தது. அதேபோல் ராணி முகர்ஜியின் கலகலப்பும், குதூகலமும் எல்லோரையும் தொற்றிக் கொண்டுவிட்டது!

கே: பணியில் சவாலான தருணங்கள்...?

ப: ஐயோ... நேற்றுக்கூட, சஞ்சய் தத்தை 12 மணிக்கு பேட்டி காண்பதாக இருந்தது. இரண்டு மணிவரை மனிதர் தலைகாட்டவே யில்லை. ஒரே டென்ஷனாகிவிட்டது! ஷாருக்கை பேட்டி எடுத்த போதும் தலை முடியைப் பிய்த்துக் கொள்ளும் நிலை.... டாக்ஸியில் பயணிக்கும் போது ஃபோன் வந்து, வண்டியிலேயே மேக்கப் போட்டுக் கொண்டு கூட ஓடியிருக்கிறேன். பெங்களூரில் நடந்த 'மிஸ் வோர்ல்ட்' ஷோவைக் 'காம்பியர்' செய்ததும் ஒரு சவால்தான்! அது 'லைவ்' நிகழ்ச்சி. உளறிக் கொட்டி விட்டு, 'ரீ-ஷூட்' பண்ணலாம் என்பதெல்லாம் முடியாது. உடை வேறு அலைக்கழித்தது; ஏதோ ஒரு கடையில் நுழைந்து எதையோ ஒரு ட்ரெஸ்ஸை தேர்வு செய்து, எப்படியோ சமாளித்து விட்டேன்.

கே: வாசகர்களுக்கு என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?

ப: வாழ்க்கைத் தத்துவத்தை, அதன் உண்மையான அர்த்தத்தைப் புரிந்து கொள்ளுங்கள். உடல் ரீதியான தேவைகளைக் குறைத்துக் கொண்டு, ஆன்மாவுக்குத் தேவையானவற்றைத் தேடுங்கள். கூண்டிற்கு தங்க முலாம் பூசிவிட்டு, உள்ளே இருக்கும் கிளியைப் பட்டினி போடுவது விவேகமா? அடுத்த நிமிடமே நாம் மரணிக்கலாம்; எனவே எந்நேரமும் இறையுணர்வுடன் வாழக் கற்றுக் கொள்ளுங்கள். அதற்கொரு நல்ல குருவைத் தேர்வு செய்யுங்கள்; 'உற்பத்தி' செய்யப்பட்ட குருக்களைச் சொல்லவில்லை; உண்மை ஒளி வீசும் ஆன்மீக குருவைச் சொல்கிறேன். அவர் வழிகாட்டுவார்!

— ஜெயஸ்ரீ ராஜ்

நிகரற்ற பாதுகாப்பு ——————

—————— நிறைவான சேவை

# தமிழக அரசு
# நிதி நிறுவனமான
# பவர்ஃபைனான்ஸ்
# வழங்கும்

| 13.14% | 18.18% |
|---|---|
| 36 மாதங்கள் மற்றும் அதற்கு மேற்பட்ட காலத்திற்கு மாதாந்திர வட்டி 13%<br>12 மாதங்கள் & 1 நாளுக்கு 12.12%<br>25 மாதங்களுக்கு காலாண்டு வட்டி 12.63% | 60 மாதங்களுக்கு<br>(மாதாந்திர கூட்டுவட்டி* ஆண்டிற்கு 13%) |




**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

**(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)**

84, டிடிகே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை – 600 018.

தொலைபேசி : 4997689, 4995648.

28-9-99 தேதியிட்ட 'எகனாமிக் டைம்ஸ்' இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

DIPR/1467/DIS/99

**1999 - தீண்டாமை ஒழிப்பு, மத நல்லிணக்கம் மற்றும் சமூக ஒற்றுமை ஆண்டு.**

# KALKI SHOPPING PAGE






1999 டிசம்பர் 12
பிரமாதி கார்த்திகை 26
மலர் : 58
இதழ் : 20

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கிடுக்கிப் பிடியில் கிரிதர் கோமாங்!

கடந்த தேர்தலில் காங்கிரஸ் கட்சி வரலாறு காணாத தோல்வி அடைந்ததன் காரணம் என்ன என்பதை ஆராய்ந்து, இருநூறு பக்க அறிக்கை ஒன்று தயாரித்துள்ளார் ஏ.கே. ஆன்டனி.

இப்படியொரு ஆய்வு நடத்தி அறிக்கை தயாரிக்கும்படி அவரைப் பணித்த காங்கிரஸ் தலைவி சோனியா காந்தி, தாம் அதனை முழுவதும் படிக்கப் போவதாகவும் அதில் கூறப்பட்டுள்ள சிபாரிசுகளின்படி சீர்திருத்த நடவடிக்கைகள் எடுக்கப் போவதாகவும் தெரிவித்துள்ளார்.

'தேசிய அளவிலான பிரச்னைகள்; அமைப்பு ரீதியான கோளாறுகள்; அவற்றைத் திருத்துவதற்கான யோசனைகள்' என்று மூன்று பிரிவுகள் அடங்கிய ஆன்டனி அறிக்கையைப் படிக்காமலே மிகச் சுலபமாக நாம் கூறலாம் :

காங்கிரஸின் இந்த மெகா சரிவுக்கு மூலகாரணம் உட்கட்சி ஜனநாயகம் என்பது அக் கட்சியில் மருந்துக்கும் இல்லாமல் போனதுதான்!

ஆன்டனி அறிக்கை அளிக்கப்படுகின்ற நேரத்தில்,. காங்கிரஸ் ஆளும் மாநிலமான ஒரிசாவில் கோமாங் அரசு ஆட்டம் கண்டிருக்கிறது.

சூறாவளிக் கொடுமையில் அகப்பட்டுத் துவண்டு கிடக்கும் மக்களைக் கவனிக்க அம் மாநிலத்தில் நாதியில்லை. உலக வங்கிக் குழு வந்து உதவி செய்வதற்கு நடத்திய பேச்சு




வார்த்தைகளைப் பற்றி பொறுப்பாக எடுத்துச் சொல்லவோ, அடுத்தகட்ட நடவடிக்கைக்கு முற்படவோ ஒரிசா அரசு முயற்சி மேற்கொள்ளவில்லை. மாறாக, உதவிப் பணிகளை அப்படியே நிறுத்திவிட்டு உட்கட்சிப் பூசலில் சிண்டைப் பிய்த்துக் கொண்டிருக்கிறார்கள் ஒரிசா எம்.எல்.ஏக்கள்.

காங்கிரஸ் சட்டமனறக் கட்சியின் எண்பது உறுப்பினர்களுள் 67 பேர் கோமாங் தவிர வேறு யாருக்கும் ஆதரவு அளிக்கத் தயார் என அறிவிக்க, சட்டமன்றக் கூட்டத் தொடரை ஒத்தி வைக்கும்படி கோரி ஆளுனர் எம்.எம். ராஜேந்திரனை இரவு பதினோரு மணிக்குப் போய்ச் சந்தித்திருக்கிறார் ஒரிசா முதல்வர் கோமாங்!

சமரசம் செய்வதற்கு வந்து சேர்ந்த மாதவராவ் சிந்தியாவும் வயலார் ரவியும் தோற்று நிற்க, ஒரிசாவின் முன்னாள் முதல்வர் பட்நாயக். 'எனக்கென்ன வந்தது?' என்று முறுக்கிக் கொண்டு ஒதுங்கியிருக்க, அம்மாநிலத்தின் ஏழை எளிய மக்களுடைய துயரமும் துன்பமும் தீர்க்கப்படாமல் நீடிக்கிறது.

உதவிப் பணிகளிடையே முறைகேடு நடந்திருப்பதாகக் குற்றச்சாட்டுகள் எழுந்த நேரத்தில், அவற்றைப் பொய்யாக்கி, மக்களுக்கு உதவியும் அரசுக்கு நற்பெயரும் பெற்றுத் தரும் வகையிலல்லவா எம்.எல்.ஏக்கள் செயல்பட வேண்டும்! மாறாக, முதல்வரை எதிர்க்க இது நல்ல தருணம் என்று அவர்கள் முடிவு செய்திருக்கிறார்கள்.

முதல்வர் கிரிதர் கோமாங், முறைப்படி ஒரிசா சட்டமன்ற உறுப்பினர்களின் ஆதரவுடன் தேர்ந்தெடுக்கப்படவில்லை; காங்கிரஸ் மேலிடத்தின் நியமன முதல்வர் அவர் என்பதால்தான் இத்தனை கோளாறுகள்.

தான்தோன்றித்தனமாகச் செயல்பட்டு, தனக்கு வேண்டியவரைப் பதவியிலமர்த்தும் பழக்கம் காங்கிரஸின் மரபாகவே மாறியிருக்கிறது.

கோவா காங்கிரஸ் ஆட்சி கவிழவும் இதேதான் காரணம். ஃபலேரோ நியமன முதல்வராக




அன்றி ஜனநாயக முறைப்படி தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தால் கட்சி பிளவுபட்டுப் போய், இப்போது நடந்துள்ளது போல் அதிருப்தி காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் எதிர்க்கட்சியுடன் இணைந்து மாற்று அரசு அமைத்திருக்க முடியாது.

எம்.எல்.ஏக்கள் கூடி வாக்களித்துத் தேர்வு செய்யும் ஒரு தலைவர் பெறக்கூடிய ஆதரவை நியமனத் தலைவர்கள் ஒருநாளும் பெற மாட்டார்கள்.

இதை விவரித்துச் சொல்ல ஆன்டனி அறிக்கையோ வேறு ஆய்வோ அவசியமே இல்லை.

'சோனியா காந்தி தலைமை ஏற்றால் காங்கிரசுக்குக் கதி மோட்சம் கிடைக்கும்' என்று பேசியவர்களுக்குத் தேர்தல் முடிவுகள் ஒரு பலத்த அடி. இப்போது காங்கிரஸ் ஆளும் மாநிலங்களில் நடந்து வரும் பூசல்களும் அநீதிகளும் அதனினும் பலத்த அடி. அதிலும் ஒரிசாவில் நடக்கின்ற கேவலம் அக்கட்சியின் கௌரவத்துக்கே மரண அடி.

கட்சித் தலைவரே விரைந்து சென்று தலையிட்டு, தாற்காலிகமாகவாவது சமரசம் செய்வித்து ஒரிசாவில் நிவாரணப் பணிகள் தொடர்வதற்கு வழிசெய்திருக்க வேண்டும். அதை விடுத்து, ஆன்டனி அறிக்கையைப் புரட்டிக் கொண்டு உட்கார்ந்திருப்பது பசித்தவன் பழங்கணக்குப் பார்த்த கதைதான்!

காங்கிரஸ் போன்ற ஒரு தேசிய கட்சி, மூன்று தலைமுறையினரின் உழைப்பையும் சிந்தனையையும் பெற்று வளர்ந்த ஸ்தாபனம். அதன் வலிமையையும் ஆக்கபூர்வமான சக்தியையும் காத்து, வளர்த்து, பாதுகாத்துத் தரும் பொறுப்பு அதன் முக்கிய தலைவர்களுக்கு இருக்கிறது. தனிநபர் ஆளுமையைக் கொண்டு அதை நீடித்து நடத்த முடியாது. அதற்கான ஒரே வழி, உட்கட்சி ஜனநாயகத்தை அனைத்து நிலைகளிலும் உயிர்ப்பிப்பதுதான். இன்று கட்சித் தலைமைப் பொறுப்பை ஏற்றுள்ள சோனியா கூட நியமனத் தலைவர்தான்!

பதவிக்கும் அதிகாரத்துக்கும் ஆசைப்பட்டுக் கொண்டு உட்கட்சி ஜனநாயகத்தை ஓரங் கட்டுவது காங்கிரஸின் பரிபூரண வீழ்ச்சியைத் துரிதப்படுத்தி விடும். ●

# தெய்வ தரிசனம் — 6

சுக்கிர தசை என்றால் எல்லோருக்கும் தெரியும். செழிப்பும், புகழும், செல்வமும் நல்ல பெயரும், நல்லோர் சேர்க்கையும் ஒருவனுக்கு உண்டானால் 'அவனுக்குச் சுக்கிர தசை அடிக்கிறது...' என்கிறோம். குருட்டு அதிர்ஷ்டமாக ஏதாவது பெரிய செல்வம் கிடைத்தால்கூட அதை சுக்ரதசை என்று சொல்வதுண்டு.

வெள்ளிக்கிழமைக்கு உரிய தேவதை ஸ்ரீ சுக்ரன். விடி வெள்ளி என்று சொல்லும் போது அதிகாலையில் நாம் பார்க்கின்ற வெள்ளி என்றும், நமது வாழ்வு புலரச் செய்கின்ற வெள்ளி என்றும் இரண்டு பொருள் கொள்ளலாம்.



• ஆதி கற்பகாம்பாள்

சுக்கிர பகவான் பிருகு மகரிஷிக்குப் புதல்வர். தாயின் பெயர் புலோமிசை. பிருகுவின் பிள்ளைக்குப் பார்க்கவன் என்று பெயர் வந்தது. இன்னும் களத்திரகாரகன், வாகன காரகன், போக காரகன் என்றெல்லாம் பெயர்கள் உண்டு. தூய வெண்மையாகத் தெரிவதால் வெள்ளி என்று தமிழில் அழைத்தார்கள்.

பார்க்கவர் மகா மேதை. அசுரர்கள் அவரைத் தங்கள் குருவாக இருக்கும்படி வேண்டினார்கள். தேவகுருவுக்கு மேலான அறிவுடையவர் என்று பாராட்டினார்கள். யுத்தங்களில் அசுரர்கள், தேவர்களால் கொல்லப்பட்டனர். சுக்கிரர் இறந்தவர்களை எழுப்ப வேண்டும் என்ற ஆவேசத்துடன் சிவ பெருமானைக் குறித்துத் தவம் செய்தார். கேட்ட வரத்தை நல்கும் சிவபெருமான் சஞ்ஜீவினி (அமிர்த சஞ்ஜீவி) மந்திரத்தை உபதேசித்தார்.

அந்தகாசுரன் என்று ஒரு அசுரன். தேவர்களுடன் யுத்தம் செய்தான். யுத்தத்தில் பல அசுரர்கள் மடிந்தனர். சஞ்ஜீவினி மந்திரம் சொல்லி இறந்தவர்களை எல்லாம் உயிர் பெற்று எழச் செய்து விட்டார் சுக்கிரர். பிறகு குபேரனுடைய சம்பத்துக்களையெல்லாம் எப்படியோ கவர்ந்து அசுரர்களுக்குக் கொடுத்து விட்டார். குபேரன் சிவபக்தன். அவன் சிவபெருமானிடம் போய் "இனிமேல் தேவ குலகில் யாரும் மிஞ்ச மாட்டார்கள். அசுரர்கள் கை ஓங்கி விட்டது" என்று புலம்பினான். சிவ பெருமான் சுக்கிரரை அப்படியே தூக்கி விழுங்கி விட்டார்.



• கற்பகாம்பிகை

பல காலம் ஈசுவரனுக்குள்ளேயே இருந்து தவம் செய்தார் சுக்கிரர். பார்வதி தேவியைப் பிரார்த்தித்தார். அம்பிகை கருணை வடிவானவள் அல்லவா? "சுக்கிரனுக்கு நீங்களே வரங் கொடுத்துவிட்டு அதற்காகவே தண்டிக்கலாமா?" என்று பரிந்து பேசி அவருக்கு மீண்டும் சரீரம் தரும்படி கேட்டுக் கொண்டாள். சுக்கிரன் சிவ புத்திரன் ஆனார். மீண்டும் காசியில் தவம் செய்து கிரஹ பதவி அடைந்தார்.

# சிவனுக்குள் தவம் செய்த சுக்கிரன்!



• அக்னீஸ்வரர்

அம்பிகையிடம் பக்தியுடையவர் சுக்கிரர். அதனால்தான் வெள்ளிக்கிழமையில் தேவியை யார் பூஜிக்கிறார்களோ, அவர்களுக்கு மகிழ்ச்சியுடன் தன தான்யங்களை அள்ளித் தருகிறார்.

சுக்கிர பகவானுக்கு எப்பேர்ப்பட்ட அதிர்ஷ்டம்! தேவியின் அருளையும் பெற்று சிவ ஸ்வரூபமாகவே இருக்கிறார் அல்லவா?



• கஞ்சனூர்

**சு**க்கிரருக்கு ஒரே கண்தான் உண்டு. இது அனைவரும் அறிந்த கதையே. ஹிரண்யன் காலத்திலிருந்து, அவனுடைய கொள்ளுப் பேரன் காலம் வரை அசுர குருவாக இருந்தார் சுக்கிரன். (மஹாபலி ப்ரஹ்லாதனுடைய பேரன்.) மஹாபலி வாமனருக்கு மூன்றடி மண் தருவதாக வாக்களித்து விட்டார். குரு தடுத்தும் கேட்கவில்லை. தாரை வார்க்கும்போது தண்ணீர் விழாமலிருப்பதற்காகக் கமண்டலத்தின் மூக்கில் ஒரு வண்டு ரூபமாக அடைத்துக் கொண்டார் சுக்கிரர். வாமனர் தர்ப்பையால் குத்தியதும் கண் குருடாகி விட்டது. பாவம்! சிஷ்யனுக்காகத் தன் கண்ணையே இழந்த குருவைப் பார்க்க முடியுமா இந்த உலகில்?

**ந**மக்கு சுக்கிர தசையை அருளக்கூடிய சுக்கிரருடைய சிறப்புத் தலமான கஞ்சனூருக்குப் போகிறோம். இங்கே தனியாகப் பார்க்கவருக்கு சந்நிதி கிடையாது. சிவ பெருமானே சுக்கிரராக இருந்து அடியார்களுக்கு வரம் அருளி வருகிறார். சுக்கிரனைத் தம் வயிற்றில் அடக்கியபோது இருந்த கோலமாக இருக்கலாமோ! இறைவன் பெயர் அக்னீச்வரர். அம்பிகையின் பெயர் கற்பக நாயகி.

சூரியனார் கோவிலிலிருந்து சுமார் நான்கு கிலோமீட்டர் தொலைவில் இருக்கிறது கஞ்சனூர். இந்த ஊரில் ஒரு காலத்தில்

**ஆனந்தி**

கரும்புகள் நெரிந்த சாறு ஆறாக ஓடிற்றாம். அதனால் 'கரும்பஞ்சாறு' என்று அழைத் தார்களாம். பிறகு கஞ்சாறு என்று மருவி கஞ்சனூராகிவிட்டது என்று படித்தது நினைவு வருகிறது.

ஆனால் இது சரியான விளக்கமாகத் தோன்றவில்லை. அருள் மிகு அக்னீச் வரரைத் தரிசித்துக்கொண்டு பிராகாரத்தில் வலம் வரும்போது கதவுக்குப் பக்கத்தில் ஒரு லிங்கம். அதற்கு மேல் சுவரில் 'கம்ஸலிங்கம்' என்று எழுதியிருந்தது. அதற்குச் சான்று சொல்வது போல 'சந்திரன், பராசர முனிவர், கண்ணபிரானின் தாய்மாமா கம் ஸன் முதலியோர் இந்தத் தலத்தில் தவம் செய்து பேறு பெற்றார்கள்' என்று வேறு ஒரு நூலில் படித்தேன். கம்ஸனைத் தமிழில் கஞ்சன் என்று சொல்வதுண்டு. கஞ்சன் தவம் செய்த ஊர் கஞ்சனூர் ஆக இருக் கலாம்.

'கம்ஸலிங்கம்' என்று எழுதியிருக்கிறதே. என்ன ஐதிகம்?'' என்று கோவிலில் ஒருவரி டம் கேட்டேன். அவர், ''கம்ஸன் என்று ஒரு பாண்டிய ராஜா இந்தக் கோவிலுக்குத் திருப்பணி பண்ணினார். அவர் செய்து வைத்த லிங்கம்'' என்றார்!

அக்னீசுவரருக்கு அபிஷேகம் செய்யச் சிலர் வந்து காத்திருக்கிறார்கள்.

கற்பகாம்பிகையின் சந்நிதியில் யாரும் இல்லை. கதவு சாத்தியிருக்கிறது. பலகணி வழியே தரிசனம் செய்துகொண்டு, ''சுக்கிர பகவானுக்கு இரங்கிய தாயே! இந்தப் பாரத நாட்டுக்கு சுக்கிரதசை அடிக்கும்படி அருள்வாய்'' என்று பிரார்த்தித்துக் கொண்டேன். அம்பிகையை நன்றாகத் தரிசிக்க முடியவில்லையே என்ற குறைக்கே இடமில்லாமல் கருவறைக்கு வெளியே அம்பிகையின் சிலை இருப்பதைப் பார்த் தேன். சிவப்புச் சேலையுடன், கிரீடமணிந்து கம்பீரமாக நிற்கிறாள் ஆதி கற்பகாம்பிகை. ஏன் அம்பிகை வெளியே இருக்கிறாள் என் பதற்கும் காரணம் தெரியவில்லை. கேட் பதற்கு யாரும் இல்லை!

இந்த ஊர்க் கோவிலுக்கு இன்னொரு சிறப்பு உண்டு. பிரும்மாவின் வேண்டு கோளுக்கு இணங்கி சிவ பெருமானும் பார்வதி தேவியும் திருமணக் கோலத்தில் அவருக்குக் காட்சி யளித்தார்கள். இந்த மங்களமான கோவிலில் கற்பகாம்பிகையையும், அக்னீச்வரரையும் தரிசித்து மன நிறைவு பெறுகிறோம். ஆடிப்பூர அம்மன் அழகு வடிவ மாகக் காட்சி தரு கிறாள்.

இந்தக் கோவிலின் ஸ்தல விருட்சம் புரச மரம். தளதளவென்று தளிர்களுடன் பிராகாரத்தில் இருக் கிறது. பிரும்ம, அக்னி, பராசர தீர்த்தங்கள் இருக்கின்றன.





# 21 ஆம் நூற்றாண்டை உங்களுக்கு வழங்குகிறோம்

**US 64**

## எதிர்காலம் உங்களுடையது ஆகட்டும்



- அயராத நிதி (ஃபண்ட்) நிர்வாகம்
- சமச் சீராக்கப்பட்ட பங்கு நிர்வாகம்
- விறுவிறுப்பான ஆஸ்தி பங்கீடு

**வளர்ச்சியை ஊக்குவித்து சிறந்த ஆதாயங்களைப் பெறுவதற்காக**

தன் முதலீட்டாளர்களுக்கு சீரான வளர்ச்சியை மற்றும் ஆதாயங்களை உறுதிப்படுத்தும் நோக்கத்தோடு, இந்தியாவின் முன்னணி நிறுவனங்களின் தரமான பங்குகளில் யூ எஸ் 64 முதலீடு செய்கிறது. பங்கு மார்க்கெட்டின் நிலைமைகளுக்கேற்ப திட்டத்தின் பங்கு நிர்வாகம் இடைவிடாது சமச் சீராக்கப்படுகிறது. வரிச் செலுத்தும் முதலீட்டாளர்களுக்கு மற்றுமோர் அனுகூலம் – முழுமையான வரி விலக்குப் பெறும் வசதி. ஆகையால் **எதிர்காலத்தை உங்களுடையது ஆக்க,** உங்கள் அருகமைந்த யூடிஐ கிளையை, முக்கிய பிரதிநிதியை அல்லது முகவரை அணுகவும்.

**நவம்பர் 1999க்கான**
**விற்பனை விலை : ரூ. 14.10**




**யூனிட் ட்ரஸ்ட் ஆஃப் இந்தியா**

13, சர். விட்டல்தாஸ் தாக்கர்சி மார்க், நியூ மெரின் லைன்ஸ், மும்பை – 400 020. தொ : 2031818. வருகை தருக www.unittrustofindia.com

**மண்டல அலுவலகம் :** 29 இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 5210335, 5210347.
**கிளை அலுவலகங்கள்** கோயம்புத்தூர் போன்: 214973. சென்னை போன் : 5210335, 5210347.
மதுரை போன்: 738186. திருச்சி போன்: 760060.

SAATCHI & SAATCHI - 21599 C TAM B



## கல்லூரிக் கனவு!

''கல்லூரி நாட்களில், டி.வி.யில் ஷோபனா ரவி செய்தி வாசிப்பதைப் பார்த்துத்தான் எனக்கும் செய்தி வாசிப்பவர் ஆக வேண்டும் என்ற ஆசை ஏற்பட்டது. கல்லூரிப் படிப்பை முடித்த பிறகு, தூர்தர்ஷனுக்கு விண்ணப்பிக்க, அறிவிப்பாளர் வேலை கிடைத்தது. தவிர 'சாப்பிட வாங்க' போன்ற நிகழ்ச்சிகளுக்கு தொகுப்பாளினியாகவும் இருக்க வாய்ப்புக் கிடைத்தது'' என்கிறார் தேவி சுதாகர்.

ராஜ் டி.வி.யில் செய்தி ஆரம்பித்தபோது, அங்கே விண்ணப்பித்தார். தேர்வு செய்யப்பட்டு, முதல் நாள் செய்தி வாசித்தது ஒரு பெருமைக்குரிய வாய்ப்பு. அன்று சுதந்தரப் பொன்விழா தினம்!

''வாரத்தில் ஐந்து அல்லது ஆறு நாட்களில் நியூஸ் படிப்பேன். நியூஸ் படிக்காத நாளில் ரொம்ப போர் அடிக்கும்'' என்று கூறும் தேவியின் ஹாபி ஓவியங்கள் வரைவது. ஆயில் பெயிண்டிங் இவர் ஸ்பெஷாலிடி.

திருமயிலையில் கற்பகாம்பிகை மயிலாகத் தவம் செய்து ஈசனை வேண்டி அவரை அடைந்ததாக ஸ்தல புராணம் இருக்கிறது. கஞ்சனூரிலோ, சிவபெருமான் இறைவியை இறைஞ்சி அவளுடைய அருள் பெற்றதாக ஐதிகமாம்! ரொம்ப மகிழ்ச்சியாக இருந்தது. அன்னை என்பவள் ''ஆதி பராசக்தி தேவியடா'' என்று பாரதியார் வியந்த சக்தி அல்லவா?

சென்னை திருமயிலையிலும் வெள்ளீச்வரர் கோவில் இருக்கிறது. தெற்கு மாட வீதியில் உள்ள கணபதி கோவிலில் வெள்ளீச்வரர் தரிசனம் தருகிறார். சுக்கிர பகவான் பூஜித்த சிவலிங்கம்.

''ஸர்வ சாஸ்த்திர ப்ரவக்தாரம் பார்க்கவம் ப்ரணமாம்யஹம்'' என்று நவக்ரஹ ஸ்தோத்திரமும் ''ஸகல தத்வக்ஞம்'' என்று ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதரும் போற்றுகின்ற சுக்கிர பகவானுக்கு உசனன், காவியன், ஹிமாபன், குந்தவளன், வேத வேதாங்க பாரகன் நீதிக்ஞன், கருணாஸிந்து என்றெல்லாம் கூடப் பெயர்கள் உண்டு. இனிப்பை விரும்புகிறவர். மழை பொழியச் செய்கிறவர். சுக்கிர தசை இருபது ஆண்டுகள் என்கிறார்கள்.

சுக்கிர பகவானுக்குப் பிடித்த தானியம் மொச்சை. தினமும் இரவு ஒரு தட்டில் மொச்சைக் கொட்டையை வைத்துப் பக்கத்தில் வைத்துக் கொள்ளுங்கள். எழுந்த உடனே முதலில் மொச்சையைப் பாருங்கள். பிறகு மொச்சையைத் தானம் செய்யுங்கள். உங்களுக்கு ஸ்ரீ சுக்கிர பகவானின் அருள் நிச்சயமாகக் கிட்டும்!

எட்டு வெள்ளிக் குதிரைகள் பூட்டிய ஐங்கோண வடிவத் தேரில் ஜாஜ்வல்யமாக வானவீதியின் அடிவாரத்தில் ஒளி வீசித் திகழ்பவர் சுக்கிரபகவான். (ஒரு வெள்ளைக் குதிரை பூட்டிய தேர் என்றும் சொல்கிறார்கள்.)

சுக்ர பகவானுடைய அருளினால் சரீர ஆரோக்யம், நல்லவர்கள் நட்பு, நல்ல வீடு, செல்வம் எல்லாம் கிட்டும். ஆசை, வெறுப்பு, கோபம், பொறாமை முதலிய குணங்களைக் கொண்டவர்கள் அசுரர்கள். இவர்களுடைய துர்க்குணங்களை அடக்கி அவர்களுக்கே உபதேசம் செய்து நல்வழிப் படுத்த முயன்றவர் சுக்கிரர். நாமும் காமக் குரோதாதி மத மாத்ஸரியங்களை அடக்க அவர் அருள் புரிய மாட்டாரா என்ன?

# 'உழவர் சந்தை' வெற்றி பெறுமா?



மதுரையில் சென்ட்ரல் மார்க்கெட், சாந்தி நகர் சந்தை, ஜம்புரோபுரம் மார்க்கெட், புதூர் மார்க்கெட் என்று ஏராளமான மார்க்கெட்டுகள் ஏற்கெனவே உள்ளன. இந்நிலையில் மெனக்கெட்டு அண்ணாநகர் வந்து உழவர் சந்தையில் காய் வாங்கிக்கிட்டுப் போவாங்களா யாராவது?'' என்ற கேள்வியைப் புறந் தள்ளி விட முடியாது. 'ஜெய்ஹிந்த்புரத்திலிருந்து டவுன் பஸ் பிடித்து உழவர் சந்தையில் 3 ரூபாய் குறைத்து வாங்குவதற்கு ஜெய்ஹிந்த்புரத்திலேயே ஒரு ரூபாயோ அரை ரூபாயோ கூடக் கொடுத்து இங்கேயே வாங்கிட்டு போறேன்' என்று சொல்லும் ஜெய்ஹிந்த்புர வாசியைப் போலத்தான் மற்ற பகுதிகளில் உள்ளவர்களும் கூறுகிறார்கள். காரணம் டவுன் பஸ் செலவு, காபி... டீபி... அலைச்சலில்லாமல் வாசலிலேயே வாங்கி விடும் வசதி இருப்பதுதான்.

அப்படியென்றால் உழவர் சந்தையால் பயனே இல்லையா? 'லை' என்றும் ஒதுக்கி விட முடியாது.

தோட்டத்தில் கஷ்டப்பட்டு விவசாயம் செய்யும் விவசாயிக்கும், பொதுமக்களுக்கும் நேரடித் தொடர்பு உண்டாவதால் 'டைரக்ட் மார்க்கெட்டிங்' காரணமாக விலை ரொம்ப சல்லுசு. விவசாயிக்கு வியாபாரியாக புரமோஷன்.

சென்ட்ரல் மார்க்கெட்டிலுள்ள விலைக்கும் உழவர் சந்தையிலுள்ள விலைக்கும் ஏணி வைத்தால்கூட எட்ட முடியாத வித்தியாசம். அங்கே உருளைக் கிழங்கு 13 ரூபாய்க்கு விற்கிறது என்றால் உழவர் சந்தையில் ஒன்லி நைன் ருப்பீஸ்! கீரைக் கட்டு எதை எடுத்தாலும் வெறும் எட்டணாதான்.

கடைகளில் உட்கார்ந்து வியாபாரம் செய்ய வாடகை கிடையாது. கமிஷன் கிடையாது. இப்படி ஏகப்பட்ட



• பி. பால சுப்ரமணியன்



• கே. லட்சுமணன்

மாதிரி செய்யணும்!'' என்றனர்.

“எங்க காய்கறிகளை நாங்களே மக்களுக்கு எங்க கையால கொடுக்கிறபோது சந்தோஷமாத்தான் இருக்கு. இதுவரைக்கும் எந்தப் பிரச்னையும் இல்லே. இனிமே வராம பாத்துக்கறது அதிகாரிங்க பொறுப்பு. காலையிலிருந்து மதியம் வரைக்கும் இங்கேயே வியாபாரம் செய்யுறதால தோட்ட வேலை கொஞ்சம் பாதிக்கும். அதைக்கூட சமாளிச்சிடுவோம்...' இப்ப இங்க உழவர் சந்தையில் இடம் பத்தாத காரணத்தால் ஒரு இடத்தில் இரண்டு பேர் உட்கார்ந்து வியாபாரம் செய்யறோம். ஆனா இரண்டு பேருக்கும் ஒரே தராசுதான். ஒரே எடைக்கல்தான். இரண்டு பேருக்கும் கஸ்டமருங்க வந்துட்டா 'கஷ்டம்'தான். 'டு இன் ஒன்' டேப் ரிக்கார்டரில் இருக்கலாம். உழவர் சந்தையில் இருக்கலாமா? சீக்கிரம் தனித் தனி தராசு கொடுத்துடுவோம்னு சொல்லியிருக்காங்க!'' என்றார் கத்தரிக்காய் வியாபாரம் செய்யும் மயிலு.



பாரதிராஜாவின் மயிலு, சப்பாணிக்காக காத்துக்கிட்டே இருந்த மாதிரி, இந்த மயிலு தராசுக்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்!

விவசாய வியாபாரிகளின் தராசுக் கஷ்டம் பற்றி சந்தை நிர்வாக அதிகாரி பி. பாலசுப்ரமணியத்தின் கவனத்துக்குக் கொண்டு சென்றபோது, ''உடனடியா ஆரம்பிச்சதால சில ஏற்பாடுகளைச் சரியா செய்யலை. அதுல ஒண்ணுதான் இந்தத் தராசு பிரச்னை. இதை சீக்கிரம் தீர்த்திடுவோம்!'' என்றார்.



• உழவர் சந்தையைத் திறந்து வைத்து போணி செய்யும் முதல்வர்...

'இடையாது'களால் மக்களுக்குக் குறைந்த செலவில் அதிக காய்கறிகள் இடைக்கிறது.

''பழைய காலம் திரும்புற மாதிரி இருக்குதுங்க. கொஞ்சமா காசு கொண்டு போய், பை நிறைய வாங்கிட்டு வர முடியுது!'' என்கிறார்கள் அண்ணாநகரில் வசிக்கும் நடேசன் தம்பதியர். அவர்களே தொடர்ந்து, ''இவ்வளவு ஃபிரஷ்ஷாக காய்கறிகள் இடைக்கிறது ஆச்சர்யம். ஏமாத்துற வேலை இல்லாததால் எடை ரொம்ப கரெக்டா இருக்கு. காரணம் அரசே தராசுத் தட்டு, எடைக் கற்களைத் தந்துடறாங்க. இந்தத் திட்டம் ஃபெயிலியர் ஆகாம இருந்தா, மதுரையில எல்லா இடத்திலேயும் ஆரம்பிச்சு எல்லோருக்கும் பயன்படுற

விவசாயிகளை அடையாளம் கண்டுபிடிக்க உள்ளூர் விவசாய அதிகாரிகிட்டே சான்றிதழ் வாங்கிக் கொண்டு வர வேண்டுமாம். அப்படி வாங்கி வந்த விவசாயிகளின் போட்டோவை அடையாள அட்டையில் ஒட்டி ஒவ்வொரு நாளும் கடை எண் ஒதுக்குவார்களாம். ஏன் தினசரி

வெவ்வேறு கடை என்? என்ற கேள்விக்கு இப்படி பதில் சொன்னார் பாலசுப்ரமணியன்: "முதல் நாள் எட்டாம் நம்பர் கடை என்றால் அடுத்த நாள் பத்தாம் நம்பர் கடையை ஒதுக்குவோம். காரணம் அவர்களுக்குள் இது நம்ம இடம் என்ற எண்ணம் வந்து விடக்கூடாது. அது மட்டுமில்லே, வருகிற வாடிக்கையாளர்களும் ஒரே ஆளுகிட்டே பழக்கம் வச்சு ஒரே கடையில குவிஞ்சுடக் கூடாது."

போகப் போக உழவர் சந்தை உ'லவ்'வர் சந்தையாக மக்கள் மனதில் இடம் பெற்று விடும். அதனால் சென்ட்ரல் மார்க்கெட் வியாபாரம் பாய் விரிக்காமல் படுத்து விடும் என்ற ஹேஷ்யங்களையெல்லாம் மறுக்கிறார் சென்ட்ரல் மார்க்கெட் சங்க உதவித் தலைவர் கே. லெட்சுமணன், "அரசு இன்னும் பத்து உழவர் சந்தைகூட ஆரம்பிக்கட்டும். எங்களுக்குத்தான் லாபம். ஏன் என்றால் உழவர் சந்தையில இருக்கிற முக்கால் வாசிப்பேர் விவசாயிகளே இல்லை. எனக்குக் கூட ஆண்டிப்பட்டியில 10 ஏக்கர் நிலம் இருக்கு. ஆனால் விவசாயம் பண்ணலை. இந்த பட்டாவைக் காண்பிச்சு என்னால் ஈஸியா அடையாள அட்டை வாங்க முடியும். நான் யார் யாருனு சொல்ல விரும்பலை. எங்காளுக சில பேர் அங்க விவசாயிகள் என்கிற பெயரில் நிச்சயமாக இருக்கிறார்கள். வாயில் நுழையாத ஊர்ப் பெயரைக் கொண்ட குப்பன் கொஞ்சுண்டு நிலம் வச்சிருக்க, பட்டாவை காண்பிச்சு ஐ.டி.கார்டு வாங்கிட்டான். காய்கறிக்கு எங்க போவான்? எங்கிட்டே வந்து காய்கறி வாங்கி விற்கிறான். அதனாலதான் மறுபடி மறுபடி சொல்றேன்... உழவர் சந்தையால எங்களுக்குத்தான் லாபம்... லாபம்... லாபம். எங்களுக்கு லாபம்னா உழவர் சந்தை திட்டம் ஆட்டோமேட்டிக்கா தோல்விதானே?" என்றதோடு நின்று விடாமல் மேலும் தொடர்ந்தார்...

"விவசாயி உண்மையான ஆளுன்னே வச்சுக்கிட்டாக் கூட எவ்வளவு நாள் அவன் தோட்டத்தில விளையற காய்கறியைக் கொண்டு வருவான்? வருஷம் பூரா எவன் தோட்டத்தில் விளையும்? இப்ப உழவர் சந்தைக்குப் போயிருக்கிற விவசாயிகள் எல்லாருக்கும் விதைக்கிறதிலிருந்து விளையற வரைக்கும் வட்டிக்கு வாங்கி குடும்பச் செலவு செய்ய நாங்க கொடுப்போம். அரசு எப்படி எல்லோருக்கும் முன் பணம் கொடுக்க முடியும்? மத்திய அரசு, மாநில அரசு தரும் உர மானியத்தையே விவசாயிகளால் சரியா வாங்க முடியலையே? மதுரை, திருச்சி, சென்னை இப்படி எந்த ஊராயிருந்தாலும் சரி, காய்கறி வியாபாரி என்றால் கௌரவக் குறைச்சல்தான். உழவர் சந்தை கமிட்டியில சம்பந்தம் இல்லாத கட்சி ஆட்களைப் போடுறாங்களே... காய்கறியை விற்றுப் பார்த்து கஷ்ட நஷ்டம் தெரிஞ்ச எங்களை, எங்களில் ஓர் ஆளைக்கூட கமிட்டி மெம்பரா நியமிக்கலை. இவங்களால எப்படி சரியான முடிவு எடுக்க முடியும்? லாரி ஸ்டிரைக்கின்போது பஸ்ல காய்கறியைக் கொண்டு வந்தபோதே சம்பந்தப்பட்ட அதிகாரிங்க 'சம்திங்' வாங்கினவங்க. பஸ்ல இலவசமா கொண்டு போக எத்தனை நாள் அனுமதிப்பாங்க? இலவச பாஸ் வச்சிருக்கிற படிக்கிற பசங்க நின்னாலே நிக்காம போயிடுவாங்க பஸ் டிரைவருங்க. போகப் போகத்தான் சிரமம் தெரியும்" என்றார் லெட்சுமணன்.

இங்லிஷ் காய்கறிகள் எந்த விவசாயி நிலத்தில் விளையும்? ஊட்டி, கொடைக்கானலிலிருந்து உழவர் சந்தைக்கு வர முடியுமா? கேள்விகளைக் குவிக்கிறார் லெட்சுமணன்.

நிறைய ப்ளஸ்கள் நிறைய மைனஸ்கள். உழவர் சந்தை உ'லவ்'வர் சந்தை ஆகுமா? உதவாச் சந்தையாகுமா? என்பதை அறிய இன்னும் ஐந்தாறு மாதங்கள் ஆக வேண்டும். அதுவரை, முதல் உழவர் சந்தையில் உழவர்கள் என்ற பெயரில் வேறு யாரும் நுழைந்து விடாமலிருக்க கலெக்டர் கவனமாக இருந்தால் முதல்வரின் முயற்சி மக்களுக்குப் பயன்படும்.

**— வியூவ்ஸ் நியூஸ்**

படங்கள்: **எம். பாலமுருகன்**



**"கேடி கந்தப்பனுக்கு திடீர்னு கடவுள் நம்பிக்கை வந்துருச்சா, கோயில் உண்டியல்ல காசு போடுறானே?"**

**"அதொண்ணுமில்லை, காசு போட்டு, சத்தத்தை வைச்சு, எந்த அளவுக்கு உண்டியல் நிரம்பியிருக்குன்னு கணக்குப் பார்க்கிறான் அதான்!"**

**— சீர்காழி வி. ரேவதி**

ஸ்ரீ ஹரிஹர புத்ராய நம



# ஆனைமேலழகர் ஸ்ரீ பால சாஸ்தா
# ஆலய திருப்பணி கைங்கர்ய பத்திரிகை

த்ரியம்பக புராதீசம் கணாதிபஸமன்விதம்
கஜாரூடமஹம் வந்தே சாஸ்தாரம் குலதைவதம்

நிகட சக்கர செம்முக மைந்துளன் சகட
சக்கரத் தாமரை நாயகன்
கைட சக்கர விண்மணி யாவுரை விகட
சக்கரன் மெய்ப்பதம் போற்றுவோம்.

தஞ்சை ஜில்லாவில் பல பாடல் பெற்ற ஸ்தலங்களால் குழப்பெற்ற சேங்காலிபுரம் கீழ்பாகத்திலும் பெரும்பண்ணியூரின் வடபாகத்திலுமுள்ளதும், பண்டைக் காலம் முதல் மஹா பிரசித்தி பெற்று விளங்கி வருவதுமான த்ரியம்பகபுரம் என்னும் எருமத்தலை கிராமத்தில் மாவலங்கை மாத்துடன் யானை மேல் அழகனாய் எழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீ பால சாஸ்தா ஹரிபுத்திரர் (ஸ்ரீ ஐயப்பன்) ஆலயத்திற்கு திருப்பணிகள் செய்து மஹா கும்பாபிஷேகம் நிகழும் பிரமாதி வருஷம் தை மாதம் 28-ம் தேதி (11.2.2000) வெள்ளிக்கிழமை அஸ்வினி நட்சத்திரத்தில் காலை 8:30க்கு மேல் 10:15க்குள் மஹா கும்பாபிஷேகம் நடைபெறவுள்ளது.

இந்த கைங்கர்யத்திற்கு நிதி வழங்கும் அன்பர்கள் கீழ்க்கண்ட ஒரு முகவரிக்கு தங்கள் காணிக்கையை அனுப்பலாம். Cheque அல்லது Draft அனுப்பும் அன்பர்கள் N. Rama Deekshithar and V.S. Rajagopal, என்ற பெயருக்கு எழுதி அதை ராஜகோபாலன் விலாசத்திற்கு அனுப்ப வேணும்.

| | | |
|---|---|---|
| N. RAMADEEKSHITHAR<br>Vadagudy Post<br>(V.A.) Nannilam<br>Pincode - 610 105<br>Ph No. 04366/30570 | V.S. RAJAGOPAL,<br>'Lakshmi'<br>48.B Mahadevan St.,<br>West Mambalam<br>Chennai - 600 033<br>Ph.No. 4894963/4895239 | K. KALYANA RAMA DEEKSHITHAR,<br>7/53, 'Welfare Terracee'<br>SION EAST, Mumbai,<br>Pincode - 400 022.<br>Ph No. 4081287, 4077705. |

## டிசம்பர் 8 முதல் 14 வரை



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

நீங்க பல்லைக் கடிச்சிட்டு இருக்க வேண்டிய நேரம் இது. காரிய தாமதங்களைத் தவிர்க்கவே முடியாது. அலைச்சலும் மனச் சஞ்சலமும் கூடும். வியாபாரிங்க அகலக்கால் வெக்காம இருக்கறது நல்லது. உடல் ஆரோக்கியத்துலேயும் கவனம் செலுத்தணும். சிலருக்கு உஷ்ண வியாதிகள் ஏதும் வரலாம். கணவன், மனைவி உறவு சீரா இருக்கும்னாலும் உங்க வாழ்க்கைத் துணைவி/துணைவர் ரொம்ப இடிஞ்சி போறாப்பல ஏதாவது விஷயம் நடக்கலாம். நீங்கதான் அனுசரணையா நடந்துக்கணும்.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

எவ்வளவோ பிளான் பண்றீங்க. ஒண்ணும் ஒர்க் அவுட் ஆகாம மனசு சோர்ந்து போயிருக்கீங்களா? கவலையை விடுங்க. இந்த வாரம் நீங்க எதிர்பார்த்திருக்கற பெரிய வாய்ப்பு ஒண்ணு உங்களைத் தேடி வந்து கதவைத் தட்டும். வழக்குகள் சுமுகமாத் தீரும். சட்டம், காவல் துறையினருக்குப் புகழ் சேரும். அடிப்படை வாழ்க்கை வசதிகள் கூடும். சிலர் வெளிநாடு போவாங்க. ஆபீஸ்ல சில்லறைப் பிரச்னைகள் கொஞ்சம் படுத்தும்னாலும் சமாளிச்சிடுவீங்க.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

உங்க சாமர்த்தியத்தால் பல காரியங்களை சாதிப்பீங்க. நண்பர்களும் உறவினர்களும் உதவத் தயாரா இருக்கறதால, துணிஞ்சி எந்தக் காரியத்தையும் தொடங்கலாம். பணப் பிரச்னை இருக்காது. சிறு தொழிலதிபர்களுக்கு புது ஒப்பந்தங்கள் வந்து சேரும். பேராசிரியர்களுக்கும் அறிஞர்களுக்கும் அரசு அனுகூலம் அமோகமா இருக்கும். பெண்கள் நினைச்ச காரியம் கைகூடும். சிலருக்கு உல்லாச அனுபவங்கள் கிடைக்கும். மொத்தத்துல ஓஹோ வாரம்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

கவனமா இருக்க வேண்டிய நேரம். பேச்சுல நிதானம், செயல்ல விவேகம், சிந்தனைல தெளிவு – அவசியம் வேணும். எதையும் நாலு பேர்கிட்ட கலந்து விவாதிக்காம செய்யாதீங்க. அலுவலகப் பணியாளர்களுக்குச் சில தர்மசங்கடமான சூழ்நிலைகள் உருவாகலாம். மேலதிகாரிகளோட அதிருப்திக்கு ஆளாகலாம். பணம் ஏராளமா செலவாகிற வாரம் இது. கடன் கொடுக்காதீங்க; வாங்காதீங்க. குறிப்பா, பெண்கள் பண விஷயத்துல எச்சரிக்கையா இல்லாட்டி, பொருளிழப்புக்கு சான்ஸ் அதிகம்.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

சாமர்த்தியமா காரியங்களைச் செய்து புகழடைவாங்க. இந்த வாரம் நீங்க ஆரம்பிக்கிற புது முயற்சிகள் நிச்சயம் வெற்றி அடையும். பொருளாதார ரீதில நல்ல அபிவிருத்தி பார்க்கலாம். நடிக நடிகையருக்கு நிறைய அட்வான்ஸ் வந்து சேரும். எழுத்தாளர்களும் ஏற்றம் பெறுவாங்க. வீட்டுல அமைதி நிலவும். சில சுபநிகழ்ச்சிகள் நடக்கக்கூடும். நீங்க அப்பாவாகவோ, தாத்தாவாகவோ ஆக சான்ஸ் இருக்கு.

துலாம் ராசிக்காரரான எம்.எல்.ஏ. அழகிரி(த.மா.கா)க்கு பொருளாதார ரீதியில் பிரச்னை இல்லாத வாரமாம். ஆனாலும் ஹோட்டலில்



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

திறமையும் தோற்றப் பொலிவும் கூடும். தொட்டதெல்லாம் துலங்கும் நேரம் இது. அரசியல்வாதிகளுக்கு செல்வாக்கு ஏறும். கௌரவமும் அந்தஸ்தும் கூடும். எதிரிங்க காணாம போயிடுவாங்க. அரசாங்க நிலுவைகள் ஏதும் இருந்தா இப்ப கைசலாயிடும். சிலருக்கு நீண்ட தூரம் பிரயாணத்துக்கான வாய்ப்பு கூடி வரும். அநேகமா பணி மாறுதல் சம்பந்தமா இருக்கும்.

மெடிகல் ரெப்களுக்கு இந்த வாரம் உபயோக மானதா இருக்கும். பெண்களுக்குப் புதுப் புடைவை யோகம் கட்டாயமா இருக்கும்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

பொருளாதார ரீதில பிரச்னையே இல்லாத வாரம். எதிர்பார்த்த பண உதவி கண்டிப்பா கிடைக்கும். புதுசா இயந்திரங்கள் வாங்கற தொழிலதிபர்களுக்கு லாபகர மான வாரமா இருக்கும். அரசாங்க அனுகூலமும் வழக்கு வெற்றிகளும் நிச்சயம். மாணவர்கள் படிப்பிலேயும் விளையாட்டுலேயும் வித்தை காட்டுவாங்க. கணிதம், எழுத்து, பத்திரிகைத் துறையினருக்குப் புகழ்கூடும் நேரம் இது. இரவுப் பயணங்களையும் ஓட்டல் உணவையும் தவிர்க்கறது இப்ப உங்க உடம்புக்கு நல்லது.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

சாப்பிடுவதைத் தவிர்க்கணுமாம்!



மக்கள் சேவைல ஆர்வமுள்ளவர்களுக்கு நல்ல வேலை கொடுக்கற வாரம் இது! நிறைய பொதுக்காரியங்கள்ல கலந்துப்பீங்க. எழுத்தாளர்களுக்குப் புகழோட பணமும் நிறைய வரும். நீண்ட நாள் நண்பர் ஒருத்தரைப் பிரியறதும் சில புதிய நண்பர்கள் சேர்றதும் இப்ப நடக்கும். தெய்வப் பணிகளில் ஈடுபடுவீங்க. வர்த்தகம் ஓரளவுதான் ஆதாயம் தரும். அதே சமயம் கூட்டுத் தொழில் செய்யறவங்களுக்கு ஆதாயம் உறுதி. பெண்கள் செயற்கரிய செயல்கள் செய்து புகழ் சேர்த்துக்கற வாரம் இது.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

உங்க காரியங்கள்ல இப்ப ஒரு ராட்சஸ வேகம் கூடும். மனசுல அபார நம்பிக்கையும் தெளிவும் பிறக்கும். எதிர்பாராத பலர் உங்க வளர்ச்சிக்கு உதவ முன்வருவாங்க. குறிப்பா, சினிமா, இன்சத் துறையினருக்கு வளர்ச்சிப் பாதை படு ஸ்மூத்தா இருக்குது. இதுவரைக்கும் வீட்டுல இருந்து வந்த குழப்பங்கள், நெருக்கடிகள் நீங்கி, நிலைமை சுமுகமாகும். வயசானவங்களுக்கு ஆன்மீக யாத்திரை போக வாய்ப்பு வரும். சில பேருக்குத் திருமண யோகமும் கூடி வரும்.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

பிரமாதமான நேரம்னு சொல்ல முடியாட்டாலும் பிரச்னை அதிகம் இருக்காது. சிலருக்கு திருமண நேரம் கூடி வரும். வீட்டு உபயோகப் பொருட்கள் நிறைய வாங்குவீங்க. பணப் பிரச்னை இருக்காதுன்னாலும் செலவும் அதிகமாகவே இருக்கும்! மாணவர்கள் ரொம்ப கவனமா படிக்கணும். மனசு அலைபாய விடாம பார்த்துக்கறது முக்கியம். அரசாங்க ஊழியர்களுக்குப் பழைய பாக்கிகள் வந்து சேரும். பொதுவா, உடல்நலத்துல அதிக அக்கறை செலுத்த வேண்டிய வாரம் இது.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

நிர்வாகத் திறன் வெளிப்படும். கஷ்டமான வேலைகளையும் சுலபமா ஊதித் தள்ளிடுவீங்க. பலர் புகழறாப்பல காரியங்களைச் செய்து முடிப்பீங்க. வர்த்தகம், கான்ட்ராக்ட் துறையினருக்கு ஆதாயம் கூடும். பெண்களுக்கு, மனதுக்கு இனிய செயல்கள் நிகழும். சிலருக்கு வெளிநாட்டுத் தொடர்பால ஆதாயம் கிடைக்கும். நீண்ட தூரப் பயணங்கள் இப்ப வேண்டாம். வழிப்பறி – பிக்பாக்கெட்ல பொருள் இழப்புக்கு வாய்ப்பு இருக்கு, கவனம்! உணவு விஷயத்துல கட்டுப்பாடா இருங்க.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

சில புதிய நண்பர்களால பெரிய உதவிகள் கிடைக்கும். பொருளாதாரம் அபிவிருத்தி அடையும். சிலருக்குப் பயணத்தால ஆதாயம் உண்டு. அதே சமயம் பயணத்துல எச்சரிக்கையா இருக்கறதும் அவசியம். சட்டத் துறையினருக்கும் காவல் துறையினருக்கும் பணிச்சுமை அதிகமா இருக்கும். மதபோதகர்கள் சிறப்புப் பெறுவார்கள். வீட்டுலயும் சுமுகமான சூழ்நிலை நிலவும். அக்கம் பக்கத்து வீட்டு விவகாரங்கள்ல தலையிடாம இருக்கறது நல்லது. ●

## அக்னிசர்மா பக்கம்

# மும்பை மசாலா:

## வெள்ளிவிழா வந்தால் விடியுமா!

உலகின் வெவ்வேறு பகுதிகளிலிருந்து ஃபிலிம் கிரிடிக்குகளை 'ஜூரி'யாக்கி, சினிமா விழா நடத்தி, ப்ராஜூலியன் படத்துக்கு விருது வழங்கியது 'மாமி' Mumabi Academy of Moving Images; ஷபானா ஆஸ்மியையும் (நடிகை), சுப்ரதா மித்ராவையும் (சினிமா போடோகிராஃபர்) திரை உலகில் 25 வருட சர்வீஸ் போட்டதற்கு கௌரவித்தது. சந்தோஷம்தான்; ஆனால், இதென்ன, திடுதிடுப்பென்று சகன்புஜ்பல், "இந்த விழாவுக்கென்று இனி வருடந்தோறும் அரசு 25 லட்சம் ஒதுக்கும்; தேவையானால் ஒரு கோடி வரை உயர்த்தும்" என அறிவித்திருக்கிறாரே? அத்தனை பணம் கொட்டிக் கிடந்தால், கொஞ்சத்தை குண்டு வெடிப்பு, மும்பைக் கலவரங்கள் போன்றவற்றால் பாதிக்கப்பட்டு அல்லலுற்றுக் கொண்டிருக்கும் எண்ணற்ற குடும்பங்களின் நிவாரணத்துக்கென்று உதவலாமே? எதிர்க்கட்சியிலிருந்தவரை, இவர்களுக்கு நீதி கிடைக்க வேண்டும் என அலறிக் கொண்டிருந்தாரே புஜ்பல்? ஒரு சமயம், கலவரங்கள் முடிந்து ஏழு ஆண்டுகள் தானே ஆகியிருக்கிறது... ஒரு 25 வருடங்களாவது முடிந்தால் கண்டுகொள்ளலாம் என்ற கணக்காயிருக்கும்!

## அச்சச்'சோ'

அய்யய்யோ... அருண்ஷோரியின் பல்லைப் பிடுங்கி வாயை அடைத்து விட்டார்களே! இனி அவரால் எழுத முடியாதாமே? ஒன்று பத்திரிகையாளராக இரு; இல்லை மந்திரியாக இரு என்று சொல்லி விட்டார்களே? மும்பை தினசரிக்கு அவர் எழுதியனுப்பிய 'காலம்' ஒன்றைக் கடைசி நிமிடத்தில் கான்சல் செய்து விட்டார்! கடைசி காலமாக இல்லாதிருக்கட்டும்!

## டாக்டர்களுக்கே சிகிச்சை

கால் இல்லாத கட்டில்கள், மூட்டைப் பூச்சிகளின் ஹவுஸிங் காலனியாக மெத்தை தலையணை போர்வைகள், இவற்றையும் மீறித் தூங்குபவர்களின் மேலே விழுந்து கொஞ்ச எலி, பல்லி வகையறாக்கள், திடீர் முக்தி அளிக்கக் கூடிய காரை பெயர்ந்து விழும் ஸீலிங்குகள், உடைந்த வாட்டர் கூலர்கள், ஆறு பாத்ரூம்களுள்ளும் வேலை செய்யக் கூடிய நிலையில் ஒரே கீஸர்; 'கீஸர் வேலை செய்யும் போது வரமாட்டேன், அது வேலை செய்யாத போதே வருவேன்' என அடம்பிடிக்கும் தண்ணீர் சப்ளை....

ஐயே! ஒரிஸ்ஸா ரிலீஃப் காம்ப்பெல்லாமில்லீங்க; மும்பையிலுள்ள ரெஸிடெண்ட் டாக்டர்கள் வசிக்கும் ஹாஸ்டல்களின் வர்ணனைதான் இது! இதில் பாதிப் பேருக்கு மலேரியா, டி.பி... சம்பள




• 'மாமி' அவார்டு

மும் 4565 ரூதான்! (மற்ற மாநிலங்களில் 15,698!) இவர்கள் கேட்பதைக் கொடுத்து 'ஸ்ட்ரைக்'கை வாபஸ் பெற வையுங்கள் என பெரிய டாக்டர்களே அரசுக்கு சிபாரிசு செய்து விட்டார்கள். ஆனால்



• அருண் ஷோரி

அரசு மசியவில்லை! மினிஸ்டர்களெல்லாம் அரசு மருத்துவமனைகளில்தான் சிகிச்சை பெற வேண்டும் என்ற சட்டம் கொண்டு வந்தால் என்ன?

# மும்பை சினிமாக்காரர்களின் ஞானம்!

## கறுப்பே அழகு

**ஷோ**பனா ஸமர்த்தைத் தெரியுமா? அப்பா, தாத்தா காலத்து கனவுக் கன்னி; நூதன், தனுஜாவின் அம்மா... காஜோல், மோனிஷ் பெஹ்லின் பாட்டி என்றால் பட்டென்று




புரிந்து விடும்: ரோட்டரி கிளப்காரர்கள் அண்மையில் இவரை கௌரவித்த போது பத்திரிகையாளர்களிடம் ஜாலியாகப் பேசிக் கொண்டிருந்தார். இந்த 83 வயது பாட்டிக்கு அம்மா ரோலில் நடிக்க ஒரு "ஆஃபர்" வந்ததாம். அதை மறுத்து விட்டாராம்! சிச்சி... ஹீரோயினாகத்தான் நடிப்பேன் என்றெல்லாம் பிடிவாதம் பிடிக்கவில்லை; கன்னங்கரேலென்றிருக்கும் தலைமுடியை, கொஞ்சம் வெள்ளை 'டை' அடித்து நரைக்க வைக்கப் பார்த்தார்களாம். "கொள்ளுப் பாட்டி ஆகியும் எனக்குத் தலை நரைக்கவில்லையே! ஒரு 'அம்மா' ரோலுக்கென்று வெள்ளையடித்துக் கொள்வதாவது? முடியவே முடியாது" என்று விட்டாராம்!



• ஷோபனா ஸமர்த்

## ஜோக் போடுவதில் தப்பில்லை!

'ஃபிலிம் இன்ஃபர்மேஷன்' என்றொரு வார இதழ், "கார்கில் மலர்" எல்லாம் வெளியிட்டு, பாலிவுட்காரர்களிடமிருந்து 4,01,000 ரூபாய் வசூலித்து, டிஃபென்ஸ் மினிஸ்டரிடம் அளித்தார்கள். அத்துடன் நின்றிருக்கலாம்; நமது அறிவுஜீவிகளான ஸ்டார்களிடம் 'க்விஸ்' எல்லாம் வேறு நடத்த வேண்டுமா? ஹூம்... உங்களுடன் கொஞ்சம் அவர்களின் விஷய ஞானத்தைப் பகிர்ந்து கொள்ளாவிட்டால் தலைவெடித்து விடுமே...

**க்விஸ் கேள்வி** : காரில் உபயோகப்படும் ஒரு வகை Leaded Petrol; மற்றொரு வகை...?

**ஸ்ரீதேவி பதில்** : ஒயிட் பெட்ரோல்!

**கே** : நமது பிரசிடெண்ட் யார்?

**சஞ்சய் கபூர் பதில்** : வெங்கடராவன்... ஏதோ ஒரு தென்னிந்தியர். ப்ச்... அவர் 'சர்நேம்' எல்லாம் ஞாபகமில்லை... நான் என்ன போனிகபூரா?

**கே** : இந்திய சினிமாவின் தந்தையாகக் கருதப்படுபவர் யார்?

**சுனில்ஷெட்டி பதில்** : ர்ராஜ்கபூர்!

— **ஜெயஸ்ரீ ராஜ்**

● க. சாந்தி, காட்பாடி.

? உப்பைத் தின்றவன் தண்ணீர் குடிக்க வேண்டும்; குற்றம் செய்தவன் தண்டனை அடைந்தே தீரவேண்டும் என்று வாழப்பாடி ராமமூர்த்தி கூறியுள்ளாரே?

! 'தப்புச் செய்தவன் தேர்தலில் தோல்வி அடைய வேண்டும்' என்றும் சேர்த்துச் சொல்லியிருக்கலாம்.

● ரொஸாரியோ ரவிச்சந்திரன், சென்னை – 59.

? வியாபாரம் செய்ய வந்த கிழக்கிந்திய கம்பெனி நம் ஒற்றுமையின்மையைப் பயன்படுத்திக் கொண்டு நம்மை அடிமைப்படுத்தினார்கள். இது தெரிந்தும் தனியார்மயமாக்கலால் அந்நியர் ஆட்சிக்கு வழிவகுக்கிறோம் அல்லவா?

• அமைச்சர்கள் விருப்பம்!

சுதந்தரம் பறிபோய் விடாது; திறமைதான் வெளிப்பட வேண்டும்.

● கே. ஆர். வெங்கடேஷ், சீர்காழி.

? தமிழக சட்டமன்றத் தொடர் நடந்து கொண்டிருக்கையில் திடீரென்று மின் நிறுத்தம் ஏற்பட, ஒரு எம்.எல்.ஏ. விசில் அடித்தாராமே?

! சட்டமன்றத்தை சினிமா தியேட்டராகத்தான் பல எம்.எல்.ஏக்கள் மதிக்கிறார்கள் என்பதற்கு அத்தாட்சி.

● ராஜி ராதா, திருச்சி – 14.

? உ.பி.யில் கல்
யாண் சிங்

## 'மு.க' ஸ்துதியை விரும்புவது ஆண்களா, பெண்களா?

தொடர்ந்து வாஜ்பாய்க்குத் தொந்தரவு கொடுக்கிறாரே?

! பதவி இறக்கம் செய்யப்பட்ட பிறகு, சலசலப்புக்கு அஞ்சாத பணங்காட்டு நரி என்று நிரூபிக்க முயன்றார்; ஆனால் வாலைச் சுருட்டிக் கொள்ள வேண்டிய நிலைக்குத்

• நியாயமுண்டு!





! தனியார் மயமாக்குவதால் அன்னியர் ஆட்சி வந்து விடும் என்பது விபரீதமான கற்பனை. ஆரோக்கியமான போட்டிக்கும் தர உயர்வுக்கும்தான் இக் கொள்கை வழிவகுக்கும். மேலும், அயல்நாட்டவர் பங்கேற்புக்கு இங்கே அடிப்படையான சில கட்டுப்பாடுகள், நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருப்பதால் பொருளாதார ரீதியான மேலாண்மைக்குக் கூட வழியில்லை. நமது

தள்ளப்பட்டிருக்கிறார்.

● அருணானந்தம்,
திருவண்ணாமலை.

*? 'மூக' ஸ்துதியை விரும்புவது ஆண்களா? பெண்களா?*

! நிச்சயம் மு.க. விரும்ப மாட்டார் என்பது அமைச்சர்களுக்குத் தெரிந்தால் சரி.

● எஸ். அழகேசன், திருச்சுழி.

*? 'திராவிடர் கழகம் அ.தி.மு.கவுடன் இணைந்து விடும்' என்கிறார் என் நண்பர். உண்மையா?*

! ஏற்கெனவே அது அ.தி.மு.கவின் கிளைக் கழகமாகத் தானே செயல்பட்டு வருகிறது!

● எஸ். வெங்கடேசன்,
கிருஷ்ணகிரி.

*? 'பெங்களூர் மாநகராட்சியின் பொன் விழா கொண்டாட்டத்துக்குப் பத்துக் கோடி ரூபாய் ஒதுக்க வேண்டும்' என்ற கோரிக்கையை கர்நாடக முதல்வர் நிராகரித்தது பற்றி...?*

! கர்நாடக மக்களுக்கு ஒரு நல்ல முதல்வர் கிடைத்திருக்கிறார்.

● எஸ். கதிரேசன்,
பேரணாம்பட்டு. ❑

*? நிலங்கள் வைத்திருக்கும் விவசாயிகளெல்லாம் ஏழைகள் என்று நினைத்துத் தான் விவசாயிகளுக்கு மின்சார விஷயத்தில் அதிகச் சலுகைகளை தமிழக அரசு வழங்குகிறதா?*

! உணவு உற்பத்தி குறைவாக இருந்து, அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய வேண்டியிருந்த காலகட்டத்தில் இங்கு விளைச்சலை அதிகரிக்க பல சலுகைகள் ஒன்றன் பின் ஒன்றாக வழங்கப்பட்டன. இப்போது, கொடுத்த சலுகைகளைத் திரும்பப் பெறவோ குறைக்கவோ முடியாமல் அரசு திணறுகிறது. காரணம், வோட்டுக்கு வேட்டு வைத்து விடுவார்களோ என்ற அச்சம்தான்.



• கருண்ட வால்!



• கிளைத் தலைவர்!



• 'வீர' சபதம்!



• கங்காரு தேசத்தில்...

● பி. நடராஜன், அன்னூர்.

*? சமீபத்தில் தங்கள் மனத்தை பாதித்த விஷயம் எது?*

! ஒரிசா நிவாரணப் பணிகளில் பாலிதின் ஷீட்டுகள் வாங்குவதற்கு மட்டும் நூறு கோடி ரூபாய் ஊழல் நடந்திருக்கக்கூடும் என்று வெளியான செய்தி! இந்த நாடு எங்கே போகிறது!

● ஆர். மாதவராமன், கிருஷ்ணகிரி.

*? தமிழகத்தில் மின்வெட்டே வராது என்கிறாரே ஆற்காடு வீராசாமி?*

! மின்வெட்டு கூட தேவலாம் - முன் அறிவிப்புடன் வரும். அதைவிட பவர்கட் மிக மோசம். திடீர் திடீரென்று சொல்லாமல் கொள்ளாமல் வந்து கொடுமைப்படுத்துகிறது.

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்.

*? திருப்பத்தூர் சந்தனக் கிடங்கு எரிந்த வழக்கை சி.பி.ஐயிடம் ஒப்படைக்க வேண்டும் என்று ஜெயலலிதா கேட்டுக் கொண்டிருப்பது பற்றி...?*

! நடந்தது விபத்தல்ல என்று முதல்கட்ட விசாரணையில் முடிவாகியுள்ள நிலையில், 'ஜெ'யுடைய தரப்பு வாதத்தை ஏற்க வேண்டியுள்ளது. ஆனால் ஒன்று, சி.பி.ஐ. வசம் ஏற்கெனவே உள்ள வழக்குகளின் எண்ணிக்கையைப் பார்க்க, இதையும் அங்கே ஒப்படைப்பது எக்கச்சக்க காலதாமதத்துக்குத்தான் வழி வகுக்கும்.

● எம். காமராஜ், பிச்சாண்டார்கோயில்.

*? அடுத்த ஆண்டு முதல் நடிகர் திலகம் சிவாஜி கணேசன் பெயரில் திரைப்படக் கலைஞர்களுக்கு விருதுகள் வழங்கப்படுமென்ற தமிழக முதல்வரின் அறிக்கை குறித்துச் சில வரிகள்...?*

! நல்ல விஷயம்தான் - கலைமாமணி லெவலுக்குப் போய்விடாமலிருந்தால்!

● சி. மகேஷ், சென்னை - 26.

*? சச்சின் தலைமையில் ஆஸ்திரேலியா சென்றுள்ள இந்திய கிரிக்கெட் அணிக்கு என்ன சொல்ல விரும்புகிறீர்?*

! முதல் கோணல் போனால் போகட்டும். முற்றிலும் கோணலாகி விடாமல் பார்த்துக் கொள்ளுங்கள்.



• சொல்லாதது...

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் : எஸ். கதிரேசன்,
157, எம்.ஜி.ஆர். நகர், வி. கே. சாலை,
பேரணாம்பட்டு—635 810.

சென்ற இதழ் தொடர்ச்சி...

மறுநாள் அதிகாலை கோவை மாநகராட்சி அலுவலகத்தில் நாம் ஆஜர். ஒரு சில கவுன்சிலர்கள், ஒரு சேர்மன், சுகாதார அலுவலர், வேறுசில மாநகராட்சி ஊழியர்களும் வாசலிலேயே நமக்கு முன்னால் மேயருக்காகக் காத்திருக்க, நம்மை அறிமுகப்படுத்திக் கொண்டு, விஷயத்தை விளக்கினோம்.

"மேயர் இப்ப பேட்டியெல்லாம் குடுக்கறது கஷ்டங்க. செல்வபுரம் ஏரியாவுல ஒரு ஆக்கிரமிப்பை அகற்ற கிளம்பிட்டிருக்கோம். மேயரும் அங்கதான் வராரு" என்றனர்.

கப்பல் மாதிரி வந்து நின்ற ஏஸி காரிலிருந்து இறங்கிய மேயரோ, "நீங்க அனுப்பிச்ச கடிதத்தை நேத்துதாங்க பார்த்தேன். இப்ப ஷெட்யூல் டைட்டா இருக்கு. ஆக்கிரமிப்பு அகற்றும் வேலைக்குப் போயிட்டிருக்கேன். முடிந்ததும் ஒரு கல்யாணம்..."

"இப்ப உங்க கூடவே வந்துரலாமா சார்?"

"சரி, வாங்க."

காரில் ஏறிக் கொண்டோம்.

"என்ன கேக்கணும்? என்ன சொல்றாங்க நம்ம மக்கள்?" என்று மேயர் கருதி கூட்டும் போதே பேரூர் தொகுதிக்குட்பட்ட அந்த செல்வபுரம் வந்து விட்டது.

''தினமும் ஆறே முக்காலுக்கு ஒரு ரவுண்ட் அடிப்பேன். மாநகராட்சி எல்லை முழுசும் சுத்திப் பார்த்துட்டு வந்துதான் வேலையைத் தொடங்கறதே!'' என்றார் மேயர்.

கார்ப்பரேஷன் வாகன ராட்சஸன்கள் தயாராகக்' காத்திருக்க, மேயர் உத்தரவு கிடைத்ததும் அரசு நிலத்தை ஆக்கிரமித்துக் கட்டப்பட்டிருந்த கடைகள், சில கட்சிக் கூடாரங்கள் (த.மா.கா. உட்பட!) வீடுகள், கொடிக் கம்பங்கள் யாவும் இடித்துத் தரை மட்டமாக்கப்பட்டன.

"குடியிருப்பு வாசிகளுக்கு முன்பே தகவல் தரவில்லையா? இப்போதுதான் உடைமைகளை அப்புறப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்?'' என்று மேயரிடம் கேட்டோம்.

"இதுக்கெல்லாம் நோட்டீஸ் தரணும்னு அவ்சியமில்லை. நேத்து ஆளனுப்பித் தகவல் சொல்லிட்டோம். அப்படியும் காலி பண்ணாம இருந்தா நாங்க என்ன செய்ய முடியும்?'' என்றார்.

"ஐயா! முப்பது வருசமா வாழறோமுங்க. திடீர்னு இடிக்கிறீங்களே! என்ன பண்ணுவேன்! எங்க போவேன்!'' என்கிற பெண்களின் அழுகுரல் அந்த அதிகாலை வேளையில் பிரதேசம் முழுக்க எதிரொலித்தது.

கிட்டத்தட்ட ஒரு தெருவே காலியாகிற வரை நின்று பார்த்துவிட்டு, (வந்து கதறும் பெண்களிடம் கனிவாகப் பேசுகிறார். 'எழுதிக் கொடுங்க, வேற இடத்துக்கு ஏற்பாடு செய்யறேன்' என்று சமாதானப்படுத்துகிறார்.)

''வாங்க, புறப்படலாம்'' என்று நம்மையும் அழைத்துக் கொண்டு காரில் புறப்பட்டார். காரிலேயே பேட்டி நடந்தது.

# "நிதிப் பற்றாக்குறையில்தான் சமாளித்து வருகிறோம்!"

"கோவைவாசிகளின் பிரதான பிரச்னை சாக்கடைகளும் கொசுக்களும் தான் என்பதைப் பல பகுதிகளைச் சுற்றிப் பார்த்து அறிந்தோம். ஜொலிக்கும் நகரமாக மாற்றப்போவதாக அறிவித்துவிட்டுப் பதவிக்கு வந்தீர்கள். ஏன் மூன்று வருடங்களாகியும் நிலைமை முன்னேறவேயில்லை?"

"இங்கே பாதாள சாக்கடை வசதி பெரும் பகுதிகளுக்குக் கிடையாது. இனிமேல்தான் செய்ய வேண்டும். விரைவில் அந்தப் பணிகள் ஆரம்பிக்கப்படும்.''

"கேகே புதூர் பாலசுப்ரமணியன் சாலையில் உள்ள சில தெருக்கள் சமீபத்திய மழையால் குளமாகிவிட்ட அவலத்தை மக்கள் சொன்னார்கள். வீடுகளுக்குள்ளேயே முழங்




கால் அளவு தண்ணீர் வருகிறதென்றால் வடிகால் வசதி சைபர் என்றுதானே அர்த்தம்?''

"இந்த வருட மழைக்கு பாதிப்பு அத்தனை மோசமில்லை. போன வருடமெல்லாம் நகரே நீச்சல் குளமாகி விட்டது. நானும் கமிஷனரும் இரவெல்லாம் சுற்றிச் சுற்றி நீரை இறைக்கப் படாதபாடு பட்டோம். இந்த வருடம் பெரும்பாலான குறைகள் சரிசெய்யப்பட்டு விட்டன. ஒன்றிரண்டு பகுதிகள் பாதிக்கப்பட்டிருக்கலாம். விரைவில் பிரச்னை தீர ஏற்பாடு செய்து விடுகிறேன்."

"தில்லை நகர், கண்ணப்பன் நகர் பகுதிகளுக்குள் நுழையவே முடியவில்லையே? சாக்கடை ஆறாக அல்லவா ஓடுகிறது?"

"அது அப்ருவ்ட் ஏரியாவாக இருக்காது. அங்கு யார் வீடுகட்டி வசிக்கச் சொன்னார்கள்?''

"அது உங்கள் கார்ப்பரேஷன் எல்லைக்குட்பட்ட பகுதிதான். தேர்தல் நடந்து அந்தப் பகுதிக்கொரு கவுன்சிலர் வேறு இருக்கிறார்."

''அதனாலென்ன? இன்னும் அன்-அப்ரூவ்ட் ஏரியா என சுமார் நானூறு இடங்களுக்கான பட்டியல் இருக்கிறது. இருப்பினும் கவனிக்கச் சொல்லுகிறேன்."

"கேப்டன் பழனிச்சாமி லே-அவுட்டில் 1.75 ஏக்கர் மாநகராட்சி நிலம் பூங்கா கட்டுவதாகச் சொல்லி, தரிசாகக் கிடக்கிறது. இங்கே சமூக விரோதிகள் அட்டூழியம் செய்வதாக மக்கள் குறைபடுகிறார்களே?"

"அப்படியா? விசாரிக்கிறேன்."

''புலியகுளம் சாலையில் சாக்கடையிலேயே மாநகராட்சி வண்டிகள் குப்பை கொட்டிச் செல்வதைப் பார்த்தோம்...''

உடனே செல்லுலரில் அதிகாரிகளை அழைத்து, 'இப்போதே போய்ப் பாருங்கள்' என்று உத்தரவு தருகிறார்.

''சிங்கநல்லூரில் மொபசல் பஸ் ஸ்டாண்ட் கட்டும் திட்டம் தொடங்கி, நாற்பது பில்லர்களுடன் நான்கு வருடமாக நிற்கிறதே?"

"அது அரசு அப்ரூவலுக்காகப் போயிருக்கிறது. இப்போதுதான் அனுமதி கிடைத்த தகவலும் வந்திருக்கிறது. ரூ. 1.84 கோடி செலவு பிடிக்கிற திட்டம் அது. நான் பொறுப்பேற்பதற்கு முன்பே ஆரம்பித்து விட்டார்கள். பில்லர் போட்டதில் முப்பது லட்சம் வீண் என்பதெல்லாம் பொய். இதுவரை பத்து லட்சம்தான் செலவாகியிருக்கிறது. இன்னும் ஒரு வருடத்தில் பஸ் ஸ்டாண்ட் அங்கே வந்து விடும்."

"உங்கள் மாநகராட்சி அலுவலகத்தில் பேசிக் கொண்டிருந்த போது, ஓய்வு பெறும் மாநகராட்சி ஊழியர்களுக்கு உரிய தொகை தரப்படுவதில்லை என்றும் பலர் தம் செட்டில்மென்டுக்காக வருடக் கணக்கில் அலைந்து கொண்டிருப்பதாகவும் சொன்னார்கள்."

"நான் பதவிக்கு வந்தபின் மாநகராட்சி ஊழியர்கள் ஓய்வு பெறும்போது சேர வேண்டிய தொகைக்காக சில கோடிகள் ஏற்பாடு செய்து தந்தேன்! இன்னும் யார், யார் தம் ஓய்வூதியம், பிற தொகைகள் பெறவில்லை என்பதற்கான பட்டியலே என்னிடம் இருக்கிறது. அதுவும் காரணமில்லாமல் நிறுத்தி வைக்கப்படவில்லை. நீங்கள் விசாரித்துப் பார்த்தால் அவர்கள் மேல் ஏதாவது குற்றச் சாட்டு இருக்கும். என்கொயரி நடந்து கொண்டிருக்கும். அத்தகையவர்களுக்கு மட்டுமே நிறுத்தி வைக்கப்பட்டி

ருக்கிறது."

"மாநகராட்சிப் பள்ளிகள், திருமண மண்டபங்கள் எதுவும் சரிவர பராமரிக்கப் படவில்லை. சாலைகள் நிலைமை படு மோசம். சாக்கடைப் பிரச்னையோ, நிரந்தரத் தலைவலியாக இருக்கிறது. எதையும் தீர்த்து விடுவதாக நீங்கள் சொல்கிறீர்கள். ஆனால், எப்போது, எப்படிச் செய்யப் போகிறீர்கள். அவற்றுக்கான நிதி ஆதாரம் என்ன?"

"உண்மை. கோவை மாநகராட்சியைப் பொறுத்தவரை இந்நகருக்குப் போதுமான நிதி பற்றாக்குறைதான்! மற்றவர்களைக் கேட்டால் ஆறு மாநகராட்சிகளில் இதுவே வசதியானது என்பார்கள். உண்மை என்ன வென்றால் நிதிப் பற்றாக்குறையில் தான் சமாளித்து வருகிறோம். நான் கோருவது, மாநகராட்சிகளுக்கென்று அரசு ஒதுக்கும் நிதியை சரிசமமாகப் பிரித்துத் தரவேண்டும் என்பதுதான்! நீங்கள் 'சென்னை'யிலிருந்து வருகிறீர்கள். உங்களுக்கு இதற்குமேல் விளக்க வேண்டியதில்லை! எங்களைச் சுதந்தரமாக இயங்க விட வேண்டும். அன்-அப்ரூவ்ட் ஏரியாக்கள் பிரச்னையை எடுத்துக் கொள்ளுங்கள். இங்குள்ள நானூறு லே-அவுட்கள் அதிகாரபூர்வமற்றவை. அரசு இவற்றை அங்கீகரித்தாலொழிய நாங்கள் எந்த நலத் திட்டங்களையும் செயல்படுத்த இயலாது. நீங்களே சொன்னீர்கள். தில்லை நகர், கண்ணப்பன் நகர் நிலைமையை. இதுபோல் எத்தனையோ இடங்கள் இருக்கும். முடிவெடுக்கும் அதிகாரத்தை மாநகராட்சியிடம் என்று அரசு பூரணமாக அளிக்கிறதோ, அன்றுதான் இந்தப் பிரச்னைகளுக்கெல்லாம் விடிவு பிறக்கும்!"

ஆக, இப்போதைக்கு விடிவு இல்லை என்பதைச் சொல்லாமல் சொல்லிவிட்டு, காரிலிருந்து நம்மை இறக்கிவிட்டுப் போய் விட்டார் மேயர் கோபாலகிருஷ்ணன் (த.மா.கா.).

"அவுரு கோயமுத்தூருக்கே மைசூர்பா கொடுக்கற ஆளுங்க" என்று நம்மிடம் ஒரு கோவைவாசி சொன்னது ஞாபகத்துக்கு வந்தது. அதே சமயம், அன்-அப்ரூவ்ட் பகுதிகளில் குடியிருப்புகள் முளைத்து, பரவி, தழைத்து வரும் முறைகேடுக்கு, அங்கே குடியிருக்கும் மக்களும் உடந்தைதானே என்ற உறுத்தலும் எழுந்தது.

— கிருஷ்ணன்
படம்: வெங்கடேஷ்

ஒரு திருமண பார்ட்டியினர் காட்டு வழியே நடந்து வந்து கொண்டிருக்கிறார்கள். நடுவிலே பல்லக்கு. அதனுள்ளே புது மணத் தம்பதிகள். மணப்பெண் முகத்திலே வெட்கம்; மணமகன் மனத்திலே கனவுகள். கூட வருகிறவர்கள் முகத்திலே மகிழ்ச்சி. இப்படி சந்தோஷமாக எல்லோரும் சென்று கொண்டிருக்கிறபோது....

"நில்லுங்கள். ஒரு அடி முன்னே நகர்ந்தாலும் சுட்டு விடுவோம்" என்று திடீரென்று அங்கே தோன்றுகிற கொள்ளைக்காரனின் மிரட்டல். அனைவரும் மிரண்டு போகிறார்கள்.

இது என்னடா புதுக் கதை? என்று நினைக்கிறீர்களா? இதுவும் என் மேஜிக் நிகழ்ச்சியில் இடம்பெறும் ஒரு காட்சிதான். இந்தத் தருணத்தில், அங்கே ஒரு மேஜிக் நிபுணர் தோன்றுவார். மந்திரங்களை உச்சரித்து, பல்லக்கை நோக்கி, கையை நீட்டுவார். இதையெல்லாம் சட்டை செய்யாமல், அதிகார தோரணையில் பல்லக்கை நெருங்குவான் கொள்ளைக்காரன். நீளமான கத்தியால், ஸ்டைலாக பல்லக்கின் மூடு திரையை விலக்கினால், உள்ளே மணப்பெண்ணோ, மணமகனோ இருக்க மாட்டார்கள். ஏமாந்து போகும் கொள்ளைக்காரன் கோபமாய் புறப்பட்டுச் சென்று விடுவான். கொள்ளைக்காரன் போய் விட்ட சந்தோஷம்; அதே சமயம், புதுமணத் தம்பதி மாயமாகி விட்ட விசித்திரம் இரண்டாலும் திகைத்து நிற்பார்கள் எல்லோரும். பல்லக்கின் திரையை மூடி விட்டு, மறுபடி மந்திரம் சொல்லி மூடிக்கிற போது, டமால் என்ற ஓசை! பளீரென்று வெளிச்சம். லேசான புகை மண்டலத்தின் வழியே பல்லக்கின் உள்ளே இருந்து, புது மணத் தம்பதிகள் இறங்கி வருவார்கள்; நேரே மேஜிக் நிபுணர் காலில் விழுந்து ஆசி பெறுவார்கள்.

# ராஜ்கபூரைக் கட்டிப் போட்ட மேஜிக்!

இப்போது இன்னும் பற்பல புதுமையான ஐட்டங்கள் அறிமுகப்படுத்தப்பட்டு விட்டதால், இந்தப் பல்லக்கு ஐட்டம் இடம் பெறுவதில்லை. ஆனால் அறிமுகப்படுத்தப் பட்ட போதும் சரி, அதன்பின் பல வருடங்களுக்கும் சரி, மிகப் பிரபலமாக இருந்தது இந்த ஐட்டம். இது நானே எனது கற்பனையில் உருவாக்கிய மேஜிக். இதை நான் உருவாக்கத் தூண்டுதலாக இருந்தது, அந்தக் காலத்தில் சம்பல் பள்ளத்தாக்கில் கொள்ளைக்காரர்கள் நடத்திய நிஜமான வழிப்பறிக் கொள்ளைகள்தான். ஆண்களை மிரட்டிப் பணமும், ஆண்களைக் கொன்று விடுவதாக மிரட்டி பெண்களிடமிருந்து நகைகளையும் பறிப்பது அவர்கள் வழக்கம். இதை அடிப்படையாக வைத்துக் கொண்டு, என் கற்பனையில், அங்கே ஒரு மேஜிக் நிபுணரை நுழைத்து, இந்த மேஜிக்கை சிருஷ்டித்தேன்.

இப்படி நிஜ வாழ்க்கைச் சம்பவங்களுடன் கற்பனையைச் சேர்த்து, ஐட்டங்களை உருவாக்குவது ஒரு பக்கம். முழுக்க முழுக்க கற்பனையாகச் சிந்தித்து சில ஐட்டங்களை உருவாக்குவது இன்னொரு பக்கம்.

ஜப்பானுக்கு ஒரு சமயம் சென்றிருந்த போது, முத்துச்சிப்பியிலிருந்து செயற்கையாக முத்தெடுக்கும் இடத்துக்கு, என் ஸ்பான்சர் அழைத்துச் சென்றார். ஓய்வு தினத்தன்று, பொழுதுபோக்குக்காகத்தான் நான் அங்கு சென்றேன் என்றாலும் அங்கிருந்து திரும்பியபின், வெறும் சிப்பிக்குள்ளேயிருந்து, விலைமதிக்க முடியாத முத்து உருவாவது என் மனத்தில் திரும்பத் திரும்ப வந்து கொண்டிருந்தது. ஜூனியருடன் ஆலோசித்து, ஒரு புதிய மேஜிக் உருவாக்கி விட்டேன். அந்த மேஜிக் இதுதான் : பெரிய அளவில் ஒரு முத்துச் சிப்பி மேடையில் கொண்டு வரப்படும். அதைத் திறந்து காட்டினால் ஒன்றும் இருக்காது. அதனுள்ளே, சிறிய பளபளக்கும் பந்து ஒன்றைக் கொண்டு வந்து ஒரு பெண் வைப்பார். சிப்பி மூடப் படும். மறுபடி சிப்பியைத் திறந்து பார்த்

தால்... வாவ்... அழகான வெள்ளையுடை தேவதை ஒருவர் வெளியே வருவார். அரங்கம் ஆச்சரியப்பட்டுக் கைதட்டும்.

**நா**ன் கல்கத்தாவில் வளர்ந்தவனாயிற்றே! கல்கத்தாக்காரன், காளியை மறக்க முடியுமா? மகிஷாசுரவதம் என்று ஒரு ஐட்டம். ஆறு மாத காலம் மண்டையைப் பிய்த்துக் கொண்டு சிந்தித்தேன். பல ஐடியாக்கள் பரிசீலிக்கப்பட்டு, நிராகரிக்கப்பட்டன. கடைசியில் தட்டிய பொறிதான், இன்று மேடையில் நடத்தப்படும் மகிஷாசுரவதம். இதற்கென்று, ஜெர்மனியிலிருந்து பிரத்யேகமான கண்ணாடிகளை வரவழைத்தேன். அந்தக் காலத்திலேயே பத்தாயிரம் ரூபாய் விலை கொடுத்



• ராஜ்கபூருடன் நான்...

தேன்.

மேடையில், தனித்தனியே நாலு கண்ணாடிகள் கொண்டு வரப்படும். சதுர அடிப் பரப்பின் மீது, நான்கு கண்ணாடிகளும் பிரமிட் போல பொருத்தப்படும். விளக்குகள் மேடையில் அணையும் அதே கணம், கண்ணாடிப் பிரமிடுக்குள் ஒளி பரவும். பிரமிட் கண்ணாடிகளைப் பிரித்தெடுக்க, பீடத்திலிருந்து காளிமாதா சூலம் சகிதம் எழுந்து நிற்பாள். மேடையில் தாண்டவமாடுவாள்.

திடீரென்று மேடையில் தரையில் வைக்கப்பட்டிருக்கும், பெரிய ராக்ஷச முகமும், அதனுடன் இணைக்கப்பட்ட துணியினாலான உடையும் எழுந்து நடமாடத் துவங்கும். ராட்க்ஷசனுக்கும், காளி மாதாவுக்கும் யுத்தம். ராட்க்ஷசனை சம்ஹாரம் செய்வாள் காளி. கண்ணாடி பிரமிடுக்குள்ளிருந்து காளிமாதா வருவதும் உள்ளே ஆள் இருப்பதற்கே சாத்தியமில்லாத சூழ்நிலையில், மகிஷாசுரனின் தலையும், உடையும் எழுந்து நடமாடுவதும்; ரசிகர்களை ஆச்சரியமூட்டும்.

இந்த மேஜிக்கை நான் மேடையில் அறிமுகப்படுத்தியபோது, இதைக் கண்ட மற்ற மேஜிக் நிபுணர்கள் பலர் மேஜிக்கின் சூட்சுமம் என்ன என்று கண்டுபிடிக்க முடியாமல் திணறிப் போனார்கள். இன்றும் கூட, ஒருசிலர் ஏறத்தாழ இதைப் போல ஒரு மேஜிக்கை, மேடையில் செய்து காட்டுகிறார்களேயொழிய, இதையே அட்சரம் பிசகாமல் செய்து காட்ட அவர்களால் முடியவில்லை.

**எ**னது குழுவில் சுமார் ஐம்பது பேர் இப்போது இருக்கிறார்கள். இவர்களில் மேடையில் தோன்றும், ஆண்கள், பெண்கள், தவிர, மேடைக்குப் பின்னால் இருந்து உதவுபவர்களும் அடக்கம். எங்கள் குழுவில் அனைவருமே ஒரு குடும்பம் போல பழகுகிறோம். எனவேதான், என்னுடைய சில போட்டி மேஜிக் நிபுணர்கள், நான் மேடையில் செய்து காட்டுகிற மேஜிக் சிலவற்றை எப்படிச் செய்வது என்கிற ரகசியத்தை

**மேஜிக் நிபுணர் கே. லால்**

என் குழு உறுப்பினர்கள் மூலம் தெரிந்து கொள்ள முயற்சி செய்தது எல்லாம் பெரும்பாலான சமயம் தோல்வியடைந்தது. ஒருசிலர் பெரும் பணம் கொடுப்பதாக ஆசை காட்டி, என்னிடமிருந்து சிலரைப் பிரித்து அழைத்துக் கொண்டு போனதும் உண்டு. ஆனாலும் அது பற்றியெல்லாம் நான் கவலைப்படுவது கிடையாது.

ஆரம்பம் முதலே, நான் ஒரு விஷயத்தைக் கடைப்பிடித்து வருகிறேன். என் குழு உறுப்பினர்களின் நலனில் அதிகபட்ச அக்கறை செலுத்த வேண்டும் என்பதே அது. இருபது, இருபத்தைந்து வருடங்களாக என்னுடன் உழைப்பவர்கள் சிலரும் என் குழுவில் உண்டு. ஆறு அல்லது ஏழு மாதங்கள் தொடர்ந்து ஊர் ஊராகச் சென்று நிகழ்ச்சிகள் நடத்திக் கொண்டிருந்தால் அதன்பின் ஒரு மாத காலம் நிகழ்ச்சி எதுவும் ஒப்புக் கொள்ளாமல், அனைவருக்கும் லீவு கொடுத்து அவரவர் ஊருக்கு அனுப்பி வைத்து விடுவேன். குடும்பத்தினரது உடல்நலம், குழந்தைகளின் படிப்பு இந்த இரண்டும்தான் குடும்பத்தை விட்டு வெகு தூரத்தில் வேலை செய்து, சம்பாதிக்கிறவர்களுக்குக் கவலை தரும் விஷயங்கள். அந்த இரண்டு சம்பந்தப்பட்ட செலவுகளுக்கும் உதவி செய்து, என் உறுப்பினர்கள் மீதும், அவர்கள் குடும்பத்தினர் மீதும் எனக்குள்ள அக்கறையை நான் வெளிப்படுத்துவேன்.

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●



**''புயலில் சேதமடைந்த பகுதிகளை அமைச்சர்ங்கிற முறையில் நேரில் போய்ப் பார்க்காமல் இருந்துட்டீங்களே! ஏன்?''**

**''அதான் டி.வியில் விலாவாரியாக காட்டுறாங்களே; நேரே வேற போகணுமாக்கும்?!''**

**— உ. ராஜாஜி**

என் நிகழ்ச்சிகளைக் காண ஏராளமான அரசியல் தலைவர்களும், சினிமா ஸ்டார்களும் வந்தது உண்டு என்றாலும், ஒருசில சினிமா பிரபலங்கள் எனக்கு மிகவும் நெருக்கமாக விளங்கினார்கள். அவர்களுள் நான் முக்கியமானவர் என்று குறிப்பிட விரும்புவது ராஜ்கபூரின் பெயரைத்தான். அவருக்கு இந்தியாவிலும், அயல் நாடுகளிலும் லட்சோபலட்சம் ரசிகர்கள் என்றாலும், அடிக்கடி அவர், "நான் உங்களுடைய பரம ரசிகன். என்னை உங்கள் மேஜிக் கயிறு கொண்டு படு ஸ்டிராங்காக கட்டிப் போட்டிருக்கிறீர்கள்! 'நான் ஆயுசுக்கும் இந்தக் கட்டிலிருந்து விடுவித்துக் கொள்ளவே விரும்பவில்லை" என்று சொல்வார்.

அவருக்கு என் மீதும், என் மேஜிக் மீதும் இருந்த பிரியத்தின் கிளைமாக்ஸ்தான், தமது சூப்பர் ஹிட் படமான 'மேரா நாம் ஜோக்கர்'ன் இரண்டாவது பாகம் எடுக்க அவர் விரும்பியது.

ஒருநாள் திடீரென்று மும்பையிலிருந்து டெலிபோன் செய்தார். நான் சென்னையில் அப்போது மேஜிக் ஷோ நடத்திக் கொண்டிருந்தேன். ஐந்து நாள் நிகழ்ச்சிக்குரிய மொத்த பணத்தையும் தருவதாகவும், உடனே புறப்பட்டு மும்பை வரும்படியும் சொன்னார். நான் ரசிகர்களை ஏமாற்றி விட்டு, மும்பை வர மறுத்து விட்டேன். அவர் தாமே புறப்பட்டு சென்னை வருவதாகத் தெரிவித்தார்.

ஐந்து கோடி ரூபாய் பட்ஜெட்டில் மேரா நாம் ஜோக்கர் படத்தின் இரண்டாவது பாகம் எடுக்கத் திட்டமிட்டிருப்பதாகவும், அதில் தமக்கு மேஜிக் கலைஞரின் பாத்திரம் என்றும் கூறினார். அடுத்த ஐந்து நாட்களும் படத்தின் கதை பற்றி என்னிடம் விவாதித்தார். மும்பை புறப்பட்டுச் சென்றவர், சீக்கிரமே, படத்துக்காக இரண்டு பாடல்களையும் பதிவுசெய்தார். ஆனால், சில மாதங்களிலேயே சில காரணங்களால், மேரா நாம் ஜோக்கர் இரண்டாம் பாகம் எடுக்கிற திட்டத்தைக் கைவிட்டு விட்டார்.

நான் ஆயிரக்கணக்கான தடவை மேடையில் மேஜிக் செய்து காட்டியிருக்கிறேன் என்றாலும், ஆண்டவன் என் முகத்தில் நடத்திய மேஜிக் என்னால் மறக்க முடியாதது! அதைப் பற்றி அடுத்த வாரம் சொல்லுகிறேன்.

(அடுத்த இதழில் முடியும்)





# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர் சென்னை-63

☎:2376129

## ஓரிசா மாநில புயல் நிவாரணப் பணி
## அவசர வேண்டுகோள்

அன்புள்ளம் கொண்டோரே,

கடந்த சில நாட்களாக ஓரிசா மாநில பகுதியில் வீசிய கடும் புயல் காரணமாக லட்சக்கணக்கான பேர் வீடுகள் இழந்து தங்கள் அன்றாட வாழ்க்கையே கேள்விக்குறியாக உள்ள இந்த நேரத்தில்,

மத்திய, ஓரிசா மாநில அரசு தனியார் தொண்டு நிறுவனங்களை சேவை செய்யுமாறு அழைத்துள்ளது. அதன்படி நம் "ஸ்ரீ சாரதா சக்தி பீடத்தின்" நிறுவனர், சுவாமிஜியும் தொண்டர்களும், பாதிக்கப்பட்ட பகுதிகளுக்குச் சென்று பார்வையிட்டு நிவாரணப் பணிகளை மேற்கொள்வதற்கு முடிவு செய்யப்பட்டுள்ளது.

முதற்கட்டமாக **15,000** குடும்பங்களுக்கு உடனடித் தேவைகளான அத்தியாவசியப் பொருட்களை வழங்க திட்டமிடப்பட்டுள்ளது. இதுவரை ரூ **3,00,000** மதிப்புள்ள புதிய துணிகள் சேகரித்து பாதிக்கப்பட்ட மக்களுக்கு நேரிடையாக வழங்கப்பட்டுள்ளது.

ஒரு குடும்பத்திற்கு 25 கிலோ அரிசி, இரண்டு போர்வைகள் வேஷ்டி, சேலை, லாந்தர்விளக்கு ஆகியவற்றை வழங்க ரூபாய் 500/- செலவாகிறது.

மொத்தம் **15,000** குடும்பங்களுக்கு ரூ **75,00,000/-** (எழுபத்தி ஐந்து லட்சம்) தேவைப்படுகிறது.

கருணை உள்ளம் படைத்த இதயங்களை நாடுகின்றோம்.

வாரீர்! வாரி வழங்குவீர்! பசியால் வாடும்

உள்ளங்களை காப்பாற்றுவோம். வாரீர் !

குறிப்பு : நன்கொடை செக்/டிடி/மணியார்டர்கள் "ஸ்ரீசாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு அனுப்பி வைக்கவும்.

நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வருமான வரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்

சுவாமி ஸ்ரீ சர்வாத்மானந்தர்

மேனேஜிங் டிரஸ்டி.

மதுரை மாவட்டம், சிங்கம்புணரியைச் சேர்ந்த ராஜேந்திரனுடைய தந்தை ஒரு சாதாரண விவசாயி. நாலு மகன்களும் விவசாயத்திலல்லாமல் வீடியோ கடை வைத்தார்கள். வீடியோ கேசட்டுக்கு நல்ல மவுசு இருந்த நேரமென்பதால் தொழில் பிரமாதமாக வளர்ந்தது. நிறைய படங்களுக்கு 'ரைட்ஸ்' வாங்கித் தள்ளினார் ராஜேந்திரன். படங்களின் உரிமையை வாங்கி வைத்துப் பின்னால் என்ன செய்வது என்கிற ஐடியா இல்லாமலேதான் வாங்கியிருக்கிறார்.



"ஏவிஎம் செட்டியார்தான் அந்த வகையில் என் முன்னோடி. டீவி வருவதற்கு முன்பே அவர் டீவி ரைட்ஸ் வாங்கி வைத்திருந்தார், பல படங்களுக்கு. அது மாதிரி, பின்னால் உபயோகமாகும் என்று ஒரு நம்பிக்கையில்தான் வீடியோ ரைட்ஸ் வாங்க ஆரம்பித்தேன். என்னிடம் உரிமையிருந்த படங்கள்தான் என்னை இன்று ஒரு தொலைக்காட்சியையே ஆரம்பிக்கச் செய்தது" என்கிறார் ராஜேந்திரன். ராஜ் டீவியின் நிர்வாக இயக்குநர். ஊழியர்கள் அனைவரும் 'பெரியவர்' என்று அழைத்தாலும் பார்க்க இளமையாகவே இருக்கிறார். 49 வயது. எக்ஸிக்யூட்டிவ் கெட்-அப்பும் வெற்றிலைக் குதப்பலுமாக, முதல் பார்வையிலேயே வித்தியாசம் காட்டுகிறார்.

தமிழ் சாடிலைட் தொலைக்காட்சிகளில் இன்று ராஜ் டீவி நம்பர் 2. ஐந்தடுக்கு மாடிக் கட்டடமும் அபாரமான நவீன சாதனங்களுமாகச் சென்னை தேனாம்பேட்டையில் ராஜ் டீவி அலுவலகம் எப்போதும் பரபரப்பாக இருக்கிறது. கே. பாலசந்தர், அபஸ்வரம் ராம்ஜி எனப் பல பெருந்தலைகள் தம் நேரத்தையும் மூளையையும் இதில் முதலீடு செய்திருக்கிறார்கள்.

"வளர்ச்சியெல்லாம் இப்பத்தானே? ஆரம்பிச்ச புதுசில் பட்ட கஷ்டம் கொஞ்ச நஞ்சமில்லை. நானும் தம்பிகளும் கடை கடையா ஏறி இறங்கி விளம்பரம் வாங்குவோம். எங்களோட பலமே நிறையப் படங்கள் இருந்ததுதான். சினிமா சானல்னே சொன்னாங்க. மக்களை ஈர்க்க அது ரொம்ப உதவிகரமா இருந்தது. நமக்குன்னு பார்வையாளர்கள் அமைஞ்சிட்டதும் சினிமாக்களோட எண்ணிக்கையைக் குறைச்சிட்டேன். இப்ப உபயோகமான நிகழ்ச்சிகளுக்கு ராஜ் டீவின்னு ஆகிப் போச்சு. சினிமா போடறதுக்காகவே ராஜ் பிளஸ் தொடங்கிட்டேன்" என்று சொல்லும் ராஜேந்திரன் தீவிரமான ஆன்மீகவாதி. வார்த்தைக்கு வார்த்தை, "எதுவும் நம்ம கையில இல்லீங்க. அவன் முடிவு பண்றதுதான்" என்கிறார். அறையில் அவரைச் சுற்றி அத்தனை தெய்வங்களும் விக்கிரக வடிவில் உட்கார்ந்திருக்கிறார்கள்.

"இந்த தெய்வ நம்பிக்கை தாங்க என்னை சரியான பாதைல யோசிக்க வைக்குது. மத்த தனியார் சானல்கள் மாதிரி நாங்க ஆபாசத்துப் பக்கம் தலை வைக்கறதில்லை. எங்க நிகழ்ச்சித் தொகுப்பாளர் யாராவது அரைகுறை ட்ரெஸ் போடறாங்களா சொல்லுங்க? சீரியல்கள்ல ஆபாச ஜோக், ஆபாசக் காட்சிகள் வருதா பாருங்க? கண்டிப்பா வராது. ஆபாசமா இருக்குன்னு பல விளம்பரங்களைக் கூட மறுத்துடறோம். அந்த வகைல பத்திரிகை உலகத்துல கல்கி எப்படியோ, அப்படித்தான் நாங்க டீவி உலகத்துல."

பாலசந்தரின் சின்னத் திரையும் ராகம் சங்கீதம் தொடர் நிகழ்ச்சியும் பெரு வெற்றி கண்டதில் ராஜேந்

# “ஐடியாவைச் சொன்னால் திருடுவாங்க!”

திரனுக்குச் சொல்ல முடியாத மகிழ்ச்சி.

“நவீன உலகம்ங்கறாங்க. பாப் கல்சர் வந்திருச்சிங்கறாங்க. அது பாட்டுக்கு வந்துட்டுப் போகட்டும். நம்ம பாரம்பரியத்துக்கு அழிவே கிடையாது. ராகம் சங்கீதம் அளவுக்கு ஹிட் ஆன வேற நிகழ்ச்சி உண்டா? கர்நாடக சங்கீத நிகழ்ச்சிதான். இளைஞர்கள் ஆதரவு இல்லாம இது எப்படி இவ்ளோ பெரிய வெற்றி அடைஞ்சிருக்க முடியும்? நான் தெளிவா இருக்கேன். கர்நாடக சங்கீதம், பரதநாட்டியம், பக்தி சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளை ஒருபோதும் நிறுத்த மாட்டேன்” என்னும் ராஜேந்திரன், ராஜ் டீவியின் ஆன்மிக நிகழ்ச்சிகளைக் கூர்ந்து கவனிக்கச் சொல்கிறார் நம்மிடம்.

“எல்லா மதப் பிரார்த்தனைகளுக்கும் சரிசமமா இடம் கொடுத்திருக்கோம். சாயி பஜனும் வரும். கலிசேஷப் பிரசங்கமும் வரும். இஸ்லாம் பெரியவங்களும் பேசுவாங்க. இந்த சமத்துவம், எங்களுக்கு எல்லா தரப்பு ரசிகர்களையும் கொண்டு சேர்த்திருக்கு.”

ராஜேந்திரனின் பெருமிதம் தம் தம்பிகளையும் ஊழியர்களையும் பற்றியது.

“இது ஒரு ஆபீஸ் மாதிரியே இருக்காதுங்க. கூட்டுக் குடும்பமாயிருக்கற ஒரு வீடு மாதிரிதான். இங்க வேலை பார்க்கற எல்லாருக்குமே இது அவங்க சொந்த டீவிங்கற உணர்வுதான் இருக்கு. என் வேலை, வேலைகளைப் பிரிச்சிக் கொடுக்கறதோட சரி. நம்ம பாலிஸிக்கு மாறா இல்லாம நிகழ்ச்சிகள் அமையுதான்னு மட்டும் பார்த்துப்பேன். மீச்சத்தை அவங்க பார்த்துப்பாங்க. அதுக்கு மேல ஆண்டவன் இருக்கான்” என்கிற ராஜேந்திரன், ராஜ் செய்திப் பிரிவு குறித்து தனிப்பெருமை தெரிவிக்கிறார்.

“நம்முது ஆளுங்கட்சி சானல் இல்லை. எதிர்க்கட்சி சப்போர்ட்டும் கிடையாது. பெரிய ஆள் பலமும் கிடையாது. நடுநிலையான செய்தி வேணும்னா நம்ம நியூஸ்தான்னு ஜனங்க சொல்ற அளவுக்கு எங்க நியூஸ் விங் செயல்படுது பாருங்க. அதுதான் என் ஒரே சாதனை!” என்கிறார்.

ராஜேந்திரன், வெகு விரைவில் ஒரு எஃப்.எம். ரேடியோ தொடங்கும் திட்டத்தில் முனைப்பாக இருக்கிறார். “இனி ரேடியோன்னாலே ராஜ் ரேடியோதான்ற அளவுக்கு அதைக் கொண்டு வரேன் பாருங்க!” என்கிறார் நம்பிக்கையுடன்.

“ரேடியோ சரி. உங்கள் டீவியில் புதுமையாக ஏதாவது செய்யவிருக்கிறீர்களா? அல்லது வழக்கமான விஷயங்கள்தான் தொடருமா?” என்று கேட்டால் மர்மமாகச் சிரிக்கிறார்.

“இப்பத்திய ட்ரெண்ட் ஒரு 'பேட்டர்ன்' ஆயிடுச்சி. கொஞ்ச நாள்ல இது போரடிச்சிடும். அது போரடிக்கறதுக்குள்ள ஒரு அதிரடியான மாற்றம் செய்ய ஐடியா இருக்கு. தமிழ்நாடே திரும்பிப் பார்க்கறாப்பல ஒரு திட்டத்தைப் பரிசீலிச்சிட்டு வரேன். இப்ப வெளில சொன்னா ஐடியாவைத் திருடிடுவாங்க. கொஞ்சம் வெயிட் பண்ணுங்க” என்கிறார் சஸ்பென்ஸுடன்!

— கிருஷ்ணன்

படம் : ப்ரவீன்குமார்

**இந்திய வரலாற்றைச் சொல்லியே, வரலாறு காணாத பெருவெற்றியைப் பெற்ற அதிசயப் படைப்பு 'சுரபி'. ப்ரைம் டைம் டெலிவிஷனில், நமது கலாசாரத்தை அடிப்படையாகக் கொண்டு, ஒரு டாகுமெண்டரித் தொடர் 350 நிகழ்ச்சிகளைத் தொட்டிருப்பதே ஒரு சாதனைதான். அதைத் தயாரித்து, இயக்கி, தொகுத்து வழங்கும் 'சித்தார்த் கக்'குடன் ஒரு சந்திப்பு.**




**கேள்வி** : சுரபிக்கு முந்தைய வாழ்க்கையைப் பற்றி...

**பதில்** : குழந்தைப் பருவத்தை தாத்தா 'ராமச்சந்திர கக்'குடன் காஷ்மீரத்து மலைப் பிரதேசங்களில் கழித்திருக்கிறேன். இந்தியத் தாயிடம் பொதிந்து கிடக்கும் இயற்கையை ரசிக்கவும், தனிமையில் இனிமை காணவும் அப்போதுதான் கற்றுக் கொண்டேன். புத்தகங்களே எனக்கு நெருங்கிய நண்பர்கள்; இந்தியன் எக்ஸ்பிரஸில் க்ரைம் ரிப்போர்ட்டராக வேலையை ஆரம்பித்தேன். உயிரற்ற உடல்களைக் கண்டு வெறுத்து, 'டாட்டா'வில் அதிகாரியாகச் சேர்ந்தேன். கார்ப்பொரேட் கலாசாரம் ஒத்து வரவில்லை; முல்க் ராஜ் ஆனந்தின் 'மார்க்' பத்திரிகைக்கு பிஸினஸ் மானேஜரானேன்; கொஞ்ச காலம் சினிமாவில் குப்பைக் கொட்டிய பிறகு, டீ.வி.யில் செய்தி வாசிப்பாளராக மாறினேன். பிறகு 'சுரபி' நேர்ந்தது; அப்புறம்தான் உங்களுக்குத் தெரியுமே...?

**கேள்வி** : 1991-ல் சுரபியை ஆரம்பிக்கும் போது, அது இவ்வளவு பெரிய வெற்றியாகும் என நினைத்தீர்களா?

**பதில்** : ஒரு குண்டு மனிதனும் ஒரு ஒல்லிப் பெண்ணும் சேர்ந்து கொண்டு லட்சக்கணக்கான ரசிகர்களின் மனத்தில் இடம்பிடிக்கும்படியான ஒரு நிகழ்ச்சியை வழங்க முடியுமா என ரொம்பக் கவலைப் பட்டேன். இப்போது புரிந்து விட்டது; இதய பூர்வமான உழைப்பிருந்தால், எதிலும் வெல்ல முடியும்.

**கேள்வி** : சுரபியின் வெற்றி ரகசியம் என்ன?

**பதில்** : எங்கள் டீமில் பணிபுரிபவர்கள் அனைவரும், இதைத் தங்கள் வாழ்க்கையின் பெரிய 'அட்வெஞ்சர்' ஆகவே நினைப்பதுதான். யாருக்கும் பெரிய டீ.வி. ஸ்டாராக வேண்டும் என்ற கனவெல்லாம் கிடையாது. யாராவது எங்களுடன் இணைய ஆசைப்பட்டால், முதலில் 'தொலைதூர கிராமங்களில், ரோடில்லா பாதைகளில், வானத்து நட்சத்திரங்களை மட்டும் துணைக்கு வைத்துக் கொண்டு அலையத் தயாரா?' என்று கேட்போம். உடனே 'சரி' என்றால் சேர்த்துக் கொள்வோம்; கொஞ்சம் யோசித்தாலும், 'நோ'தான்!

அடுத்து, சோஃபா, சேர் என்ற 'ஃபார்மலான' சூழலைத் தவிர்த்து, மெத்தையில் அமர்ந்து நாங்கள் பேசியதை ரசிகர்கள்

வரவேற்றார்கள். தொகுப்புரையை, இந்திய மணம் கமழும் விதத்தில் நானே எழுது வேன். பார்வையாளர்களுக்கு, 'அட, இது நம்ம ப்ரோக்ராம்' என்ற நினைப்பு வர ஆரம்பித்தது. மேலும், பார்வையாளர் களுடன் உறவாடவென்றே முதன் முதலாக, கேள்வி பதில் நிகழ்ச்சியையும் இணைத் தோம். இன்று அந்த யுக்தியைக் கையாளாத வர்களே இல்லை!

**கேள்வி** : 14 லட்சம் போஸ்ட்கார்டுகளை ஒரே சமயத்தில் பெற்றதாமே உங்கள் நிகழ்ச்சி? பரிசுத் திட்டம் காரணமா?

**பதில்** : அப்படி ஒன்றும் வைர மழை, தங்க நகை, கார் என்றெல்லாம் கவர்ச்சிகர மான பரிசுகளை அறிவிக்கவில்லையே? ஏதோ கண் காணாத இடத்தைச் சுற்றிப் பார்க்க, டிக்கெட்டுக்களைத்தானே கொடுத்து வந்தோம்? பரிசுக்காகப் பங்குபெற்றிருக்க மாட்டார்கள்; சுரபிக் குடும்பத்தில் பங்கு கொள்ளும் ஆர்வத்தில்தான் என நினைக் கிறேன்.

# தொடரில் ஒரு சாதனை!

**கேள்வி** : பத்து வருடங்களாகக் குறைவில்லாமல் உங்களுக்கு 'ஐடியா'க்கள் உற்பத்தியானது எப்படி?

**பதில்** : சுனின் ஷான்பாக் தலைமையில், எங்களுக்கென்று ஒரு 'ரிஸர்ச் டீம்' உண்டு. அவர்கள் தொடக்கத்தில் உதவினார்கள். ஆனால் போகப் போக, ரசிகர்களிடமிருந்து எங்களால் சமாளிக்க முடியாத அளவுக்கு ஐடியாக்கள் வந்து குவிந்தன.

**கேள்வி** : இவ்வளவு பாப்புலரான பிறகும், ஸ்டாருக்கோ, ஸோனிக்கோ தாவாமல், தூர்தர்ஷனுடன் இணைபிரியாமல் இருக்கிறீர்களே?

**பதில்** : மற்ற சேனல்களிலிருந்து சூசகமான அழைப்புகள் வந்தென்னவோ உண்மை. ஆனால் தூர்தர்ஷனுடன் ஒட்டிக் கொண்டிருப்பதற்கு இரண்டு காரணங்கள் – ஒன்று, அவர்கள் எங்களுக்கு மிகுந்த ஆதரவளித்து, நிகழ்ச்சி நீட்டிப்புகளை வாரி வழங்கியது; இரண்டு, இந்தியக் கலாசாரத் துக்கு, டிடி கொடுக்கும் மதிப்பும் மரியாதை யும்! பொழுதுபோக்கு என்ற போர்வையில், இந்தியப் பண்பாடு சிதைக்கப்படும் அபாயம் மற்ற சேனல்களில் உண்டு!

**கேள்வி** : டீ.வி.யின் மற்ற மெகா ஹிட்டுகளான ராமாயணம், மகாபாரதம், கிருஷ்ணா, ரங்கோலி 'போன்றவற்றுடன் சுரபியை' எந்த அளவுக்கு ஒப்பிடலாம்?

**பதில்** : "முதல் மூன்று அழிவேயில்லாத புராண இதிகாசக் கதைகள்; ரங்கோலிக்கு சினிமா கவர்ச்சி உண்டு! இவற்றுடன் சுரபியை ஒப்பிடலாமா? மற்ற டாகுமெண்டரிகளெல்லாம் ஒரு TRP பாயிண்டு கூட பெறாதபோது, எங்களுக்கு 20 – 25 பாயிண்டுகள் கிடைத்திருப்பதே பெரிய அதிசயம்!

**கேள்வி** : புதிய மிலெனியத்துக்கென்று செய்திப் படங்கள் தயாரிக்கிறீர்களாமே?

**பதில்** : Eternal India, Timeless India என்று இரண்டு டாகுமெண்டரிகள் செய்கிறேன். முதலாவது சுரபியின் கிளை போல்தான். நமது கலைஞானத்தைப் பற்றியது. இரண்டாவது நமது பண்பாட்டின் பிரதி பலிப்பு. இது, 24 நாடுகள் பங்குகொள்ளும், ஓர் உலகளாவிய ஒளிபரப்பு. டிசம்பர் 31-ம் தேதியன்று ஒளிபரப்பாகும்.

**கேள்வி** : புதிதாக வெப்சைட் துவங்கியுள்ளீர்களாமே?

**பதில்** : ஆம்; நம் கலாசாரத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்ய நினைப்பவர்களுக்கு இது ஒரு பொக்கிஷமாக இருக்கும்; உண்மையில் நீங்கள் டீ.வி.யில் பார்க்கும் ஒரு பத்து நிமிட பேட்டிக்கென்று நாங்கள் மாய்ந்து மாய்ந்து இரண்டு மணி நேரம் உழைத்திருப்போம். அந்த உழைப்பு, அதில் பொதிந்து கிடக்கும் தகவல்கள், இவை வீணாகலாமா? அதற் கென்றே, 'சுரபி ஃபவுண்டேஷன் ஃபார் ரிஸர்ச் அண்ட் கல்சுரல் எக்ஸ்சேஞ்ச்' என்ற ஒன்றை நிறுவி, இவையனைத்தையும் பாதுகாக்கும் பணியிலும் ஈடுபட்டிருக் கிறோம். அதனால் 'சுரபி' என்றென்றும் ஒரு நித்தியத் தன்மையுடன் ஜீவித்திருக்கும்.

— ஜெ.ஆர்.

# எங்கள் வயிற்றில் புளியைக் கரைக்கலாமா?

✉ தடம் மாறிப் போய்க்கொண்டிருக்கும் த.மா.காங்கிரசுக்கு குறிப்பாக மூப்பனார் அவர்களுக்கு சரியான நேரத்தில், சரியான முறையில் தலையங்கம் மூலமாக ஒரு நேரான, நேர்மையான பாதையைக் காட்டியிருக்கிறீர்கள்.
பெங்களூர்-72, ப. மூர்த்தி.

✉ சிறைத் துறை தொடர்பான கமிஷன் முடிவுகளை அமல்படுத்தாமல் 'சிறை'ப் படுத்தி வைத்திருக்கும் தமிழக அரசின் செயலை 'நச்' என்று கண்டித்து இருந்தீர் தலையங்கத்தில்.
சென்னை - 26, சி. மகேஷ்.

✉ 'ஹே ராம்' பற்றிய சகல அம்சங்களையும் வெளியிட்டு அசத்தி விட்டீர்கள். படம் எப்போது வெளிவரும் என்ற எதிர்பார்ப்பு இன்னும் அதிகமாகி விட்டது.
சேலம், வி. முரளி.

✉ உலகப் பொது இசை அமைக்க விழையும் சங்கர் மகாதேவனின் முயற்சிகள் வெற்றி பெறட்டும். சங்கர் மகாதேவனின் முதல் பேட்டியை வெளியிட்ட தமிழ்ப் பத்திரிகை என்ற பெயரை தட்டிச் செல்கிறது, கல்கி.
மும்பை - 19, ஜான் சாமுவேல்.

✉ 'அடுத்த நூற்றாண்டைக் கொண்டாட சில பொருட்கள்' என லட்சம், ஆயிரக் கணக்கில் விலையுள்ளவைகளை பட்டியலிட்டு, நடுத்தர வர்க்கத்தினர் வயிற்றில் ஏன் சார் புளியைக் கரைக்கின்றீர்கள்?
சிதம்பரம் - 2, ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ பசுபதி கோயில் கிராமத்து பெண்களைப் பற்றிப் படித்தேன். வயல்வெளிப் பள்ளிகளில் சேரும் பெண்கள் சாராய வியாபாரிகளை விரட்டியடித்தனர் என்பதைப் படிக்கும்போது இக் காலப் பெண்களுக்கு சுதந்தரம், உரிமை, அதிகாரம் இம் மூன்றும் கொடுத்தால் நாடு இன்னும் பல விதத்தில் திருந்தும், முன்னேறும் என்கிற நம்பிக்கை ஏற்படுகிறது.
இலால்குடி, எம். இராஜேந்திரன்.

✉ மூத்த தலைமுறையினர் பழைமையை மட்டுமே விரும்புவார்கள் எனும் குற்றச்சாட்டைத் தவிடு பொடியாக்கியது உங்களுடைய "ஆடறீங்களா சார்" கட்டுரை. அதிலும் கர்நாடக சங்கீதத்தை முறைப்படி கற்ற நடராஜன் அதில் உள்ள சிறப்பு அம்சங்களைப் பாராட்டியது அவருடைய பரந்த மனதையும் எல்லாவற்றிலும் இன்பம் உண்டு என்ற உண்மையையும் உணர்த்தியது. பெரியவர்களின் ரசிப்புத் தன்மையை வெளிக்கொணர்ந்த கல்கிக்குப் பாராட்டுகள்.
சென்னை - 59, ரவிசந்திரன்.

✉ என்னதான் மகன் மோசமான நடத்தையுள்ளவனாக இருந்தாலும், கொலையே செய்யுமளவுக்கு கொடூரமானவனாக இருந்தாலும், அவனை மன்னித்து அவன் தவறுகளுடனேயே அவனை முழுமையாக ஏற்றுக் கொள்ளும் மனம் தாய்மனம் என்பதை 'நச்'சென்று நிரூபித்திருந்தார் மும்தாஜ் யாசின், தமது கோணல் மரம் சிறுகதையில்.
திருப்பரங்குன்றம், டி.கே. சுப்பிரமணியன்.

✉ டாகுமென்டரித்தனம் தான் முதல்வன் படத்துக்கு பலமும், பலவீனமும் என்ற உமது விமர்சனம் நூற்றுக்கு நூறு உண்மை.
விஜயவாடா, தெனாலிராஜன்.

✉ இதழ் முழுவதும் 'சினி பிட்ஸ்' நிரம்பி வழிந்ததை ரசித்தேன். இன்னொன்றையும் சொல்ல வேண்டும், அதிகமான ஜோக்குகளைப் போட்டு அசத்தியிருந்தீர்கள்!
மொரட்டுப்பாளையம், க.நா. இராஜேஸ்வரன்.

✉ திருவெண்காடு கோவிலைப் பற்றி தெய்வ தரிசனம் மூலம் பல அரிய விஷயங்கள் தெரிந்து கொண்டோம். கட்டுரையில் ஒரு சிறிய திருத்தம். சீர்காழியிலிருந்து தரங்கம்பாடி செல்லும் சாலை என்பதற்கு பதிலாக சீர்காழியிலிருந்து பூம்புகார் செல்லும் சாலை என்று இருக்க வேண்டும்.
சீர்காழி, கே.ஆர். வெங்கடேஷ்.



"அந்த டிராபிக் கான்ஸ்டபிள் கடமைன்னு வந்துட்டா சொந்த பந்தம்கூட பார்க்க மாட்டாரு!"

"அப்படியா?".

"பின்னே... நோ பார்க்கிங்கிலே வண்டியை நிறுத்தியிருந்த தன்னோட பையன்கிட்டயே மாமூல் வசூல் பண்ணிட்டாரே!"

— பெரியகுளம் ஆர். வேணுகோபால்



"தொழிலே கணங்கிப் போச்சு, அண்ணே! இப்பவெல்லாம் யாரும் கத்தியைக் காட்டினா பயப்பட மாட்டேங்கறாங்க!"

"போடா மக்கு! மோதிரமோ, ஹை ஹீல்ஸ் செருப்போ காட்ட வேண்டியதுதானே?"

— செ.க.புதூர் குமார்

கேபிள் டி.வி ஆபரேட்டர் ஆக வேண்டுமென்றால் என்ன செய்ய வேண்டும்? பக்கத்தில் உள்ள போஸ்டாபீஸில் ஐந்நூறு ரூபாய் கட்டி பதிவு செய்து கொள்ள வேண்டும். அவ்வளவுதான். அப்புறம் பல வீட்டு மாடிகளின் வழியாகவோ அல்லது மாநகராட்சியின் அதிகாரிகளுக்கு சம்திங் வெட்டியோ கேபிள்களை எப்படி வேண்டுமானாலும் கொண்டு போகலாம். இப்படித்தான் பல வருடங்களுக்கு முன்னர் ஆயிரக்கணக்கான கேபிள் ஆபரேட்டர்கள் வட்டம், வட்டமாக முளைத்தார்கள்.

சாட்டிலைட் சேனல்களின் எண்ணிக்கை பெருகப் பெருக, வியாபாரம் கட்டுப்படியாகவில்லை. கண்ட்ரோல் பேனல்கள் வைக்கும் செலவு, கேபிள்களை நிர்வகிக்கும் செலவு, பே சேனல்களுக்கு பணம் அழுவது ஆகியவற்றை ஒப்பிடும்போது வசூலாகும் சந்தாத் தொகை போதவில்லை. தவிர, மாரியம்மன் கோவில் திருவிழா, பொதுக்கூட்டம் என்று லோக்கல் அரசியல் தாதாக்களுக்கு வேறு அழ வேண்டியிருந்தது. இந்த நிலையில் தான், கேபிள் ஆபரேட்டர்களுக்கு விடிவு காலம் போல வந்தன 'கன்ஸார்ஷியம்' என்ற அமைப்புகள். சேனல்களை ஒரே இடத்தில் ரிலீஸ் செய்து, கேபிள்கள் மூலம் பல சிறிய ஆபரேட்டர்களுக்கு ஒளிபரப்பை விநியோகிப்பது அவர்களது பணி. ஒரு பூஸ்டர் போட்டு, ஆபரேட்டர் வீடுகளில் விநியோகித்துக் கொள்வார். சின்ன ஆபரேட்டர், கன்ஸார்ஷியத்துக்கு மாதம் ஒரு தொகை கட்டினால் போதும். சென்னையில் மட்டும் இது போன்று மொத்த 'சேனல்' வியாபாரிகள் மூன்று பேர் இருந்தனர். மும்பையைச் சேர்ந்த ரஹேஜா நிறுவனம், அதில் ஒன்று. மற்ற இரண்டு மொத்த வியாபாரிகளையும் வளைத்துப் போட்டு, சென்னை கேபிள் டி.வி. நெட் ஒர்க்கை தங்களது பிடியில் கொண்டு வர வேண்டும் என்று ரஹேஜா நினைத்தபோதுதான் நிழல் யுத்தம் தொடங்கியது.

"மும்பை நிறுவனம் நம்ம ஊரில், நம் கண்ணெதிரே கேபிள் நெட்ஒர்க்கை கைப்பற்றுவதை பார்த்துக்கொண்டு சும்மா இருக்க முடியுமா? 'சுமங்கலி நெட் ஒர்'க்கை துவக்கியதற்குக் காரணம் அதுதான். எங்கள் நோக்கம் காலப் போக்கில் ஜெயா தொலைக்காட்சியை முடக்குவதல்ல! எதிர்காலத்தில் இன்டர்நெட் போன்றவற்றையும் எங்கள் கேபிள்கள் மூலம் வீடுகளுக்குக் கொடுப்பதுதான்!" என்கிறார்கள் சுமங்கலி நிறுவனத்தார். முன்பு ஜெ.ஜெ.டி.வி துவக்க நினைத்த சூப்பர் டூப்பர் போன்றது அல்ல இது!

கோடம்பாக்கம் முரசொலி அலுவலகத்தில் பின்புறம் நவீன கண்ட்ரோல் அறை அமைத்து சேனல்களை கேபிள் ஆபரேட்டர்களுக்கு சப்ளை செய்யத் துவங்கி விட்டது சுமங்கலி நிறுவனம். சன் தொலைக்காட்சி கலாநிதி மாறனின் சகோதரர் தயாநிதி மாறன்தான் இதன் உரிமையாளர். மாநகராட்சி தி.மு.க. வசம் இருப்பதால், சுமங்கலியின் கேபிள்கள் எந்தப் பிரச்னையுமில்லாமல் சாலைகளைத் தாண்டிப் போகின்றன. ஆபரேட்டர்களிடம் எந்தவித முன்பணமும் வாங்காமல் ஒளிபரப்பை விநியோகிக்கிறது சுமங்கலி நிறுவனம்.

சக்தி மிக்க அரசியல் பின்னணி கொண்டவர்கள் தங்களுக்கு வியாபாரப் போட்டியாக வருவார்கள் என்று

ரஹேஜா நிறுவனம் சற்றும் எதிர்பார்க்கவில்லை. சுமார் அறுபது சதவீத கேபிள் நெட் ஓர்க்கை வளைத்துப் போட்டு, கேபிள் சேனலில் தினசரி நியூஸ் உட்பட பல நிகழ்ச்சி களை தனியாகவே ஒளிபரப் பும் செயல் திட்டத்தில் ரஹேஜா சற்று பதுங்கி இருக் கிறது. ரஹேஜா நிறுவனத் தினர் பேசத் தயங்குகிறார்கள். "நாங்கள் யாருடனும் மோத விரும்பவில்லை. 'வாழு, வாழ விடு, பாலிஸியே சிறந்தது என்று நினைக்கிறோம். மும்பை உட்பட பல நகரங் களில் நாங்கள் போட்டி யாளர்களுடன்தான் வாழ் கிறோம். இங்கு என்ன பிரச்னை என் றால் அதிகார வர்க்

# சின்னத்திரை: பெரிய மோதல்!

கப் பின்னணி யும் இருக்கிறது. எனவே சர்வ ஜாக்கிரதை யாகப் பேச வேண்டியிருக் கிறது!" என்றார் அந்த நிறு வனத்தின் அதிகாரி ஒரு வர்.

இதற்கிடையில் சுமங்கலி நிறுவனம் தனது எல்லைகளை விஸ்தரித்துக் கொண்டே போகிறது. வரும் சட்டமன்றத் தேர்தலுக்குள் தமிழகத்தின் 80 சதவீத கேபிள் நெட் ஓர்க்கைத் தனது பிடிக்குள் கொண்டு வர வேண்டுமென்பது திட்டமாம். மற்றதை சின்னத் திரையில் காண்போம்.

— தில்லப்பா

46

சேஷினே, சேஷ சாயினே என்பதற்கான விளக்கம் சொன்னேன்.

இந்த வாக்யத்தில், உத்தரார்த்தத்தில் வருகிற விஷயம் அழகானது :

நிர்மலானந்த கல்யாண நிதயே

நிர்மல, அனந்த கல்யாணநிதயே - நிர்மலன் பகவான்.

மலம் என்றால் அழுக்கு. நிர்மலன் என்றால் அழுக்கில் லாதவன் என்று அர்த்தம்.

*அமலன் ஆதிபிரான் அடியார்க்கு என்னை ஆட்படுத்த*
*விமலன் விண்ணவர்கோன் விரையார் பொழில் வேங்கடவன்*
*நிமலன் நின்மலன் நீதி வானவன்*
*நீள் மதில் அரங்கத்து அம்மான் திருக்*
*கமல பாதம் வந்து என் கண்ணின் உள்ளன ஒக்கின்றதே*

என்கிறார் திருப்பாணாழ்வார்.

அமலன், விமலன், நிமலன், நிர்மலன் என்று எத்தனை சொல்கிறார் பாருங்கள்.

'அமலன், அவியாத சுடர், அளவில்லா ஆரமுதம்' என்று சுவாமி தேசிகன் சொல்கிறார்.

இதிலே அமலத்வம் என்பதுதான் பரமாத்மாவுக்கு இருக்கிற உயர்ந்த குணம்.

இதை இன்னொரு விதமாகவும் ஆசார்யர்கள் சொல்கிறார்கள் :

மலப்பிரதிபடன் - அப்படியென்றால், மலத்துக்கு எதிர்த்தட்

## முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

டானவன்; அழுக்கற்றவன். அழுக்கே இல்லாத, சுத்த சாத்விக மயமானவன்.

சாத்விகம், சுத்த சாத்விகம் என்று இரண்டு. வெறும் சாத்விகம் இல்லை; சுத்த சாத்விக மயமானவன். அழுக்கே இல்லாதவன், பரமாத்மா.

விச்வாமித்ரர் சரயு நதி தீரத்தில் படுத்துக் கொண்டிருக்கும் குழந்தைகளான ராம - லக்ஷ்மணர்களைப் பார்க்கிறார். அப்போது அதிகாலை நேரம். முன்னமே எழுந்து விட்டார் முனிவர். அவர் ராமனைப் பார்த்துப் பாடுகிறார் :

கௌசல்யா சுப்ரஜா ராமா பூர்வா சந்த்யா ப்ரவர்த்ததே

- பூபாளத்தில் விசேஷமாகத் துயிலெழுப்புகிறார் பகவானை.

எல்லா சுப்ரபாதங்களிலும் இதுவே முதல் சுலோகமாக இருக்கும்.

விச்வாமித்ரர் எப்படிச் சொல்லி எழுப்புகிறார்...?

'கௌசல்யையுடைய நல்ல புதல்வனே!' என்று கூறி எழுப்புகிறார்.

ஆண் பிள்ளைக் குழந்தையை எழுப்ப வேண்டும் என்றால், தாசரதே என்று சொல்ல வேண்டும். 'தசரதனுடைய மகனே!' என்று கூப்பிட வேண்டும். ஒரு பிள்ளையைக் கூப்பிட்டு, நீ யார் என்று கேட்டால், அவன் அப்பா பெயரைச் சொல்ல வேண்டும் என்பது சாஸ்திரம். ஒரு பெண் குழந்தையைக் கூப்பிட்டுக் கேட்டால், அம்மா பெயரைச் சொல்ல வேண்டும் என்பது சாஸ்திரம்.

இங்கே, ஆண் பிள்ளையைத்தான் எழுப்புகிறார். ஆனால், 'கௌசல்யா சுப்ரஜா ராமா!' என்கிறார்.

விச்வாமித்ரருக்கு இந்த சாஸ்திரம் தெரியாதா என்றால்,

தெரியாமலில்லை.

'இன்றொரு நாள் மட்டும்தானே எனக்கு இந்த துயிலெழுப்பும் வாய்ப்புக் கிடைத்தது. இவனுடைய சயனத் திருக்கோலத்தை நித்யம் பார்க்கக் கொடுத்து வைத்தவள் அந்த கௌசல்யை அல்லவா? அவளல்லவோ பாக்யசாலி!' என்று கொண்டாடுகிறார்.

இடத்தைப் பார்த்து அழகான வியாக்யானம் சொல்கிறார் :

நம் கிருஹத்திலே தூங்கும் குழந்தை, பரட்டைத் தலையோடு கோணல் மாணலாகத் தூங்குவதைப் பார்த்தே தாய்மார்கள் மகிழ்ந்து, தூரத்திலேயிருந்தே திருஷ்டி கழிக்கிறார்கள். பர்தாவை அழைத்து, 'பாருங்கள், பாருங்கள் – குழந்தை எவ்வளவு அழகாகப் படுத்துக் கொண்டிருக்கிறது பாருங்கள்' என்கிறார்கள்.



பெரியவாச்சான் பிள்ளை என்கிற வியாக்யான சக்கரவர்த்தி, உள்ளே புகுந்து புகுந்து புகுந்து, ஒவ்வொரு அக்ஷரத்தையும் பார்த்து வியாக்யானம் பண்ணுவார். ராமாயணத்தில் இந்த

பிரதிகிருதமான ஒரு குழந்தையிடத்திலே எத்தனை ஈடுபடுகிறோம் நாம்!

ராமனிடமோ எந்த அப்பழுக்கோ, குறையோ கிடையாது. அவதார காலத்திலும் சுத்த சாத்விகமயனாகவே, எந்தக் குறையு மில்லாமல், அப்ராகிருதமான திவ்ய மங்கள ஸ்வரூபமாக வந்து அவதரிக்கிறான் பரமாத்மா.

'அந்த வடிவழகை மறவாதார் பிற வாதாரே!' என்றார் ஆழ்வார்.

அவனை மறக்காமல் ஹ்ருதயத்திலே தரிக்கக்கூடியவர்கள் மறுபடி பிறப்பார்களா இந்த உலகத்திலே!

அவ்வளவு சுகந்தங்களுக்கும் இருப்பிடம் அவன்.

ரஸோவைஸ: என்கிறது உபநிஷத். ரஸமாக இருப்பவன் அவன்.

சாந்தோக்ய உபநிஷத்தில் எண் குணத்தவன் என்று வகைப்படுத்தி, அதிலே சர்வ கந்த: சர்வரஸ : என்று சொல்லப்பட்டிருக்கிறது.

சர்வ சுகந்தங்களுக்கும் இருப்பிடமானவன், சர்வ ரஸத்துக்கும் இருப்பிடமானவன். அவதார காலத்திலேயும் அப்படியே இருக்கிறான்.

அதனால்தான் விச்வாமித்ரர் அவன் வடிவழகைக் கண்டு மயங்கி ஆனந்தப்படுகிறார்.

அதனால்தான் நிர்மலன், நிமலன், விமலன் என்று ஆழ்வார் அவனைக் கொண்டாடுகிறார்.

அதனால்தான் இங்கேயும் 'நிர்மலானந்த கல்யாண நிதயே' என்று சொல்லப்பட்டது.

நிர்மலமான, அனந்த - அனந்த என்றால் முடிவில்லாத என்று அர்த்தம். முடிவில்லாததோர் எழில் என்று இங்கே பொருளாகிறது. அவனுடைய அழகுக்கு முடிவு என்பதே கிடையாது. அப்படிப்பட்ட விசேஷ அழகுடையவன். அப்படிப்பட்ட அழகுடைய, எல்லா கல்யாண குணங்களுக்கும் நிதியான, பரமநிதியாய், க்ஷேமநிதியாய் இருக்கக்கூடியவன் பகவான்.

உபாசிப்பதற்கு ரமணீயமான மூர்த்தி. கண்ணை மூடிக் கொண்டு தியானம் பண்ண வேண்டுமானால் அழகான தோற்றம் உள்ளே தெரியும்.

குழந்தை த்ருவனுக்கு நாரதர் உபதேசம் பண்ணுகிறார் : அழகான, உயர்ந்த, பட்டு பீதாம்பரம் அணிந்தவன். சங்கு சக்ராதிகளை தரித்திருப்பவன். தாமரைப் புஷ்பம்

## அருள்வாக்கு

**சா**தாரணமாக, பத்துப் பேருக்கு, நூறு பேருக்கு அன்னதானம் செய்கிற ஒரு நல்ல ஜீவனின் முகத்தைப் பார்த்தால் அதில் எத்தனை அன்பு சொட்டுகிறது? அன்னதானம் செய்து, பலர் வயிறாரச் சாப்பிட்டு சந்தோஷப்படுகிறபோது, அந்த அன்னதாதாவின் சந்தோஷத்தைப் பாருங்கள். அந்த சந்தோஷத்தில் அவன் முகத்தில் எவ்வளவு அன்பு சொட்டுகிறது? சாப்பிடுகிறவனை விடச் சாப்பாடு போட்டவனுக்குத்தான் அதிக ஆனந்தம் இருக்கிறது. ஒரு பத்துப் பேர் அல்லது நூறு பேருக்கு மட்டும் ஒரே ஒரு வேளை சோறு போடுகிறவனிடமே இத்தனை அன்பும் ஆனந்தமும் இருக்கின்றன. மகா

போன்ற முகமண்டலம் படைத்தவன். விசாலமான நேத்திரம்; கம்புக்ரீவம், உயர்ந்த குழைக்கற்றை...

அவனைப் பார்த்து ஆழ்வார் ஆச்சர்யப்படுகிறார் :

முடிச்சோதியால் உனது முகச்சோதி
மலர்ந்ததுவோ
அடிச்சோதி நீ நின்ற தாமரையாய்
அலர்ந்ததுவோ!

எம்பெருமானுடைய திருவடித் தாமரை என்று சொல்கிறோம். 'முடிச்சோதியால் உன் முகச்சோதி மலர்ந்ததா?' என்றால் 'முடியிலே இருக்கிற காந்தி, முகத்திலே தெரிந்ததோ?' என்று கேட்கிறார்.

'உன் திருவடியில் இருக்கிற காந்தி கீழே தெரிகிறதே - தாமரை புஷ்பத்தின் காந்தியாகத் தெரிகிறதே!' என்கிறார்.

எங்கும் தாமரைக்காடு பரமாத்மா!

'கருமுகில் தாமரைக்காடு பூத்துநீடு...'

என்று கம்பராமாயணத்திலே வர்ணிக்கிறபோது, 'தாமரைக்காடு பூத்து நீடு' என்றார். பகவானுடைய நேத்திரம் தாமரை, அதர பல்லவம் தாமரை, ஹஸ்தம் தாமரை, திருவடி தாமரை... - ஒரு பெரிய தாமரைக் காடு பரமாத்மா!

மஹாலக்ஷ்மி எங்கே வாஸம் பண்ணுகிறாள் என்றால், பத்மவனாலயத்தில் - பத்மவனத்தில் வாஸம் பண்ணுகிறாள்.

பத்மவனம் என்றால் வேறெங்கும் இல்லை; பகவானுடைய திருமேனியே பத்மவனம்தான். அவனுடைய வக்ஷஸ்

பாபங்களைச் செய்து – காரியத்தில் செய்யாவிட்டாலும், மனசினால் மகா பாபங்களை நினைத்து, ஒருவேளை சோறு கிடைக்கக் கூட யோக்கியதையில்லாத நம் இத்தனை பேருக்கும், கோடாநு கோடி ஜீவன்களுக்கும், கல்பகோடி காலமாகச் சோறு போட்டுக் கொண்டிருக்கிற ஒருத்தி அன்னபூரணேசுவரியான அம்பாள்தான். அவளுடைய அன்பையும், அதனால் உண்டான ஆனந்த ஸ்வரூபத்தையும் நம்மால் கற்பனை செய்து கூடப் பார்க்க முடியாது. அம்பாள் ஸௌந்தர்ய ஸ்வரூபம் என்கிறார்கள். அவளைப் பற்றி 'ஸௌந்தர்ய லஹரி' என்றே ஆசார்யாள்



ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். இத்தனை ஸௌந்தர்யம், லாவண்யம், அவளுக்கு எப்படி வந்தது என்றால், அன்புதான் அழகாகிறது. காருண்யம்தான் லாவண்யம். பாக்கி சரீர அழகு ஓர் அழகல்ல. கொஞ்சம் கோபம் வந்தால், துளி ஜ்வரம் வந்தால் சரீர அழகு போய் விடுகிறது. அம்பாளோ நிரந்தரமான கருணாமூர்த்தியாக எப்போதும் லாவண்யமாக இருக்கிறாள். எந்த பக்தருக்கு எந்த ரூபத்தில் மனசு ஈடுபடுமோ, அந்த ரூபத்தில் வந்து அருள் செய்வதற்காகப் பல ரூபங்கள் எடுத்துக் கொண்டிருக்கிறாள்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

தலத்தில் உறைகிறாள் மஹாலக்ஷ்மி. ஆகையினால், அவளுக்கு பத்மவாஸினி என்று பெயர்.

இவ்வாறு எம்பெருமானுடைய திருமேனிதான் தாமரைக்காடாகப் பிரகாசிக்கிறது. அப்படிப்பட்ட, உயர்ந்த கல்யாண குணங்கள் அவன் திருமேனியின் குணங்கள் – அப்ராக்ருதமான திவ்ய மங்கள விக்ரஹம்.

முக்கியமாக ரூபம் வேறு, ஸ்வரூபம் வேறு என்பதை நாம் தெரிந்து கொள்ள வேண்டும்.

இதெல்லாம் பகவத் ஸ்வரூபம் – மலை, மடு, ஆறு, கடல், நீர், ஆகாசம் – இதெல்லாம் பகவானுடைய ரூபம் என்று சொல்லக் கூடாது. பகவானுடைய ஸ்வரூபம் என்று இவற்றைச் சொல்ல வேண்டும். இது தவிர, பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹம், அழகிய திருமேனி – அது அவன் ரூபம்.

ஸ்வரூப ரூப குண விபவைச்வர்ய
சீலாஞ்சனவதிகா!

– ரூபம் என்பது, சங்க சக்ராதிகளுடன், பக்தர்கள் அனுபவிப்பதற்காக அழகான தோற்றத்துடன் பகவான் தருகிற காட்சி.

ஜிதந்தா ஸ்தோத்திரம் என்று ஒரு ஸ்தோத்திரம். பாஞ்சராத்ர ஆகமத்திலே சொல்லப்பட்ட ஸ்தோத்திரம் அது. கோயிலில் அர்ச்சகர்களாக இருப்பவர்கள் நித்யம் சொல்ல வேண்டிய ஸ்தோத்திரம் இது. பகவான் எதிரிலே சொல்ல வேண்டும். அந்த ஸ்தோத்திரத்தைச் சொல்லவில்லையானால், அந்தக் கோயிலில் திருவாராதனை சரியாக நடைபெறவில்லை என்று அர்த்தம். அர்ச்சகராக இருக்கிறவர்கள் இந்த ஸ்தோத்திரத்தைக் கட்டாயம் சொல்ல வேண்டும்.

இந்த ஜிதந்தா ஸ்தோத்திரம் என்ன சொல்கிறது என்றால், 'அவனுக்கே ஜெயம்' என்று சொல்கிறது. நாமெல்லாம் அவனிடத்திலே தோற்று நிற்கிறோம். பகவானுக்கே 'ஜெய ஜெய' என்று சொல்லவேண்டும். அவன்தான் எல்லாவற்றையும் ஜெயித்து நிற்கிறான்.

இந்த ஜிதந்தா ஸ்தோத்திரத்தில் ஒரு முக்கியமான கட்டம் :

– 'அவனுக்கு ரூபம் கிடையாது; அவனுக்கு ஆயுதங்கள் கிடையாது; அவனுக்கு ஆகாரம் கிடையாது...' என்கிறது ஸ்தோத்திரம்!

இத்தனை நேரம் நாம் சொன்னது மொத்தம் ரூபத்தைப் பற்றித்தான்! நல்ல ரூபம் உண்டு; நிர்மலானந்த ரூபம், ரமணீயமான ரூபம் என்றெல்லாம் சொல்லியிருக்கிறது.

அப்படியிருக்கும்போது, அவனுக்கு ரூபமே கிடையாது என்ற ஸ்தோத்திரம், அதையும் தினமும் பகவானுக்கெதிரில் சொல்ல வேண்டும் என்றால், அவனுக்கு ரூபம் உண்டா இல்லையா? ஆயுதம் உண்டா இல்லையா? இல்லை என்று சொன்னால் அப்படிச் சொன்னதனுடைய தாத்பர்யம் என்ன?

(தொடரும்)

*சிமி கரேவாலின் ''ராந்தெவூ'' நிகழ்ச்சி (Rendezvouh) ஒரு மைல் கல்! அந்த மென்மையான புன்னகையும் இவரை சின்னத் திரையின் ''எவர் க்ரீன்'' ஸாரி 'எவர் ஒயிட்' ஸ்டாராக முத்திரை குத்தி விட்டன.*

*இவரது மலபார்ஹில் இல்லத்தில் இவரைச் சந்தித்த போது, வரவேற்பறையின் வெண்மையான சலவைக் கல் யானைகள் தாங்கி நிற்கும் டீபாய்களும், சயனித்திருக்கும் புத்தரும், சலனமற்றிருக்கும் சிறுத்தையும் சிந்தையைக் கவர்கையில், குலைநடுங்க வைக்கும் ஒரு சத்தம் – நம்மைப் பார்த்து ஏகமாக சந்தோஷித்து, வால்களை ஆட்டி, குலைத்து, சுற்றிச் சுற்றி வந்து, முகம் தேய்த்து, மூன்று வெள்ளைப் பொமரேனியன்கள் ஒரு வழி பண்ணி விட்டன! ஒருவழியாக 'லேடி இன் ஒயிட்' வந்து, அவற்றை வெளியே தள்ளி விட்டு, பேசத் துவங்கினார். கதவுக்கு வெளியே அவை 'வள்'ளிக் கொண்டிருக்க, நாங்கள் பேசியதிலிருந்து...*

**கேள்வி** : பேட்டி எடுப்பவரின் உலகத்துடன் உங்களால் எப்படி ஐக்கியமாக முடிகிறது? அவர்களுடன் சிரித்து, அழுது, உணர்ச்சிவசப்பட்டு...

**பதில்** : நான் இயற்கையிலேயே அப்படிப்பட்டவள்தான்; 'ஷோ'வுக்காக ஷோ பண்ணவில்லை; சின்ன வயதிலிருந்தே, பிறரின் இன்ப துன்பங்களில் ஆழ்ந்து அமிழ்ந்து விடும் குணம் எனக்கு. அதன் தொடர்ச்சிதான் 'ராந்தவூ'!

**கேள்வி** : வெவ்வேறு துறையைச் சார்ந்தவர்களை பேட்டி காண்கிறீர்கள்; ஆனால் எப்போதும் அவர்கள் சொந்த வாழ்க்கையையே துருவுவது ஏன்?

**பதில்** : அவர்களது தொழிலுலக வாழ்க்கையை வெளிச்சமிடத்தான் பத்திரிகைகளும் செய்தித்தாள்களும் இருக்கின்றனவே? ஒரு பெரிய பிஸினஸ் சக்கரவர்த்தியாக நீங்கள் ஒருவரை அறிந்திருக்கலாம். ஆனால் அவர் எப்படிப்பட்ட மனிதர், அவர் உள்ளத்தில் புதைந்து கிடக்கும் எண்ணங்கள், நிகழ்வுகள் என்ன, அதன் பிரதிபலிப்புகள் எத்தகையவை என்பதை ஆராய்வதற்கு என் நிகழ்ச்சி மேடை அமைத்துத் தருகிறது.

**கேள்வி** : மற்றவர்கள் ஆழ்மனத்தில் புதைந்திருப்பவற்றை வெளிக்கொணர்வதில் உங்களுக்கிருக்கும் வல்லமை, யார் விஷயத்தில் உச்சத்தைத் தொட்டது?

**பதில்** : ஐயையோ... நான் யாரையும் வற்புறுத்தி, ''கன்ஃபெஷனுக்கு'' ஆட்படுத்துவதில்லை; பொதுவாக நான் பேட்டி எடுக்கும் நபரைப் பற்றி முழு ஆராய்ச்சியே செய்து வைத்திருப்பேன். ஆனால், ரவிசங்கர் – சுகன்யா விஷயத்தில், நீங்கள் குறிப்பிடும் ''உச்சத்''தை தொட முடிந்தது. எனக்குத்



தெரிந்ததைக் காட்டிலும் மிக அதிகமாக; மனம் திறந்து, நிறைய விஷயங்களைத் தெரிவித்தார்கள்.

**கேள்வி** : பேனசிர் புட்டோ எளிதில் கிடைத்தாரா? அவருக்கென்று பாகிஸ்தான் சென்றிருந்தீர்களா?

**பதில்** : பேனசிர் ஏற்கெனவே என் நிகழ்ச்சிகளைப் பார்த்திருந்ததால், எளிதில் சம்மதித்து விட்டார். இந்த பேட்டிக்கென்று பிரத்யேகமாக அவர் துபாய் வந்திருந்தார். எங்கள் குழுவும் துபாய் சென்றது; பேனசிர் என்னை ஆட்கொண்ட அதி அற்புதமான பெண்மணி; நிகழ்ச்சியும் மிக அருமையாக அமைந்து, நிரம்ப பாராட்டுதல்களைப் பெற்றது.

**கேள்வி** : ஜெயலலிதாவை பேட்டி

கண்ட அனுபவம் பற்றி...

பதில் : முதலில் கொஞ்சம் பயந்தேன், பேட்டிக்கு முன் ஐந்து நிமிடங்கள்தான் பேசியிருப்போம்; மற்றபடி பத்திரிகைகளில் கேள்விப்பட்ட அளவுதான் அவரைப் பற்றித் தெரியும். ஆனால் பேட்டியின் போது அவை எவ்வளவு தவறானவை என்பது தெரியவந்தது. ஜெயலலிதா மிகவும் நளினமானவர்; இனிமையானவர்; புத்திசாலித்தனமாகவும் சரளமாகவும் பேசினார். பேட்டி முடிந்ததும் எங்கள் யூனிட்டுக்கே ஒரு டீ பார்ட்டி அளித்தார். ஜெயலலிதா என்னை மிகவும் கவர்ந்து விட்டார். அவரை மறுமுறை சந்திக்க ஆவல்தான். சொன்னால் நம்ப மாட்டீர்கள். நிகழ்ச்சி டெலிகாஸ்ட் ஆகி ஒரு செகண்ட் கூட முடிந்திருக்காது. எல்லா பிரபல பத்திரிகைகள், செய்தித்தாள்களிலிருந்தும் என்னைப் பாராட்டி ஃபோன் கால்கள் வந்தவண்ணமிருந்தன.

**கேள்வி :** சுஷ்மிதாவுடன் 'விக்ரம் பட்'டையும் அழைத்திருந்தது சங்கடமாயில்லையா?

**பதில் :** இல்லை. ஏனென்றால் விக்ரம் ஏற்கெனவே முதல் மனைவியை விவாகரத்து செய்து ஆறு மாதமாகியிருந்தது; அப்போது சுஷ்மிதாவுடன்தான் வாழ்ந்து கொண்டிருந்தார். பிறருடைய வாழ்க்கையில் முடிவெடுக்கவோ, தீர்ப்பு வழங்கவோ நான் யார்? உள்ளதை உள்ளபடி உங்கள் முன்வைப்பதுதான் என் வேலை.

**கேள்வி:** உங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளலாமா?

# "ஜெயலலிதாவை மீண்டும் பார்க்க ஆசை!"



பதில் : என் தந்தை ஒரு ப்ரிகேடியர். எனக்கு ஐந்து வயதாகும் போது நாங்கள் லண்டனுக்கு குடிபெயர்ந்தோம். படித்ததெல்லாம் அங்கேதான்; 15 வயதில், நடிகையாக வேண்டுமென்ற ஆசையைத் தெரிவித்தேன்; வீடு போர்க்களமாயிற்று; அப்போதெல்லாம் இந்தியாவைப் பற்றி, அதன் சரித்திரத்தைப் பற்றிக் கேட்கவே பரவசமாயிருக்கும். காந்தியின் உண்ணாவிரதத்தைப் பற்றிக் கேட்டிருந்ததால், நானும் நடிகையாக வேண்டுமென உண்ணாவிரதமிருந்தேன், வென்றேன். லண்டனிலிருந்தால், 'இந்தியன்' என்ற காரணத்தால் அதிக வாய்ப்புகள் கிடைக்காது என்பதால், நானும் என் தாயும் இந்தியா வந்தோம்; அப்பாவும் அக்காவும் அங்கேயே இருந்தனர். இங்கே வந்து 65 படங்கள் செய்தும் திருப்தியில்லை. நடிப்பில் டைரக்டர் ஆட்டுவிக்கும்படி தானே இயங்க வேண்டும்? அதனால் ஸ்க்ரிப்ட் எழுத ஆரம்பித்தேன்; பிறகு நானே டைரக்ட் செய்யவும் ஆரம்பித்தேன். நானே தயாரிக்கவும் துவங்கிய பிறகுதான் பூரண மனநிறைவு ஏற்பட்டது. நான் தயாரித்த ஃபீச்சர் ஃபிலிமுக்குத்தான் டீவியில் முதன் முதலாக ஸ்பான்சர்கள் கிடைத்தனர்!

**கேள்வி :** ராஜீவ் காந்தி பற்றி ஒரு டாகுமெண்டரி செய்தீர்கள் இல்லையா?

**பதில் :** ஆமாம்; இன்றளவும் நெ.1 ஸப்தார் ஜங்கிற்குச் சென்றால் (இந்திரா காந்தி மெமோரியல்) ஹாலில் ராஜீவின் பெரிய உருவப் படங்கள் நிறைய மாட்டியிருக்கும். கீழே, அவர் பேசியதைப் பொறித்து, "ஸிமி கரேவாலுடனான பேட்டியில் சொன்னது..." என ஆங்காங்கே எழுதப் பட்டிருக்கும். இந்த நினைவாலயம் இன்னும் பல நூற்றாண்டுகளுக்கு இருக்கும்; கூடவே என் பெயரும் நிற்கும் என்பது அளவிட முடியாத மகிழ்ச்சியையும் பெருமிதத்தையும் தருகிறது.

**கேள்வி :** திருமணத்தில் நம்பிக்கை உண்டா?

**பதில் :** சில பெண்களால் கணவனைச் சார்ந்துதான் வாழ முடியும்; அப்படிப்பட்ட பெண்களுக்கு, திருமணம் தேவை; நான் ஒருமுறை திருமணம் செய்து கொண்டு விவாகரத்து செய்தவள். அதன் பிறகு திருமணம் செய்து கொள்ளும் எண்ணமே எழவில்லை. குழந்தைகள் வேண்டும் என விரும்புபவர்கள்தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். எனக்கு அந்த ஆசை எதுவுமில்லை; மேலும் சண்டை போடும் பெற்றோரைக் காட்டிலும், 'ஸிங்கிள் பேரண்டே' மேல்!

**கேள்வி :** ஒரு குழந்தையைத் தத்து எடுத்துக் கொள்ள வேண்டும் என்று கூட நினைத்ததில்லையா?

**பதில் :** ஒருமுறை விஜயா என்ற பெண்ணை தத்தெடுக்க விரும்பி, ஃபார்மாலிடீஸெல்லாம் முடிந்தபின், கடைசியாக செய்தித்தாள்களில் விளம்பரம் செய்தேன். ஃபோட்டோவைப் பார்த்து விட்டு, ஆந்திராவிலிருந்து அந்தக் குழந்தையின் அசல் பெற்றோரே வந்து, அவளை அழைத்துச் சென்று விட்டனர். பிராப்தமில்லை என விட்டு விட்டேன்.

**கேள்வி :** எந்த அரசியல்வாதியையாவது உங்கள் நிகழ்ச்சியில் அழைக்க விருப்பமா?

**பதில் :** சந்திரபாபு நாயுடு பிரதமராகும் நாளுக்கென ஆசையோடு காத்திருக்கிறேன். அவரால் இந்தியாவை மாற்றியமைக்க முடியும் என நம்புகிறேன். அந்நாளில் நான் உயிரோடிருந்தால், நிச்சயம் நாயுடுவை பேட்டி எடுப்பேன்.

**கேள்வி :** உங்கள் வார்ட்ரோபிலிருப்பது...

**பதில் :** வெள்ளை உடைகள் மட்டுமே; எனக்கு வெள்ளை, க்ரீம், பீஜ் போன்ற லைட் ஷேட்கள்தான் பிடிக்கும்.

**கேள்வி :** டீ.வியில் விரும்பிப் பார்ப்பது?

**பதில் :** பிபிசியின் "Hard talk" நிகழ்ச்சி.

**கேள்வி :** எதிர்காலத் திட்டம்?

**பதில் :** இன்னும் நிறைய ப்ரோக்ராம்கள் செய்யத் திட்டமிட்டிருக்கிறேன். தமிழ் ரசிகர்களும் பார்த்து ரசிக்க வேண்டும் என்பது என் ஆசை!

— ஜெ.ஆர்.

---



**''புதிய பொருளாதாரக் கொள்கையை ஆதரிக்க வேண்டியதுதான்; அதுக்காக அநியாயத்திற்கு நம்ம தலைவர் அறிக்கை விட்டிருக்கக் கூடாது!''**

**''என்ன அறிக்கைங்க?''**

**''விரைவில் அரசாங்கமே தனியார் மயமாக்கப்படுமாம்!''**

**– புளியரை கணேசன்**

**''உங்க பையன் என்ன பண்றான்?''**

**''மாதவரம் டைரில ஒர்க் பண்றான்.''**

**''அப்படியா, புது வருஷ டைரி ஒண்ணு எனக்குக் கொடுக்கச் சொல்லுங்களேன்!''**

**– டி.என். பாலகிருஷ்ணன்**



# அது என்ன TRP?

**TRP** ரேட்டிங் அடிப்படையில்தான் தனியார் சானல்களுக்கு விளம்பரங்கள் கிடைக்கின்றன. அதாவது, எந்த நிகழ்ச்சி, எந்த மாதிரி ரசிகர்களைச் சென்று சேருகிறது, எந்த சானலுக்கு மக்கள் மத்தியில் மவுசு, எந்த நிகழ்ச்சியில் விளம்பரம் செய்தால் உபயோகம் போன்ற விஷயங்களையெல்லாம், விளம்பர தாரர்கள் இந்த TRP ரேட்டிங்கை அடிப்படை யாகக் கொண்டே தீர்மானிக்கிறார்கள்.

டெலிவிஷன் ரேட்டிங் பாயின்ட் என்கிற இந்த ஜோலியை இந்தியாவில் அரசு அங்கீகாரம் பெற்ற இரு நிறுவனங்கள் செய் கின்றன. TAM, INTAM என்று அவற்றுக்குப் பெயர்.

எப்படி இவர்கள் மதிப்பிடுகிறார்கள்?

ஒவ்வொரு மெட்ரோ நகரத்திலும் 250 முதல் ஐந் நூறு வீடுகளை இவர்கள் முதலில் தேர்ந்தெடுக் கிறார்கள். தேர்ந்தெடுக்கும் போதே அவ்வீட்டின் மாத வருமான அடிப்படையில் A,B,C,D என நான்கு பிரிவு களை நிர்ணயித்து விடு கிறார்கள். கல்வித் தகுதி, சமூக அந்தஸ்து, வாங்கும் சக்தி, பொழுதுபோக்கு விருப்பங்கள் என எல்லா அம்சங்களையும் வருமான விவரம் மூலமே தெரிந்துகொண்டு விடும் இவர்கள், அந்த 500 வீடுகளில் உள்ள டீவிக்களுக்கு, வீட்டு உரிமை யாளர் அனுமதியுடன் ஒரு மீட்டர் பொருத்தி விடுவார்கள்.

குறிப்பிட்ட காலத்துக்கு அவ்வீட்டில் டீவியை ஆன் பண்ணும்போதெல்லாம் மீட்டரும் விழித்துக் கொள்ளும்.

மக்கள் என்ன சானலை அதிக முறை பார்க்கிறார்கள், எந்த நிகழ்ச்சியை எத்தனை முறை, எத்தனை நேரம் பார்க்கிறார்கள், எதை உடனே மாற்றி விடுகிறார்கள், எந்த நேரத்தில் பார்க்கிறார்கள் என்பன போன்ற விவரங் களை அந்த டீவி மீட்டர்கள் பதிவுசெய்து கொடுத்து விடும்.





நாடு முழுவதும் இப்படிப் பதிவாகும் தகவல்களைக் கம்ப் யூட்டரில் செலுத்தி, சானல் வாரியாக, நிகழ்ச்சி வாரி யாக பார்வையாளர் களின் எண்ணிக்கை யைக் கணக்கிட்டுப் பட்டியல் தருகின்றன இந்நிறுவனங்கள்.

இதனடிப்படை யில் எந்த நிகழ்ச் சியில் விளம்பரம் செய்தால் நமக்கு உப யோகம் என்பதை நிறு வனங்கள் தீர்மானம் செய்கின்றன.





உதாரணமாக, நடுத்தர வருமானமுள்ள குடும்பங்களின் பெண்கள், குடும்ப சீரியல்கள், சமையல் நிகழ்ச்சிகள் போன்றவற்றை அதிகம் பார்ப்பதாகத் தெரிய வந்தால், பிரெட் கம்பெனிகள், வீட்டு உபயோகப் பொருள்கள் தயாரிக்கும் நிறுவனங்கள், குழந்தை வளர்ப்புச் சாதன நிறுவனங்கள் போன்றவை அந் நிகழ்ச்சிகளுக்குத் தம் விளம்பரங்களைத் தரும்.

அதிக வருமானமுள்ள குடும்பங்கள், 'A' பிரிவில் அடங்குவோர் செய்தி, சினிமா தொடர்பான நிகழ்ச்சிகள் போன்றவற்றைப் பார்க்கிறார்களா? அத்தகைய நிகழ்ச்சிகளில் குளிர் பானங்கள், ரெடிமேட் ஆடைகள், பீமபுஷ்டி மாத்திரைகள், கார் முதல் சைக்கிள் வரை தயாரிப்போர் - ஆகியோர் விளம்பரம் செய்வார்கள்.

இதெல்லாம் தொடர் நிகழ்ச்சிகளுக்குத்தான். சினிமா நேரம் என்றால் அதற்கான ரேட்டிங்கே வேறு.

B, C, D பிரிவில் அடங்கும் பார்வையாளர்கள் மத்தியில் விஜய்காந்த், சரத்குமார் போன்றோர் படங்களுக்கே அதிக மவுசு. இத்தகைய நடிகர்களின் படம் ஒளிபரப்பாவதென்றால் விளம்பரங்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கும். பார்வையாளர்கள் அதிகமாயிற்றே!

இதுவே அடுத்தகட்ட நடிகர்களென்றால் அதிக விளம்பரத் தொந்தரவின்றிப் பார்க்கலாம்.

ரஜினி, கமல் படங்கள் இந்த வகையில் சேராது.

இந்த ரேட்டிங் நிறுவனங்களுக்கு சானல்கள் மாதாந்திர சந்தா கட்டி விட வேண்டும். பட்டியல் வந்து விடும். டீவி மீட்டர் பொருத்தப்படும் வீடுகளுக்கு, 'சிரமப்படுத்துவதற்கு' காம்பன்ஸேஷனாக ஒரு தொகையை அந்நிறுவனமே அளித்துவிடும். (அதையெல்லாம் சேர்த்துத்தான் சானல்காரர்களிடம் சந்தா வசூலிக்கிறார்கள்.)

"இந்த ரசிகருக்கு இந்த சானல்தான் பிடிக்கும் என்கிற காலமெல்லாம் மலையேறி விட்டது. இப்போது நிகழ்ச்சிகளின் தரத்தை வைத்தே சானல்களைத் தேர்ந்தெடுக்கிறார்கள். டீவியை விட ரிமோட் அதிகம் இயங்குகிறது!" என்கிறார் ஒரு தனியார் தொலைக்காட்சியின் தலைமை நிர்வாகி.

டாக்-ஷோக்களுக்குப் பார்வையாளர்கள் அதிகமில்லையென்பதாலும் டெலிபிலிம்களை ரசிகர்கள் சினிமா அளவுக்கு மதிப்பதில்லை என்பதாலும் அவை இப்போதெல்லாம் TRP ரேட்டிங்கில் இடம்பெறுவதில்லை என்று பல தொலைக்காட்சிப் புள்ளிகள் வருத்தப்பட்டார்கள்.

— ஸ்ரீராம்



**விடிய விடிய ராமாயணம் கேட்டு...**

**போலியோ சொட்டு மருந்து விழிப்புணர்வு முகாம் ஒன்றுக்கு தன்னார்வத் தொண்டர்களை அழைத்திருந்தார்கள். நானும் சென்றிருந்தேன். முகாமின் தலைமை மருத்துவர் போலியோ சொட்டு மருந்தின் அவசியம் பற்றியும், அது இரண்டு சொட்டுகள் ஏன் போடப்பட வேண்டும் என்பது பற்றியும் விரிவாக விளக்கினார். பின் தமது விளக்கவுரையில் திருப்தியடைந்தவராக, கூட்டத்தினரைப் பார்த்துக் கேட்டார், ''யாருக்காவது ஏதாவது சந்தேகம் இருக்கிறதா?'' சிறிது நேர அமைதிக்குப்பின் முன் வரிசையிலிருந்த ஒருவர் எழுந்து ''சொட்டு மருந்து இரண்டு காதிலும் போடப்பட வேண்டுமா?'' என்று கேட்டார்.**

**– எஸ். நாராயணன்**

# அசத்தல் அறுவடை டி.விக்கு

''நல்ல டி.வி. வாங்க வேண்டும் என்று நினைத்து மோசமான பிராண்ட் டி.வி. வாங்கிச் செல்வோர் 60 சதவீதம் இருப்பார்கள்'' என்கிறார் ஒரு பிரபல நிறுவனத்தின் ஸேல்ஸ்மேன்!

சமீபத்தில் ஒரு நிறுவனம் கொஞ்சம் சகாய விலைக்கு ஒரு மாடலை விற்பனைக்குக் கொண்டு வந்தது. ஏகப்பட்ட ஸேல்ஸ். ஆனால் அறுபது சதவீதம் கஸ்டமர்களிடமிருந்து ஒரே புகார்கள். அந்த மாடல் இப்போது நிறுத்தப்பட்டது. வேடிக்கை என்னவென்றால் அதே மாடலை வேறொரு மாடலாக அமர்க்களமாக விளம்பரம் செய்து விற்றுக் கொண்டிருக்கிறார்கள்'' என்றார் அவர்.

''இது போன்று அடிக்கடி நிகழ்கிறது'' என்கிறார், பிலிப்ஸ் நிறுவனத்தின் நுகர்வோர் துறை மேலாளரான ஆனி (Annie) சுந்தர்ராஜ்.

''தெளிவான படம்; நல்ல ஒலி அமைப்பு, விற்பனைக்கப்புறம் கிடைக்கும் சர்வீஸ் வசதிகள்'' ஆகியவைகளைப் பார்த்துத்தான் ஒருவர் தொலைக்காட்சிப் பெட்டி வாங்குவதைப் பற்றி முடிவு செய்ய வேண்டும்'' என்கிறார் ஆனி.

''வாங்குவதற்கு முன்னால் கடையில் போட்டுப் பார்க்கும்போது பளிச்சென்று தெரியும் தனியார் தொலைக்காட்சி சானல்கள், வீட்டிற்கு எடுத்து வந்தபின், 'ஆட்டம்' கொடுப்பதற்கு கேபிள் டி.வியின் தரமற்ற ஒளிபரப்பு கூட காரணமாக இருக்கலாம். அதற்காக உடனடியாக தொலைக்காட்சிப் பெட்டி தயாரிப்பு நிறுவனத்தைக் குறை சொல்லவும் கூடாது'' என்கிறார் அவர்.

Special features என்று சொல்லப்படும் சிறப்பம்சங்கள் இப்போது எல்லா டி.வி.யிலும் இருக்கிறதாம். குறிப்பாக அடல்ட்ஸ் ஒன்லி சேனலைக் குழந்தைகளுக்குத் தெரியாமல் லாக் செய்வதா, வி.ஸிடி போடும் வசதி, ஒலி, ஒளி ஆகியவற்றை நம்முடைய ரசனைக்கேற்ப மாற்றிக் கொள்வது என்று பல சிறப்பம்சங்கள். அறைக்குள் விழும் வெளிச்சம், டி.வி. பெட்டியைச் சுற்றி இருக்கும் வெளிச்சம் ஆகியவற்றுக்கு ஏற்ப ஒளியை வழங்கும் பிக்சர் டியூப்கள், ஒரு சேனலில் ஒலியை கட்டுப்படுத்தினால் அனைத்துக்கும் பொருந்தும் வசதி... என்று பல வசதிகள் வந்து விட்டன. இவையெல்லாவற்றையும் நுகர்வோர் பயன்படுத்துகின்றனரா என்பது அடுத்த விஷயம்!

''மாவுக்கேத்த பணியாரம்'' என்கிறார் 'ஒனிடா' ரங்கராஜன்.

''ஒரு நிறுவனத்தின் ஃபர்பாமன்ஸ் அதோட ரெபுடேஷன் ஆகியவை முக்கிய

மான விஷயங்கள். டீ.வி. என்பது வாங்குவோரின் சந்தை... ஏகப்பட்ட சாய்ஸ். எனவே நிறுவனங்களும் பலமாக விளம்பரம் செய்கின்றன என்றாலும் நுகர்வோரின் திருப்திகரமான விமர்சனங்கள்தான் விற்பனைக்கு முக்கிய காரணமாக இருக்கும்'' என்கிறார் அவர்.

''அக்கம் பக்கத்துல சொல்ற அபிப்ராயத்தை வைத்து முடிவு செய்வது கூடப் பல சமயங்களில் பொருந்தாது. இதெல்லாம் எலெக்ட்ரானிக் சமாசாரம். 1000 டீ.வியில் ஒரு டீ.வி. கொஞ்சம் குடைச்சல் கொடுக்க வாய்ப்பு இருக்கிறது. வாங்கும்போது நல்ல ஒலி, ஒளி அமைப்பைப் பார்த்து வாங்க வேண்டும். இப்போதெல்லாம் மக்கள் கொஞ்சம் விவரமாகவே இருக்காங்க. வசதியுள்ளவங்க சுலபமா முடிவெடுத்து எந்தக் குழப்பமும் இல்லாம வாங்கிட்டுப் போறாங்க'' என்கிறார் வஸந்த் அண்ட் கோவின் பொது மேலாளர் அந்தோணி.

''அது சரி. பழைய டீ.வி பெட்டிகளை வாங்கிக் கொண்டு எக்ஸ்சேஞ்சில் புதுசு கொடுக்கிறார்களே. பழையது என்ன ஆகிறது! கொஞ்சம் 'முலாம்' பூசப்பட்டு புதுசாகவே மீண்டும் வந்து விடுமா?''

# ஆந்திராவில் கிராக்கி!

''நோ... நோ.... பழைய டீ.வி. மார்க்கெட் என்பது ஒரு தனி மார்க்கெட். அந்த வியாபாரிகளும் நாங்களும் ஒருங்கிணைந்து வேலை செய்கிறோம், அவ்வளவுதான். வாங்கப்படும் பழைய டீ.வி. பெட்டிகள், பழுது பார்க்கப்பட்டு up country மார்க்கெட்டுக்கு 'second hand' என்று சொல்லியே தள்ளிவிடப்படுகின்றன. இதுபோன்ற பழைய டீ.விக்களுக்கு ஆந்திராவில் நல்ல கிராக்கி'' என்கிறார் அந்தோணி.




* நுகர்வோருக்கு நிறைய சாய்ஸ்...

**— ஸ்ரீநிவாசன்**

# இரணியன்

தஞ்சைப் பகுதியில் வாழ்ந்து மறைந்த ஒரு தீவிர கம்யூனிஸ்டின் வாழ்க்கையைக் கூடியவரை மிகைப் படுத்தாமல் படமாக்கும் முயற்சியில் கணிசமான வெற்றி கண்டிருக்கிறார் இயக்குநர் வின்சன்ட் செல்வா.

சமீப காலத்தில் சென்சார் இத்தனை குரூரமாகக் கைவைத்து விளையாடிய (தலைப்பு உட்பட - வாட்டா குடியே வெட்டுப்பட்டு விட்டது.) படம் இதைத் தவிர வேறில்லை. பல இடங்களில் வசனங்கள் வெட்டுப்பட்டு, வாயசைந்து காற்று வருகிறது. இதனை மீறி, படம் சொல்லும் செய்தி, அடித்தட்டு மக்கள் சுயமரியாதையை அடகு வைக்காமல் தன்மானமுடன் வாழவேண்டும் என்பது பற்றியது. அதற்கான போராட்டத்தில் தன் உயிரை இழந்த ஒரு தீவிரவாதி இரணியன்.

ஆங்கிலேய அதிகாரிகளுக்குக் குழையடித்து அதிகாரங்களையும் நிலங்களையும் பெற்றுக் கொள்ளும் ஜமீன், கிராமத்து மனிதர்களை, புழு பூச்சிகளாக மதித்து, ரத்தம் உறிவதை எதிர்க்கிறான் இரணியன். வன்முறையைத் தவிர வேறெந்த முறையிலும் தீர்வு காண முடியாது என்கிற முடிவுக்கு அவன் வருவதற்கு சித்தாந்தக் காரணங்கள் எதுவும் படத்தில் தரப்படவில்லை. இருப்பினும் ஜமீனின் வாரிசுகள் இருவரை பலி கொள்கிறான். அதே போன்றதொரு அரிவாள் வீச்சில் ஜமீந்தாரையும், கொன்று விடுவது பிரமாதமான காரியமில்லை. ஆனால், 'உன்னிடம் கைகட்டித் தலைகுனிந்து சேவகம் பார்த்த மக்கள், உன் முன்னால் தலைநிமிர்ந்து நடக்கச் 'செய்கிறேன் பார்' என்று சபதமெடுத்து விட்டதால், கதை தொடருகிறது. தமக்காகப் பாடுபடும் இரணியனை மக்கள் புரிந்து கொள்ளாமல் இறுதியில் கல்லால் அடித்து வீழ்த்துவதும் ஜமீந்தாரே துப்பாக்கியால் சுட்டு சாகடிப்பதுமான முடிவு மிக உருக்கமாக வந்துள்ளது.

ஆனால் இது தரும் மிக நேரடியான செய்தி என்ன? தனிமனிதத் தீவிரவாதம் வாழ்க்கைக்கும் உதவாது, வரலாறாகவும் ஆகாது என்பது. இதை முற்றிலுமாக மூடி மறைத்து, 'எனக்குப் பிறகு மக்கள் எழுச்சி கொள்வார்கள்' என்று இரணியன் பேசி, இறக்கிற இடத்தில்தான் சினிமாத்தனம் மேலோங்குவதுடன் படத்தின் நோக்கமும் பல்டி அடிக்கிறது.

இதனை மீறியும் இது ஒரு நல்ல படம் என்று சொல்லத் தோன்றுவதற்கான காரணம், இயல்பான, அதிக மிகைப்படுத்தலில்லாத திரைக்கதை. முதல் காட்சி தொடங்கி, இறுதி வரை ஒரே சீரான வேகத்தில் நகரும் திரைக்கதைகள் தமிழில் மிகக் குறைவு. அந்த வகையில் இது பாராட்டத்தக்க முயற்சி.

ஆனால், பிரதேச வாசனை அற்ற, மிகுந்த அலுப்பேற்படுத்தும்படியான, நீளநீளமான வசனங்கள் பெருங்குறை. மற்றபடி பாத்திரம் உணர்ந்து நடித்திருக்கும் ரகுவரன், முரளி, மீனா, வடிவேலு போன்றவர்களுக்கு இந்தப் படம் நிச்சயம் பெருந்திருப்தியளித்திருக்கும். ரசிகர்களுக்கு அத்திருப்தி கிடைக்காமல் போனதற்கான



காரணத்தை இயக்குநர் யோசிக்க வேண்டும். ஒரு வாழ்க்கையைப் படமாக்குவது சவால்கள் நிறைந்த காரியம். வாழ்க்கை ஒருபோதும் விறுவிறுப்பான திரைக்கதையால் மட்டும் சிறப்புறுவதில்லை. அறம் சார்ந்ததொரு நோக்கமும் அமைதி சார்ந்ததொரு நடைமுறையுமே அதன் சிறப்புக்கு எப்போதும் காரணமாகிறது.

**— ஔரங்கசீப்**



# Jyothy Laboratories Ltd.

## ''உஜாலாவின் உன்னத வெண்மை விஞ்ஞான ரீதியிலான சாதனை.''




**ஜோ**தி லேபின் ஆய்வுக் கூடத்தில் தொடர்ந்து நன்கு சோதிக்கப்பட்டு வெற்றிகரமாக நிரூபிக்கப்பட்ட உஜாலாவின இன்ஸ்டா வைட்னிங் சிஸ்டம் (I.W.S.)™ இது தண்ணீரில் உடனடியாகக் கரைவதோடு, துணிகளின் நுட்பமான நூலிழைகளிலும் ஆழ்ந்து ஊடுருவிவெண்மையின் வெளிச்சத்தை துணிகளில் உடனடியாய் வெளிக்கொணர்கிறது. துணிகள் மீண்டும் துவைக்கும்போது, அழுக்குடன் முழுவதும் வெளியே தள்ளப்பட்டு விடுகிறது. நாட்கள் பல ஆனாலும் துணிகளின் இயல்பான வண்ணம் மாறாமல் புதிது போலவே பாதுகாக்கிறது. ஸ்கின் இரிட்டேஷன்-ஒரல் டாக்சிசிடி சோதனைகளில் பாதுகாப்பானது என ஆதாரபூர்வமாக கண்டறியப்பட்ட தயாரிப்பு உஜாலா ஒன்றே.

**1983** முதல் அனேக கோடி உள்நாடு-வெளிநாடு வாடிக்கையாளர்களுக்கு முழுதிருப்தியை உஜாலா வழங்கிக் கொண்டிருக்கிறது. பாரத நாடெங்கும் பல மாநிலங்களில் உள்ள ஜோதி லேபின் விஞ்ஞான தொழில் நுட்ப மேன்மை மூலம் கடும் தரக்கட்டுப்பாடு முறைகளால் தயாரிக்கப்பட்டு ஒவ்வொரு உஜாலாவும் உங்களை அடைகிறது.

**வி**ஞ்ஞான ஆதாரமற்ற முறையில், இரசாயன நிறுவனங்கள் தயாரிக்கும், நூலிழைகளை பலவீனப்படுத்தும், வண்ணம் குறைக்கும் மூலப்பொருட்கள் ஏதும் இதில் இல்லை. தரங்குறைந்த, கலப்பட இரசாயனக் கலவைகள் உங்களின் துணிகளுக்கு சேதம் ஏற்படுத்த இடம் அளிக்காதீர்கள்.

உஜாலா என கேட்டு வாங்கும் போது விஞ்ஞானபூர்வமற்ற ஏதேனும் ஒரு போலி தயாரிப்பை நீங்கள் பெறவில்லை என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள்.




வெண்மையின் புதிய நிறம்

A product of Jyothy Laboratories Ltd.

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /99* Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka
Supplement to the Kalki issue Dated 12.12.99

## இதுவரை, மூட்டு வலியிலிருந்து (OSTEOARTHRITIS) நிவாரணமடைய, இரண்டே வாய்ப்புகள்தான் இருந்தன.





### ஆனால், புதிய

# GII அன்லோடர் எக்ஸ்பிரஸ் பிரேஸ்*

### அதை மாற்றிவிடும்

*அறிமுகம்!*
*ஒரு புதிய சிகிச்சை நிவாரணி!*
*இதனால்:*

- வலியிலிருந்து நிவாரணம்
- எளிய நடமாட்டம்
- சுகமான வாழ்க்கைத் தரம்



- 3 வழி செயல்திறன்
- டைனமிக் போர்ஸ் ஸ்டராப்பும், ஹின்ஜும் இணைந்தாற்போல் வேலை செய்து, பாதிக்கப்பட்ட பகுதியில் வலியை குறைக்கிறது

★ OSTEOARTHRITISனினால், சிறியதாக ஊனமுற்ற கால்களிலும் அணியலாம்

விவரங்களுக்கு: எழுதுங்கள்:

**GII Division, Nicholas Piramal India Ltd.,** Vinod House, Kasturchand Mills, Estate, 228 Senapathi Bapat Marg, Dadar (W), Mumbai - 400 028. Ph: 4312312 - 15. Fax: 4328412/4327531

GII, Division, Nicholas Piramal India Ltd., 55 IV Avenue, Ashok Nagar, Chennai - 600 083. Ph: 4853213, 4891139, Fax: 4853213

Braces readily available with : MAS Marketing, Bangalore. Ph: 6617950, Pager: 9628 816340, Mede systems, Coimbatore, Ph: 497272, Mobile: 9843014725, Hester Diagnostics P. Ltd, Mumbai, Ph: 2054170, 2012376, Orthocare Medical systems, Delhi, Ph:6422143, Mobile: 9811009307, Excel Marketing Corporation, Chennai - 4, Tel: 4971135, Mobile : 98410 99450

